

# அம்ருதா


Amrudha Tamil Monthly

Volume 18 Issue 10 May 2024 Rs.30
ஆண்டு 18 இதழ் 10 மே 2024 ரு.30


- ராஜேஷ் ராஜாமணி
- ச.சுப்பாராவ்
- சுரேஷ்குமார இந்திரஜித்
- விம் வெண்டர்ஸ்
- ராம் முரளி
- இந்திரா பார்த்தசாரதி
- பிரேம்
- நடேசன்
- பாவண்ணன்
- சந்தியா நடராஜன்
- கயல்

# இளையராஜா இசையில் சாதி எதிர்ப்பு அரசியல்

ஆண்டு 18 இதழ் 10



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

மே-2024 விலை ரூ. 30



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

# இந்த இதழில்...



# இளையராஜா இசையில் சாதி எதிர்ப்பு அரசியல்

**ராஜேஷ் ராஜாமணி**

**தமிழில்: ச. சுப்பாராவ்**

இளையராஜாவிற்கு பலபெயர்கள். சிலர், குறிப்பாக லண்டனின் ராயல் ஃபில்ஹார்மோனிக் இசைக்குழு அவரை 'மேஸ்ட்ரோ' என்று அழைக்கிறது; பலர் அவரை 'ராகதேவன்' என்று குறிப்பிடுவார்கள்; இன்னும் சிலர் கலைஞர் தந்த பட்டமான 'இசைஞானி' என்ற பெயரால் அழைப்பார்கள். ஆனால், அவரது ரசிகர் பட்டாளம் அவரை ராஜா என்றே அன்போடு அழைக்கும்.

திரை இசையமைப்பாளராக, பாடகராக, பாடலாசிரியராக, இசைக்கருவி வாசிப்பவராக, அவரது அசாதாரணமான இசைப் பயணம் நாற்பதாண்டுகளாகத் தொடர்கிறது. குறைந்த பட்சம் ஏழு மொழிகளில் ஆயிரம் திரைப்படங்களுக்கு மேல், 7000 பாடல்களுக்கு மேல் அவர் உருவாக்கி இருக்கிறார். வானொலியிலும் தொலைக்காட்சியிலும் பகலில் அவரது இசை பிறரது இசையோடு சேர்ந்து ஒலிக்கக் கூடும். ஆனால், இரவில் அவரது ராஜ்ஜியம்தான். பல ஆண்டுகளாக அவரது இசை தமிழ் வாழ்வின் பிரிக்கமுடியாத ஒரு அங்கமாகிவிட்டது.

எனினும், அவரது மேதைமை, இசையாற்றல் பற்றி எந்த மாற்றுக் கருத்தும் இல்லாவிட்டாலும், அவரது அரசியல் அடிக்கடி ஒரு விவாதப்பொருளாக அமைந்துவிடுகிறது.

கம்யூனிஸ்டுகள், பெரியாரியர்கள் அல்லது அம்பேத்கரியர்கள் என பல்வேறு 'முற்போக்கு' அரசியல் கருத்துகளைக் கொண்டவர்களும் இளையராஜாவின் அரசியலை - அல்லது அவரது அரசியல் பற்றிய தமது புரிதலை - விமரிசித்து வருகிறார்கள்.



தமது சகோதரர் பாவலர் வரதராஜனின் பாடல் மெட்டுகளைக் கொண்டு இளையராஜா இசையமைத்து வந்த காலத்திலிருந்து அவர் விலகிவிட்டது போல் தெரிவதில் தோழர்கள் தாம் புறக்கணிக்கப்பட்டதாக உணர்கிறார்கள். மறுபுறம், பெரியாரியர்கள் அவரது இசை தமிழ்ச் சமூகத்தை பிரதிபலிப்பதாக இருந்தாலும் கூட, அவர் திராவிட இயக்கத்தில் தனக்கான வெளியை வேண்டுமென்றே அடையாமல் விட்டுவிட்டதாக வருந்துகிறார்கள். அதுபோக, பெரியாரின் வாழ்க்கை திரைப்படமாக எடுக்கப்பட்ட போது, அதற்கு இசையமைக்க இளையராஜா மறுத்துவிட்டதாகவும் ஒரு பேச்சு இருக்கிறது. இளையராஜா தனது ஒடுக்கப்பட்ட சமூக அடையாளத்தை (அவர் தாழ்த்தப்பட்ட குடும்பத்தில் பிறந்தவர்) வெளிப்படையாக மறுதலிப்பதாக அம்பேத்கரியர்களும் பெரிதும் ஏமாற்றமடைந்துள்ளார்கள். இதனால், அவர் தனது வேர்களுடனான தொடர்பை அறுத்துக்கொண்டு, தன்னை பிராமணியமயமாக்கிக் கொண்டதாக குற்றம் சாட்டப்படுகிறார்.

அதே சமயம், பிராமணிய ஆதிக்கமும் அவரது பணியின் மகத்துவத்தை குறைக்க, அல்லது நிராகரிக்கவும் தமிழ் திரையிசை வரலாற்றில் அவர் மற்றொரு இசையமைப்பாளர் மட்டுமே என்று அவரைச் சுருக்கவும் கடுமையாக முயற்சி செய்கிறது (அதில் தோல்வி என்றாலும் கூட).



இந்த புற அரசியலும் பார்வைகளும் இளையராஜாவின் இசை எவ்வாறு புரிந்துகொள்ளப்படுகிறது என்பதைச் சுற்றி ஒரு வினோதமான எதிரிணை நிலைகளை உருவாக்கியுள்ளது. அவரது இசை மக்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவதாக, லட்சக்கணக்கான தமிழர்களாலும் பிறராலும் விரும்பப்படுவதாகக் கருதப்பட்டாலும் அவரைத் தூற்றுவோர் அவரது அரசியலை வைத்து அவர் மீது பழி சுமத்துகிறார்கள். அவரது தீவிர ரசிகர்கள் அவரது இசையின் பல்வேறு அம்சங்களைப் பற்றி மணிக்கணக்காக ஆய்வு செய்து இன்புற்றாலும் கூட, அவரது அரசியல் பற்றி பொதுவாக பேசாமல் விலகிவிடுகிறார்கள்.

இது நம்மிடம் சில தவிர்க்க முடியாத கேள்விகளை எழுப்புகிறது.

இளையராஜாவின் இசையில் எதிரிணை நிலை இருக்கிறதா? அவரது இசைத்திறன் அவரது அரசியலிலிருந்து மாறுபட்டதா? இளையராஜாவும் அவரது இசையும் பிராமணியமயமானவையா? அவ்வாறெனில், எப்படி அவரால் நாற்பதாண்டுகளுக்கும் மேலாக, மக்களிடையே பெரும் இசைக் கலைஞனாக ஆட்சிசெய்ய முடிகிறது? இல்லை, அவரது இசையின் வரலாற்று முக்கியத்துவத்தைக் குறைத்துக் காட்ட அவரது சாதி எதிர்ப்பு உணர்வு வேண்டுமென்றே கண்டுகொள்ளப்படாமல், அல்லது குறைத்து மதிப்படப்பட்டு விடப்படுகிறதா? இக்கேள்விகளுக்கு விடைகள் என்னவாக இருப்பினும் இளையராஜாவை, அவரது இசையை நன்கு புரிந்துகொள்ள, அவற்றை மிகத் தெளிவாக ஆராய்வது மிக முக்கியம்.

### அடையாளத்தை வெளிப்படுத்துவதற்கான நெருக்கடி

இளையராஜா இசையின் அரசியலை ஒதுக்கித் தள்ள இரண்டு வாதங்கள் அடிக்கடி கூறப்படுகின்றன. முதலாவது, அவர் தனது ஒடுக்கப்பட்ட சாதி அடையாளத்தை ஏற்க மறுக்கிறார்; இரண்டாவது, அவர் ஒரு பக்திமானாக மாறி அதன் வழியே தன்னை பிராமணமயப் படுத்திக் கொண்டிருக்கிறார். இரண்டு வாதங்களுமே பல ஆண்டுகளாகவே அவரைச் சுற்றிய விவாதங்களில் ஒரு முக்கியமான இடத்தைப் பிடித்துள்ளன. ஆனால், இவற்றில் எந்த அளவிற்கு உண்மை இருக்கிறது? நாம் இந்த விமர்சனங்கள கூர்மையாக ஆராய்வோம்.

### நியாயமற்ற நெருக்கடி ?

இளையராஜா தனது சாதி அடையாளத்தை ஏற்க வேண்டும் என்று பெரும் நெருக்கடி உள்ளது. ஆனாலும், மற்ற ஆதிக்கப் பின்னணி கொண்ட இசைக் கலைஞர்கள் மீது இத்தகைய நெருக்கடிகள் சுமத்தப்படுவதில்லை. பிராமணராகவோ அல்லது ஆதிக்கம் செலுத்தும் பிற்படுத்தப்பட்ட சாதியைச் சேர்ந்தவராகவோ இருக்கும் எந்தக் கலைஞரையும் தனது சாதி பற்றி பேச யாரும் நிர்ப்பந்திப்பதில்லை. எனினும், இப்பிரச்சனை கலைஞர்களுக்கு மட்டுமானதல்ல; அரசியலில் கூட, (குறிப்பாக, சாதி எதிர்ப்பு அரசியலில்) ஒடுக்கப்பட்ட சமூகத்தைச் சேர்ந்த ஒருவரது அனைத்து செயல்பாடுகளும் அவரது சாதி அடையாளத்துடன் நேரடியாக இணைத்தே பார்க்கப்படுகிறது.

எனினும், இதே அரசியலை உயர்சாதியைச் சேர்ந்தவர் ஒருவர் வெளிப்படுத்தினால், அவர் சாதியற்று இருக்கலாம் என்ற சலுகை கிடைத்து விடுகிறது. ஒடுக்கப்பட்ட, ஆதிக்க சாதியைச் சேர்ந்தோரின் அரசியலை நாம் பார்ப்பதில் உள்ள அந்த வெளிப்படையான வேறுபாடே ஒருவகையில் சாதியின் ஒரு விளைவுதான். இது ஒடுக்கப்பட்ட சமூகத்திலிருந்து வரும் ஒருவரின் சாதி அடையாளத்தை மீறி அவரை நாம் பார்க்க இயலாத நிலையைத் தான் காட்டுகிறது.

முற்போக்கான பெரியாரிய, அம்பேத்காரிய வட்டாரங்களில் கூட,இளையராஜாவின் அரசியலைப் புரிந்துகொள்ள சிரமங்கள் இருக்கின்றன. ஏனெனில், இந்த இரு கொள்கையாளர்களும் அடிப்படையில் ஒடுக்கப்பட்ட சமூகத்தின் அடையாளத்தை அழுத்தமாக வெளிப்படுத்துவதற்கு பெரும் முக்கியத்துவம் அளிக்கிறார்கள். இது இல்லாமல், அவர்களால் ஒருவரது அரசியலை பெரியாரிய அல்லது அம்பேத்கரிய சட்டகத்திற்குள் அடக்க முடியாது. அந்த வாதத்தின் மற்றொரு பிரச்சனை இந்த இரு கொள்கைகளுமே நாத்தீகத்தை வலியுறுத்துபவை. அது இளையராஜாவின் மதநம்பிக்கைக்கு நேர்



தனது முதல் படமான 'அன்னக்கிளி' (1976) இசையமைக்கும் போது; ஸ்டில்ஸ் ரவி.

எதிரானதாக உள்ளது. இந்தக் காரணங்களால் இந்த இரு சாதி எதிர்ப்பு வட்டாரங்களுமே இளையராஜாவின் அரசியலில் இடம்பெற முடியவில்லை.

ஆனாலும், இந்த பெரியாரிய, அம்பேத்கரிய கொள்கைகளுக்கு அப்பாலும், இளையராஜா சாதி எதிர்ப்பு வரலாற்றில் இடம் பெற முடியும் என்பது தெளிவு.

காலப்போக்கில், பல்வேறு சாதி எதிர்ப்பு கருத்தோட்டங்களும் நந்தனாரை ஒரு முக்கியமான அடையாளமாக ஏற்றுக்கொண்டுள்ளன. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த தீண்டத்தகாத வகுப்பினரான இந்த பக்தர், சிவன் மீது கொண்ட பக்தி காரணமாக, 63 நாயன்மார்களில் ஒருவராக இடம் பெற்றார். பிராமணிய இலக்கியமான 'நந்தனார் சரித்திரம்' இவரை ஒரு சாதுவான பக்திமானாகக் காட்டினாலும், தலித் மறுவாசிப்புகளில் அவர் ஒரு சாதி எதிர்ப்புப் புரட்சியாளராக, சிதம்பரம் நடராசர் கோவிலில் ஆலயப் பிரவேசம் நடத்திய முதல் மனிதராகக் காட்டப்படுகிறார். இந்த மறுவாசிப்புகளில் நந்தனாரைப் புனிதப்படுத்துவதற்காக நடத்தப்படும் அக்கினிப் பிரவேசச் சடங்கு கோவிலில் நுழைந்த அவரது துணிச்சலுக்குத் தரப்பட்ட மரண தண்டனையாகக் கருதப்படுகிறது.

### நந்தனாரும் இளையராஜாவும் சாதி எதிர்ப்பின் தொடர்ச்சி

ஒரு சைவ சமய பக்திமானான நந்தனாரின் கதையை சாதி எதிர்ப்பு அமைப்புகள் ஏற்கும் போது, இளையராஜாவையும் ஏன் அதே பார்வையில் பார்க்கக்கூடாது? சொல்லப்போனால்,இளையராஜா - ஒருவகையில் நந்தனாரை விட - பிராமணிய மேலாதிக்கத்தை எதிர்த்துப் போராடுவதில் வெற்றிவெற்றவர். அவர் பல தடைகளை நொறுக்கியவர். பல புனிதங்களைத் 'தீட்டாக்கியவர்'. ஆனாலும் கூட, அவற்றின் பாதுகாவலர்களால் அவருக்கு அபராதம் விதிக்க முடியவில்லை. எதுவாக இருப்பினும், இளையராஜா நந்தானாரின் ஒரு வெற்றிவெற்ற வடிவம். அது அவரது அரசியலைப் புரிந்துகொள்வதை மிக முக்கியமாக்குகிறது.




'அன்னக்கிளி' (1976) ஆடியோ கேசட் பின் அட்டை

## பிராமணிய மேலாதிக்கத்தைத் தாக்குதல்

இளையராஜாவின் வருகைக்கு முன்பு வரை, தமிழ் சினிமா கர்னாடக இசைப் பாரம்பரியத்தின் ஒரு நீட்சியாகவே இருந்தது. அதில் ஆதிக்கம் செலுத்திய இசைக் கலைஞர்கள் பிராமணர்களாகவோ அல்லது மற்ற உயர்சாதியினராகவோதான் இருந்தார்கள். திரைப்படங்கள் கீழ்சாதி மக்களுடன் தொடர்புகொள்ள முயன்ற போதும், பாடல்களும் இசையும் ஒரு குறிப்பிட்ட மேட்டிமைத்தனத்தோடுதான் இருந்தன.

இளையராஜா இவை அனைத்தையும் மாற்றினார்.

ஒற்றையாளாக அவர் திரையிசையின் பிராமண ஆதிக்கத்தின் அடிவேரைத் தாக்கினார். அதை எல்லா மக்களும் அடையும் வண்ணமாக ஒரு வடிவத்திற்கு மாற்றினார். அவரது ஏகபோக ஆதிக்கம் சுமார் 20 ஆண்டுகளுக்கு நீடித்ததால், திரையிசையின் இயல்பை முற்றிலுமாக அவரால் மாற்ற முடிந்தது. அதன் வழியே தமிழ் சினிமாவையே மாற்றவும் முடிந்தது. எப்போதெல்லாம் ஒரு கலைஞன் தனது சமூக - அரசியல் தலையீடுகள் வழியாக ஒன்றின் மாறா நிலையைக் குலைக்கிறானோ, அப்போதெல்லாம் ஆதிக்க சக்திகள் வெறியோடு அவனைத் திரும்பத் தாக்கும், இளையராஜாவைத் தாக்கியது போல.

1979இல், இளையராஜா திரையுலகிற்கு வந்து மூன்றாண்டுகள் ஆன நிலையில், அரசு நிறுவனமான அகில இந்திய வானொலி 'பொண்ணு ஊருக்கு புதுசு' படத்தின் இளையராஜா பாடலான 'ஓரம் போ' பாடலை ஆபாசத்திற்காக தடை செய்தது. எனினும், அகில இந்திய வானொலி ஆபாசம் என்று சொன்னது உண்மையில் அன்றைய ஆதிக்க சக்திகளுக்கு எதிரான இளையராஜாவின் வெளிப்படையான அரசியல் வெளிப்பாட்டைத்தான். படத்தின் ஒரு குறிப்பிட்ட சூழலுக்காக கங்கை அமரனால் எழுதப்பட்ட பாடல் என்றாலும், அந்தப் பாடல் வரிகள் இளையராஜாவின் சொந்த ஊரான பண்ணைப்புரத்தையும் அவரது தாயார் சின்னத்தாயையும் தெளிவாகக் குறிப்பிட்டன. பாடல் வரிகள் கதாநாயகனின் வழியை மறிக்கும் பல்வேறு தடைகளை ஒதுங்கி நின்று அவனது சைக்கிள் செல்ல வழிவிடுமாறு அதிகாரத்தோடு கூறின. பாடல் மூன்று பிராமணியத் தடைகளைக் குறிப்பிட்டது சுவாரஸ்யமானது. ஒன்று பழைய கறாரான நிறுவனத்தைப் பிரதிபலிக்கும் ஒரு கிழவி; இரண்டாவது மேட்டுக்குடியினரின் குறியீடான அம்பாசிடர் கார்; இறுதியில் அதிகார வர்க்கக் குறியீடான போலீஸ்காரர். கதாநாயகன், எல்லோரும் தன் சைக்கிளைத் தள்ளி, தனது இலக்கை அடைய உதவ வேண்டும் என்றும், அப்போதுதான் அவர்களும் தன்னைப் பின்தொடர முடியும் என்று பாடுகிறான்.

மக்களுக்கு பாடலின் செய்தி புரிந்ததோ இல்லையோ, பிராமண ஆதிக்க அகில இந்திய வானொலிக்கு இது புரிந்ததாகத் தெரிகிறது. அதனால் அது இதை ஆபாசம் என்று தடை செய்தது. பிராமணிய வெளியில் 'பிறர்' அத்துமீறி நுழைவதை விட வேறு என்ன அதிகமான ஆபாசமாக இருந்துவிட முடியும்?

பின்னர், 'சிந்து பைரவி' (1985) திரைப்படத்தில் இளையராஜா கர்னாடக இசையுலகை அதிர்ச்சிக்குள்ளாக்கும் ஒன்றைச் செய்தார். அவர் தியாகராஜர் எழுதிய கீர்த்தனை ஒன்றின் ராகத்தை மாற்றிவிட்டார். 'மரி மரி நிந்நே' கீர்த்தனையை தியாகராஜர் காம்போதி ராகத்தில் அமைத்திருந்தார். இளையராஜா அந்தக் கீர்த்தனையை சாரமதி ராகத்தில் அமைத்து படத்தில் பயன்படுத்திவிட்டார்.

இதை ஒரு படைப்பூக்கமான 'ரீமிக்ஸ்' என்று கொள்ளமுடியாது; சங்கீத மும்மூர்த்திகளின் புனிதம் கண்டு அஞ்சாத ஒருவரின் துணிச்சலான தெய்வ நிந்தனைச் செயலாகத்தான் கொள்ள வேண்டும். இளையராஜா எடுத்துக்கொண்ட உரிமை கர்னாடக சங்கீத உலகிற்கு பெரிய மன உளைச்சலைத் தந்துவிட்டது. எந்த அளவிற்கு என்றால், ரசிகர்கள் எது 'சரியான ராகம்' என்று இன்றளவும் குழம்பிக் கொண்டிருக்கிறார்கள். இளையராஜா என்ன செய்திருக்கிறார் என்று அறிந்தபோது அவர்கள் பெரிதும் கோபமுற்றார்கள். Rasikas.orgஇன் விவாத தளங்களில் அவர்களின் பதிவுகளைப் பார்த்தால் இது நன்கு தெரியும்.

கர்னாடக சங்கீத ரசிகர்களுக்கு ஒரே குழப்பம்.

ஆனால், அது மட்டுமல்ல. அதே படத்தில் 'பாடறியேன், படிப்பறியேன்' என்று ஒரு பாடல் இருக்கிறது. அது இசையின் அரசியலை ஒடுக்கப்பட்டவர் பார்வையிலிருந்து பேசுகிறது.




நந்தனார், இளையராஜா

(படத்தில் ஒரு பிராமணப் பெண் பாத்திரம் பாடுவதாகக் காட்டப்பட்டாலும் கூட) பாடல் தமிழ் நாட்டுப் புற இசையைப் பற்றியது. நாட்டுப்புற இசையிலிருந்து தான் கர்னாடக இசையின் ராகங்கள் தோன்றின என்று கூறுவது. அதில் ஒரு சரணம்,

சொன்னது தப்பா? தப்பா?
ராகத்தில் புதுசு என்னதப்பா?
அம்மி அரச்சவ, கும்மி அடிச்சவ,
நாட்டுப்புறத்துல சொன்னதப்பா
என்று வரும்.

பாடலின் முடிவில், தியாகராஜர் கீர்த்தனையும் எளிய உழைக்கும் மக்களின் இசையில் இருந்து வந்திருக்கக் கூடும் என்று காட்டும் விதமாக, 'பாடறியேன் படிப்பறியேன்' பாட்டை மரி மரி நிந்நேயுடன் இணைத்து, வியப்பூட்டும் ஒரு பஞ்சை (punch) வைத்தார் இளையராஜா.

இன்றும் கூட, இளையராஜாவின் இந்த படைப்பூக்கமான 'திரிபு' விவாதிக்கப்படுகிறது. யூட்யூபில் நீங்கள் 'மரி மரி நிந்நே' பாடலைத் தேடினால்,தியாகராஜரின் பாடலுக்கு அடுத்தபடியாக இளையராஜா போட்ட பாடல்தான் வருகிறது. அடுத்து, மூன்றாவதாக சித்ரா பாடிய 'பாடறியேன் படிப்பறியேன்' வரும். எனினும், பட்டியலில் ஏழாவது இடத்தில் இடம் பெறும் புகழ் பெற்ற கர்னாடக இசைப் பாடகர் டி.எம். கிருஷ்ணா, இளையராஜா இப்படி மாற்றியது பற்றி மகிழ்ச்சி கொள்ளவில்லை.

எனில், 'மரி மரி நிந்நே'வை உருவாக்கியது யார்?

A Southern Music: The Karnatik Story என்ற தனது நூலில் டி.எம். கிருஷ்ணா கீழ்கண்டவாறு குறிப்பிடுகிறார். 'இப்படி ஒரு கீர்த்தனையின் தாய் ராகத்தை மற்றொரு ராகத்திற்கு மாற்றுவது அந்தக் கீர்த்தனையை என்ன செய்கிறது என்று நாம் கேட்கலாம். கேட்க வேண்டும். உண்மையில் நிறையவே செய்கிறது. அதன் சாரம் சிதைந்து போகிறது. கீர்த்தனையின் சினிமா வடிவம் அழகாக இல்லை என்று நான் சொல்லவில்லை. நான் அந்த சினிமா வடிவம் கீர்த்தனையின் ஒருங்கமைவிற்கு என்ன செய்தது என்று ஆராய்கிறேன். நான் சொன்னது போல, அந்த சினிமா பாடல் அதை அழித்துவிட்டது. கீர்த்தனையின் சினிமா வடிவத்தை என்னால் ஏற்க முடியவில்லை.'

அதே புத்தகத்தில், 'பஞ்சமுகி' என்ற புதிய ராகத்தை உருவாக்கியதற்காக இளையராஜாவைக் கண்டிக்கிறார் டி.எம்.கிருஷ்ணா. அது ஒரு மோசமான யோசனை என்கிறார்.

## புனிதவெளிகளைத் தீட்டுப்படுத்துதல்

இளையராஜாவை விமரிசப்பவர்கள் அவர் பிராமணியமயமானவர் என்று குற்றம் சாட்டுவது ஒரு முரண். எனெனில், தனது இசை வாழ்க்கை முழுவதிலும் இளையராஜா உணர்ந்தோ உணராமலோ, இசையில் புனிதங்கள் என்று சொல்லப்படுபவற்றை தீட்டுப்படுத்திக்கொண்டே இருக்கிறார்.

திரைத் துறைக்கு காலடி எடுத்து வைத்த முதலாண்டிலேயே, இளையராஜா 'பத்திரகாளி'




'How To Name It' ஆல்பம் அட்டை

பிலஹரி ராகத்தில், கர்னாடக இசையின் ஆரம்ப பாடங்களில் ஒன்றான 'ரார வேணு கோபாலா...' என்ற ஸ்வரஜதியை அப்படியே உல்டா செய்யப்பட்டிருப்பது மற்றொரு சுவையான தகவல் இந்தத் தகவல் ஆங்கிலக் கட்டுரையில் இல்லை. சுவை கருதி மொழிபெயர்ப்பாளரால் சேர்க்கப்பட்டுள்ளது)

### இசைத் தலையீடுகள்

இந்த தலையீடுகள் அவரது ஆரம்ப காலங்களில்தான் நடந்தன என்றில்லை. 2016இல் 'தாரை தப்பட்டை' படத்திற்கு விஸ்வநாதன் - ராம்மூர்த்தி 'தங்கப் பதுமை' (1959) திரைப்படத்தில் போட்ட 'ஆரம்பம் ஆவதும் பெண்ணுக்குள்ளே' என்ற பாடலை எடுத்துக்கொண்டு அதை ஒப்பாரிப் பாடலாக பறை இசையுடன் 'ரீமிக்ஸ்' செய்தார். பழைய பாடலில் பத்மினியின் அந்த சோகமான வரிகள் எல்லாம் இளையராஜாவின் ரீமிக்ஸில் மிகைப்படுத்தப்பட்டு நகைச்சுவை உணர்வைத் தரும்படி செய்யப்பட்டன. இரண்டு பாடல்களுமே தத்தமது வழியில் அற்புதமானவை என்றாலும். இளையராஜா பழைய பாடலை எடுத்துக்கொண்டது பாராட்டுவதற்காகவா அல்லது பகடி செய்யவா என்ற ஐயம் தோன்றுகிறது.

இளையராஜா, கடவுளரையும் விட்டுவைக்க வில்லை. 'தளபதி' (1991) படத்தின் மிகப் புகழ்பெற்ற 'ராக்கம்மா கையத் தட்டு' என்ற 'ரெக்கார்ட் டான்ஸ்' பாடலில் அப்பரின் தேவாரத்தை இடையிசையாக நுழைத்தார். அதுவரை அந்த தேவார வரிகள் கோவில்களில் அல்லது கர்னாடக சங்கீத மேடைகளில் மட்டுமே ஒலித்திருக்கும்.

இவ்வாறாக, பிராமணியமயமானவர் என்று குற்றம் சாட்டப்பட்ட ஒரு மனிதராக இருந்தாலும் இளையராஜாவிடம் புனிதம், தீட்டு பற்றிய கருத்துகள் எதுவும் இல்லை. அவரது இசை இது போன்ற பகுப்புகளைப் பற்றி சிறிதும் கவலைகொள்ளாத ஒரு இடத்திலிருந்து உருவாகுவதாகவே தெரிகிறது. தனது 75ஆவது பிறந்த நாளையொட்டி சினிமா விகடனுக்கு அவர் அளித்த நேர்காணலில் ஆன்மீகம் பற்றிய அவரது கருத்தை எளிய வடிவில் விளக்குமாறு கேட்கப்படுகிறது. அவரது பதில் தெளிவாக வந்தது - "ஆன்மிகம் என்பதே எளிமையானதுதான்... எல்லாமே சமம், ஒன்றுதான்! அதை இன்னும் எளிமைப்படுத்துவதற்கான சிக்கல் எதற்கு?"

### சமத்துவத்தின் வடிவாக ஃப்யூஷன் (இணைவு இசை)

இளையராஜா இசையில் மிகப் பாராட்டப்படும்

(1976) படத்திற்காக 'கேட்டேளே அங்கே' என்ற ஒரு பாடலுக்கு இசையமைத்தார். தமிழ் பிராமண வழக்கில் எழுதப்பட்ட பாடல் வரிகளுக்கு மேற்கத்திய இசையோடு கூடிய பறை இசை சேர்க்கப் பட்டிருக்கும். பிராமணப் பேச்சு வழக்கும் பறை இசையும் இணைந்ததே, அந்தப் பாடலை, அகில இந்திய வானொலி 'ஆபாசம்' என்று தடை செய்யப் போதுமான தெய்வக் குற்றமாக இருந்தது.

பின்னர், 'எல்லாம் இன்பமயம்' (1981) படத்தில் உயர் சாதிப் பையனுக்கும் கீழ் சாதிப் பெண்ணுக்கும் சேரியில் திருமணம் நடப்பதாக ஒரு காட்சி வரும். திருமணத்தைத் தொடர்ந்த கொண்டாட்டத்திற்கு இளையராஜா 'மாமன் வீடு மச்சு வீடு' என்ற ஒரு பாடலைப் போட்டிருப்பார். இது பறை முழக்கத்தோடு ஆரம்பிக்கும். பின்னர் அதோடு நாதஸ்வரமும் உருமியும் இணையும். அப்போது ஒருவர் 'ஏதாவது டீசண்டா வாசிங்க', என்று இடைமறிப்பார்.

கொஞ்சம் தகராறுக்குப் பின், ஒரு சமரசம் வரும். 'டீசண்ட்' பாட்டும் நாட்டுப்புற இசையும் சேர்ந்து இசைக்கப்படும். 'டீசண்ட்', நாட்டுப்புற இசையின் இணைப்பு பற்றிய இந்த உரையாடல் அந்தக் காட்சியில் நிகழும் கலப்புத் திருமணத்தின் பின்னணியில் வேண்டுமென்றே சேர்க்கப்பட்டது. இதில் சுவையான விஷயம் என்னவென்றால், அது படத்தின் உரையாடலில் இடம்பெறாமல், பஞ்சு அருணாசலம் எழுதிய பாடலுக்கு இடையில் இடம் பெற்றுள்ளதுதான். ('மாமன் வீடு மச்சு வீடு' பாடல்

அம்சம் பல்வேறு இசை வகைமைகளை இணைக்கும் அவரது திறன். அவரது கடுமையான விமரிசகர்கள் கூட, முற்றிலும் மாறுபட்ட கருவிகளையும் இசைமுறைகளையும் ஒன்றிணைக்கும் அவரது திறனைப் பாராட்டுகிறார்கள். எனினும், அவரது இணைவு இசை பற்றி அதிகம் பேசப்படாததற்கு ஒரு பெரிய காரணம் இருக்கிறது.

இளையராஜாவைப் பொருத்தவரை, இணைவு இசை என்பது, எல்லா வகையான இசை வகைமைகளும் அடிப்படையில், 'சமமானவைதான், ஒன்றுதான்,' என்று காட்டுவதற்கான ஒரு வழி. சினிமா விகடனின் அதே நேர்காணலில் பல்லாண்டு காலமாகஇசையில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள் குறித்துச் சொல்லுமாறு அவரிடம் கேட்கப்பட்ட போது, அவர் 'இசை எப்போதுமே ஒன்றாகத்தான் இருக்கிறது, அடிப்படையில் காற்றில் தவழும் ஒலியலைதான்' என்றார். 'காற்றுக்கு இனம், சாதி, மதம் என்று ஏதேனும் உண்டா?' என்று கேட்டார். மேலும், 'இசையை பலவிதமான வகைகளாகப் பிரிப்பதை தான் விரும்பவில்லை' என்றார். 'மற்றவர்களும் அவ்வாறு செய்யக் கூடாது' என்றும் கேட்டுக்கொண்டார்.

அவரது 'இணைவு இசை' மூன்று அடுக்குகளாக இருக்கிறது. முதல் அடுக்கில் அவர் ஒடுக்கப்பட்ட மக்களின் வெளிப்பாடாகக் கருதப்படும் தமிழ் நாட்டுப்புற இசையை, பிராமணர்கள், பிற உயர்சாதிக்காரர்கள் ஆகியோரால் ஆதிக்கம் செலுத்தப்படும் கர்னாடகஇசையோடுஇணைக்கிறார். இதன் மூலம், இந்திய துணைக்கண்டத்தில் தோன்றிய இந்த இரு இசை வடிவங்களின் சமத்துவத்தை, அவற்றை இணைக்க முடிவதை நிறுவுகிறார். இணைவு இசையின் இரண்டாவது அடுக்கில், அவர் இந்த இரு வடிவங்களையும் எடுத்து மேற்கத்திய செவ்வியல் இசையுடன் இணைத்து, கிழக்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் உருவான இசை வடிவங்கள் சமமானவை என்பதையும் அவை இணையக் கூடியவை என்பதையும் காட்டுகிறார். மூன்றாவது அடுக்கில், குறிப்பிட்ட அந்தப் பாடலின் தரத்தை உயர்த்த, பிற இசை வடிவங்களை இணைக்கிறார்.

அவரது எந்தப் பாடலையும் எடுத்துக்கொண்டு இந்த அடுக்குகளையும். அவற்றின் பின் உள்ள அரசியலையும் நம்மால் கவனிக்க முடியும். உதாரணத்திற்கு, 'கிழக்கு வாசல்' (19990) படத்தின் 'அட வீட்டுக்கு வீட்டுக்கு வாசப்படி' பாடலில் அவர் கிராமப்புற இசைக்கருவிகளுடன் நடத்தப்படும் தெருக்கூத்துப் பாட்டில் மொஸார்ட்டின் 25ஆவது சிம்ஃபொனியின் முதல் பகுதியை இணைத்துள்ளார்.

இளையராஜாவின் முதல் இணைவு இசை இசைத்தட்டான 'How to name it?' இல் அவரது நோக்கங்கள் மிக வெளிப்படையாகவே தெரிந்தன. அதில் ஒரு இசைக் கோவையின் பெயர் 'I met Bach in my house'. அதில் அவர் ஜெர்மன் இசையறிஞரான பாக்கின் இசையை இந்திய இசைப் பின்னணியில் தந்தார். 'Chamber welcomes Thiagaraja' என்ற மற்றொரு கோர்வையில் அவர் தியாகராஜரின் கர்னாடக கீர்த்தனைகளை மேற்கத்திய சேம்பர் இசை எனப்படும் சிறுகுழு இசை வடிவத்துடன் இணைத்தார்.

பின்னர் அவரது இசைத்தொகுப்பான 'திருவாசக'த்தில் (2005) அவர் 9ஆம் நூற்றாண்டின் மாணிக்கவாசகரது சைவ இலக்கியமான திருவாசகத்தை கிறிஸ்துவ கீதங்களை நினைவூட்டும் ஒருவித சிம்ஃபொனி இசையில் மாற்றித் தந்தார். இவ்வாறு செய்யும் போது, அவர் ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பில் மட்டும் புழங்கும் வேறுவேறு இசைகளை மட்டுமின்றி, வேறு வேறு மதப் பாராம்பரியம் கொண்ட இசைகளையும் இணைத்தார்.

அவரது இணைவு இசையின் அரசியலை 'உள்ளம் கவர்ந்த கள்வன்' (1987) படத்தில் இடம்பெற்ற 'நாடிருக்கும் நிலமையிலே' பாடல் வரிகளில் தெளிவாகப் புரிந்துகொள்ளலாம். இந்தப் பாடல்,

தமிழில் பாசுரமா?<br>
தெலுங்கில் கீர்த்தனையா?<br>
தினமும் மாறிடும்<br>
மேல் நாட்டினரின் புது இசையா?<br>
எல்லாம் பாடட்டுமா?<br>
தலைகீழ் ஆக்கட்டுமா?<br>
சொல்ல இனித்திடும் சுவை கலைகளை<br>
இங்கும் சேர்க்கட்டுமா?

என்கிறது.

## இசைக் காவலர்களைத் தாக்குதல்

தனது நாற்பதாண்டு கால இசைவாழ்வில் இளையராஜா, சிறியவர் பெரியவர் என்ற பேதமின்றி ஏராளமான படத் தயாரிப்பாளர்கள், இயக்குநர்கள், நடிகர்களுக்கு தனது இசையைத் தந்துள்ளார். அவர் அசாதாரண இசைஞானம் உள்ளவர் என்பதால் எல்லாருக்காகவும் மிக விரைவாக பாடல்களை இசையமைத்துத் தந்துள்ளார். மற்ற இசையமைப்பாளர்கள் போல் அவர் சில குறிப்பிட்டவர்களுக்கு மட்டுமே பணியாற்றுவது என்று இருக்கவில்லை. அவரை அனைவரும் அணுக முடியும். அனைவருக்கும் அவர் 'சூப்பர்ஹிட்' பாடல்களைப் போட்டுத் தருவார். ரஜினி, கமல் போன்ற உச்ச நடிகர்களுக்கு அற்புதமான பாடல்கள் கிடைத்தன என்றால், அதே சமயத்தில் சுரேஷ், பிரதாப் போத்தன், ரமேஷ் அரவிந்த் போன்ற நடிகர்களுக்கும் அதே போன்ற பாடல்கள் கிடைத்தன. மணிரத்னம் போன்ற பெரிய இயக்குநர்களுக்குக் கிடைத்த அதே தரத்தில் புதிதாய் வந்த இயக்குநருக்கும் அவர் பாடல்களைத் தந்தார். இளையராஜாவின் இசை சிறிய படங்களையும் பெரிய 'ஹிட்' ஆக்கிவிடும் என்பதால் புது இயக்குநர்கள் அவரது பாடல்களைப் பெற விழைந்தார்கள்.

(தொடர்ச்சி 13ஆம் பக்கம்)

(10ஆம் பக்கத் தொடர்ச்சி)

தனது முதல்படமான ‘பல்லவி அனுபல்லவி’ (1983) எடுக்கும்போது, இளையராஜா அப்போது வாங்கிக் கொண்டிருந்த தொகையைத் தருமளவு தனக்கு வசதி இருக்கவில்லை என்று மணிரத்னம் பல நேர்காணல்களில் கூறியிருக்கிறார். ஆனாலும், இளையராஜா இசையமைக்க உடனடியாக ஒப்புக்கொண்டார். பாடல்கள் ‘சூப்பர்ஹிட்’. இப்போதும் பல மொழிகளிலும் அவை திரும்பவும் பயன்படுத்தப்படுகின்றன. ‘ரீமிக்ஸ்’ செய்யப்படுகின்றன.

புதிய இயக்குநரான லெனின் பாரதி 2016இல் தனது ‘மேற்குத் தொடர்ச்சி மலை’ படத்திற்கு எந்தத் தயக்கமும் இன்றி இளையராஜா ஒரு சிறு தொகைக்கு இசையமைக்க ஒப்புக்கொண்டதை நினைவுகூர்கிறார். பணவசதி இல்லாத பல தயாரிப்பாளர்கள், இயக்குநர்களிடம் இளையராஜா பெருந்தன்மையாக நடந்துகொண்டது பற்றி இப்படி ஏராளமான கதைகள் உள்ளன. கலைஞர்கள் தமது நண்பர்களுக்கு உதவுவது சகஜம்தான். ஆனால், முன்பின் தெரியாதவர்களுக்கு இவ்வாறு உதவுதல் அரிது. ஆனால்,இளையராஜாவைப் பொருத்தவரை, அவருக்கு இசைதான் எல்லாம். எனவே, அது அனைவருக்கும் கிடைக்க அவர் எதையும் செய்வார். அவ்வாறு செய்வதன் மூலம், இசையை அதன் முழு பொருளில் உலகளாவியதாகப் பரப்புவார்.



‘கரகாட்டக்காரன்’ (1989), திரைப்பட சுவரொட்டி

## ஒடுக்கப்பட்டோர் வாழ்வை ஆவணப்படுத்துதல்

இளையராஜா இசை நாட்டுப்புறப் பாரம்பரியத்தின் விரிவாக்கமாக,ஒடுக்கப்பட்டோரின் கலாச்சாரத்தை, அரசியலை ஆவணப்படுத்துவதாக இருப்பதுதான் அவரது மிக முக்கியமான பங்களிப்பாகும். அவரது வருகைக்கு முன்புவரை, ஒடுக்கப்பட்ட பெரும்பான்மையினர் தமக்கு அந்நியமான வார்த்தைகளை, ஒலிகளைத்தான் இசையாகக் கேட்கும் நிர்ப்பந்தம் இருந்தது. இளையராஜா தனது இசையின் மூலம் அவர்களது உறவுகளை, காதலை, பக்தியை, கொண்டாட்டத்தை, மகிழ்ச்சியை, போராட்டங்களை, வலியை, இன்னும் அனைத்தையும் வெளிப்படுத்தினார். இவையனைத்தையும் அவர்களது சொந்த இசைக்கருவிகள், ஒலிகளின் வழியாகவே ஆவணப்படுத்தினார். அவரது இசை உலகளாவியதாக இருந்தாலும் கூட, அடியாழத்தில் இளையராஜாவிற்குள் ஒரு நாட்டுப்புறப் பாடகன் இருக்கவே செய்கிறான். நடிகர் ராமராஜன் படங்களுக்கு அவர் போட்ட இசையைப் பார்த்தால் இது நன்கு விளங்கும்.

ஒரு நடுத்தர நடிகராக, இரண்டாம் கட்ட சிறுநகரங்கள், கிராமங்களில் பிரபலமாக இருந்த ராமராஜனுக்கு இளையராஜா தந்த இசை ஏன் அசாதாரணமானதாக,பெரிய நடிகர்களுக்காக அவர் போட்ட இசையைவிட அருமையாக இருந்தது என்று திரையுலகமும் மக்களும் திகைத்துப் போனார்கள். ராமராஜன் நடித்த படங்கள் தான் இதற்குக் காரணமாக இருந்திருக்க வேண்டும். கிராமப்புற ரசிகர்களைக் குறிவைத்து அவர் ‘எங்க ஊரு பாட்டுக்காரன்’ (1987), ‘கரகாட்டக்காரன்’ (1989), ‘பாட்டுக்கு நான் அடிமை’ (1990), ‘ஊரு விட்டு ஊரு வந்து’ (1990) என்று வரிசையாக உள்ளூர் கலைவடிவங்கள், பாரம்பரியங்களைச் சித்தரிக்கும் படங்களாக தொடர்ந்து நடித்தார். இந்த மாதிரியான கதைகள் இளையராஜாவிற்குள் இருந்த நாட்டுப்புற இசைஞனை தனது இசை வேர்களை ஆழமாகத் தோண்டி எடுத்துத் தர உதவின.

ஒடுக்கப்பட்ட மக்களின் பக்தியைக் காட்டும்போதும், இளையராஜாவின் இசை எல்லா மதநம்பிக்கைகளையும் கடந்து இசைத்தது. அதில் ‘ஜனனி, ஜனனி’யில் (தாய் மூகாம்பிகை, 1982) வரும் பிராமணியமயமான ஆதி பராசக்தியும், ‘மாரியம்மா மாரியம்மா’ (கரகாட்டக்காரன், 1989) பாட்டில் வரும் உள்ளூர் தெய்வமான மாரியம்மனும், ‘கருமாத்தூர் காட்டுக்குள்ளே’ (விருமாண்டி, 2003) பாட்டில் வரும் பெரியாச்சி அம்மனும் உண்டு. மேலும் ‘தேவனின் கோவிலிலே’ (வெள்ளை ரோஜா, 1983) பாட்டின் ஏசுவும் நாகூர் ஹனிபா பாடிய ‘நபி வழி நடந்தால்’ பாட்டில் வரும் அல்லாவும் அவர் பாடல்களில் உண்டு. ‘கடவுள் உள்ளமே’ பாட்டில் (அன்புள்ள ரஜினிகாந்த், 1984) வருவது போல் எல்லா மத

நம்பிக்கைகளும் இணைந்து வருவதும் உண்டு.

எனினும், பெரியாரியர்கள் பெரியாரின் வாழ்க்கை வரலாற்றுப் படத்திற்கு இளையராஜா இசையமைக்க மறுத்தார் என்று கோபப்படுகின்றனர். பெரியாரின் நாத்தீகக் கொள்கை மீதான வெறுப்பின் காரணமாக அவர் மறுத்தார் என்று நம்பப்பட்டாலும். தமிழ் எழுத்தாளர் வி. மதிமாறன், உண்மையில் அது படத்தின் இயக்குநர் ஞான ராஜசேகருடன் இளையராஜாவிற்கு ஏற்பட்ட தனிப்பட்ட மோதல் காரணமாகத்தான் என்று சுட்டிக் காட்டுகிறார். இது உண்மையாகத்தான் இருக்க வேண்டும். ஏனெனில், 'கடவுள்;(1997) படத்தில் மனிதநேயம், பகுத்தறிவை மீறி கடவுளை ஏற்பதை விமரிசக்கும் 'அறிவிருந்தா கொஞ்சம்' என்ற பாடலுக்கு தயங்காமல் இசையமைத்திருக்கிறார்.

'சின்னக் கவுண்டர்' (1991), 'தேவர் மகன்' (1992), 'எஜமான்' (1993) போன்ற படங்களில் அவரது சில பாடல்கள் இடைநிலை சாதிகளை புகழ்வதாக அமைவது இளையராஜா மீதான மற்றொரு விமர்சனம். இது போன்ற பாடல்கள் சாதி அதிகாரத்தைத் திரட்ட பயன்பட்டிருப்பது உண்மைதான் என்றாலும், முழுமையாகப் பார்த்தால் அவரது இசை இடைநிலைச் சாதிகளின் பிரதிநிதித்துவத்தை அதிகரித்திருப்பது தெரிகிறது.

பாரதிராஜாவுடன் அவர் இணைந்த அத்தனை படங்களிலும் இடைநிலைச் சாதிகளின் வாழ்க்கை யதார்த்தமாக, ஒரு மனிதநேயத்தோடு ஆவணப்படுத்தப் பட்டிருக்கின்றன. 'மண்வாசனை' (1983), 'முதல் மரியாதை' (1985), 'கடலோரக் கவிதைகள்' (1986), 'நாடோடித் தென்றல்' (199) என்று பல உதாரணங்களைச் சொல்லலாம். 'என் ராசாவின் மனசுல' (1991), 'நாட்டுப்புறப் பாட்டு' (1996),'சொல்ல மறந்த கதை' (2002) போன்ற அவரது மற்ற நாட்டுப்புற, சிறு நகரம் சார்ந்த படங்களிலும் இவ்வாறு தான். அவரது விமரிசகர்கள் ஒன்றிரண்டு பாடல்களை மட்டுமே வைத்துக்கொண்டு, (இதற்கு முன்பு சாத்தியமே இல்லாததாக இருந்த,) அதே சாதிகளின் வாழ்க்கையை மிக கண்ணியத்தோடு பிரதிபலித்த அவரது பல நூற்றுக்கணக்கான பாடல்களை ஒதுக்கித் தள்ளிவிடுகிறார்கள்.

## தள்ளி வைக்கப்பட்டவர் மரியாதைக்குரியவர் ஆனது

பலநேரங்களில் இளையராஜா தனது பாடல்களை இசைத்துறையில் தனது அசைக்க முடியாத அந்தஸ்தை உறுதிப்படுத்திக்கொள்ள பயன்படுத்திக்கொள்வார். 'பதினாறு வயதினிலே' (1977) படத்தில் முதல் முறையாக அவர் 'டைட்டில் பாடல்' (சோளம் வெதக்கையிலே) பாடியதிலிருந்து அவர் 'டைட்டில் பாடல்' பாடினால் ராசியாக இருக்கும் என்ற நம்பிக்கை வந்துவிட்டது.

இதன் காரணமாக பல படங்களில் எழுத்து போட ஆரம்பிக்கும் போதே இளையராஜா பாடுவது அல்லது 'ஹம்மிங்' செய்வதை நீங்கள் கேட்க முடியும். பெரும்பாலும் இந்தப் பாடல்கள் படத்தின் கதை பற்றி இல்லாமல், இளையராஜா பற்றி இருக்கும். தன்னையும் அந்தப் படத்தையும் ரசிகர்களுக்கு அறிமுகம் செய்து வைக்கும் கட்டியங்காரனாக அவர் இருப்பார். உதாரணத்திற்கு, 'கரகாட்டக்காரன்' (1989) படத்தில் எழுத்துப் போடும் போது இளையராஜாவும் படத்தின் இயக்குநர் கங்கை அமரனும் படத்தைப் பற்றி உரையாடுவார்கள். தொடர்ந்து 'பாட்டாலே புத்தி சொன்னார்' என்ற தத்துவப் பாடல் வரும். இளையராஜா இசையின் வரலாற்றையும் அதில் தனது பங்கையும் பற்றிப் பாடுவார்.

திரும்பவும் 'கும்பக்கரை தங்கையா' (1991) படத்தில் அவர் 'என்னை ஒருவன் பாடச் சொன்னான்' என்ற பாடலோடு படத்தை ஆரம்பித்தார். அதில் இசையில் அவரது பங்களிப்பு தெய்வீக சக்திகளால் முடிவு செய்யப்பட்டது என்பார்.

என்னதான் பெரிய இசை மேதை என்றாலும், இப்படி ஒருவர் தன்னைத் தானே புகழ்ந்துகொள்ளலாமா என்று நீங்கள் வியக்கும்போது, 'கேளடி கண்மணி' (1990) படத்தில் 'என்ன பாடுவது' என்ற பாட்டில் தனக்கு இசை பற்றியோ பாடவோ எதுவும் தெரியாது என்று தன்னையே கிண்டல் செய்துகொள்வார்.

இதுபோக, ரசிகர்கள் அவரை அழைக்கும் பட்டமான ராஜா என்ற பெயரை வைத்து அவரைச் சுட்டும் ஏராளமான பாடல்கள் உண்டு. 'அக்னி நட்சத்திரம்' படத்தின் (1988) 'ராஜா ராஜாதி ராஜா' பாட்டில், 'நேற்று இல்லை நாளை இல்லை எப்பவும் நான் ராஜா,' என்று வரும். 'அபூர்வ சகோதரர்கள்' (1989) படத்தின் 'ராஜா கைய வச்சா' பாட்டு, 'ராஜா கைய வச்சா, அது ராங்க போனதில்ல,' என்று சொல்லும். 'ஒரு ஊர்ல ஒரு ராஜகுமாரி' (1995) படத்தின் பாட்டு 'ராஜா ராஜாதான்' என்று அறிவிக்கும்.

இயல்பாகவே இவையெல்லாம் அவரது விமரிசகர்களை அதீதமான தற்காதல் (extreme narcissism) என்று குற்றம் சாட்ட வைத்தது. எனினும், இளையராஜா செய்ததை விஷயங்களின் வரலாற்று ரீதியான போக்கின் சூழலுடன் பொருத்திப் பார்க்க வேண்டும்.

மாயாவதி சிலைகள் வைக்கப்பட்ட போது எழுந்த சர்ச்சைகளின் போது Mayawati or Hatshepsut: Her place has to be shown என்ற கட்டுரையில் 'ரவுண்ட் டேபிள் இந்தியா'' நிறுவனரும் அதன் ஆசிரியருமான அனு ராம்தாஸ் கீழ்கண்டவாறு வாதிட்டார்,

இந்த சர்ச்சை மேட்டுக்குடிகள் ஆக்கிரமித்திருக்கும் உயர்ந்த



ஒழுக்க பீடம் சார்ந்தது மட்டுமல்ல, தேர்ந்தெடுக்கப்பட்ட அரசின் ஒப்புதலோடு தனது சொந்த சிலையை வைக்குமளவு அதிகாரத்துடன் மனித வரலாற்றில் இதுவரை ஒரு பெண்மணியை சந்தித்ததில்லையே என்ற அச்சத்தின் வெளிப்பாடும் ஆகும். ஒரு தலித் பெண் இதைச் சாதித்துவிட்டாள். உலகெங்கிலும் பழங்காலம் முதல் இன்று வரை பரவியிருக்கும் பெரும்பாலான பெண் சிலைகளைப் போலன்றி, அந்த சிலைகள் ஆண் பார்வையில் செய்யப்பட்டவை அல்ல; ஆணின் பெருந்தன்மையின் வெளிப்பாடும் அல்ல. இவை அவரது வரலாற்று உனணர்வை பிரதிபலிப்பவை. அவரது சொந்த வழிகாட்டலில் வடிக்கப்பட்டவை.

இதையேதான் இளையராஜா தனது இசையிலும் செய்தார். ஒடுக்கப்பட்ட சமூகத்துக் கலைஞர்கள் மறக்கப்படுவது, கவனம் பெறத் தவறுவதைப் பற்றி ஆழமாக அறிந்த அவர் தனது எல்லை மீறிய அதிகாரத்தை வரலாற்றில் தன் பெயரைப் பதிக்கப் பயன்படுத்திக்கொண்டார். அவரது பல பாடல்களிலும் அவரது பெயர் பொறிக்கப்பட்டிருப்பது சக்தி வாய்ந்த சாதிய சக்திகளுக்குஎதிரானவெளிப்படையானசெயலாகும்.

## எதிர்ப்பின் அடையாளம்

முடிதிருத்தகங்களில், தையல்கடைகளில், சாலையோர உணவகங்களில், டீக்கடைகளில், ஆட்டோக்களில், பட்டறைகளில், என உழைப்பாளி மக்களின் ஒவ்வொரு வெளியிலும் இளையராஜாவின் படத்தை நிறைய பார்க்கலாம். அவரது ரசிகர்கள் சற்று அதீதமாகச் செய்கிறார்கள் என்று நினைக்கத் தோன்றினாலும் மற்ற புகழ் பெற்ற இசையமைப்பாளர்களக்கு இது போன்ற ரசிகர்கள் ஏன் இல்லை என்ற கேள்வி தோன்றுகிறது.

ஏனெனில் இளையராஜாவில் அவர்கள் வானத்திலிருந்து குதித்த ஒரு இசையமைப்பாளரைப் பார்க்கவில்லை. அடிமட்டத்திலிருந்துவந்துதனக்கான இடத்திற்காக, ஆதிக்கம் செலுத்தும் நிறுவனங்களோடு போராடி வெற்றிபெற்ற ஒருவரைப் பார்க்கிறார்கள். ஒரு சராசரி உழைக்கும் வர்க்க ரசிகனுக்கு, அவர் உருவாக்கிய அற்புதமான இசையைத் தாண்டி, அவர் எதிர்ப்பின், வெற்றியின், கண்ணியத்தின் குறியீடாக இருக்கிறார்.

எனவே, 'பரியேறும் பெருமாள்' (2018) படத்தில் 'நான் யார்' பாடலின் ஒரு முக்கியமான கட்டத்தில் இயக்குநர் மாரி செல்வராஜ் இளையராஜாவின் சுவர் ஓவியத்தைக் காட்டுவதில் வியப்பேதுமில்லை. பல விமரிசகர்களும் இயக்குநர், கதாநாயகனின், இளையராஜாவின் சாதி அடையாளத்தைக் காட்ட முயல்வதாக நினைத்தனர். ஆனால், அது அப்படியல்ல. அங்கு இளையராஜாவின் படம் எதிர்ப்பின், வலிமையின், மாளாது வாழ்தலின் குறியீடாக வருகிறது.

## எதிரிணை நிலையை சரிசெய்தல்

சின்னச் சின்ன விஷயங்களை விமரிசித்து வரும் அவரது விமரிசகர்கள், இளையராஜாவின் பங்களிப்பை ஒட்டுமொத்தமாகப் பார்த்தால் அதில் எதிரிணை நிலை எதுவுமில்லை என்பதைப் புரிந்துகொள்ள முடியும். அவரது இசை மேதைமையும் அவரது அடிப்படையான சாதி எதிர்ப்பு அரசியலும் எப்போதும் இணைந்தே இருக்கின்றன. ஒன்றிலிருந்து ஒன்று பலம் பெறுகின்றன.

இளையராஜாவின் இசையில் எதிரிணை நிலை இருக்கும் என்று குற்றம் சாட்ட முடியும் என்றால், அது ஒருபுறம் மிக ஆழமாகவே இந்த மண் சார்ந்ததாகவும் அதே நேரத்தில் உலகளாவியதாகவும் இருப்பதை வேண்டுமானால் கூறலாம். திருவள்ளுவரின் திருக்குறள் போல இளையராஜாவின் இசை தமிழ் வாழ்வில் ஆழமாக வேரூன்றியது. ஆனாலும் அதில் உலகத்திற்கான ஒரு செய்தியும் இருக்கிறது. உண்மையில் அவரை மற்ற இசையமைப்பாளர்கள் அல்லது கலைஞர்களுடன் ஒப்பிடுவதே அவருக்கு அநீதி இழைப்பதாகும். அவரது வரலாற்று முக்கியத்துவத்திற்கு அவருக்கு மாபெரும் தமிழ் அடையாளங்களான திருவள்ளுவர், ஔவையார் அல்லது இளங்கோவடிகளுக்கு அடுத்த இடத்தைத் தரவேண்டும்.

## இசை என்றும் வாழும்

இளையராஜாவைப் பற்றி முழுமையாகச் சொல்ல வேண்டும் என்பது பரந்த காற்றுவெளி பற்றி முழுமையாகச் சொல்ல முயல்வதற்கு ஒப்பானது. அவரை சிறு பலூன்களில் அல்லது சின்ன உலோக உருளையில் அடைக்க முயல்வது அர்த்தமற்றது. நடுநடுவே சிறிது புகை மூட்டம் வரலாம். பனித் திரை மறைக்கலாம். ஆனால், அவர் அவை அனைத்திலிருந்தும் தப்பி இந்த தமிழ் உலகம் தன்னை இன்றும் என்றும் சுவாசிக்கம்படி காற்றாக மேலே எழுவார்.●

# மூன்று குறுங்கதைகள்

**சுரேஷ்குமார இந்திரஜித்**

**ஓவியம்: ரம்யா சதாசிவம்**

*1.*

## கண்ணாடியைத் துடைக்கும் பையன்

அழைப்பின் பேரில் பீச் ரிசார்ட்டில் நடக்கும் விருந்துக்கு சந்திரமோகன் சென்றிருந்தான். உறவினர் வீட்டு விசேஷம். பீச்சில் இளவயதினரும் குழந்தைகளும் உற்சாகமாக விளையாடிக்கொண்டிருந்தார்கள். அவன் பீச் மணலில் சேரில் உட்கார்ந்திருந்தான். சற்றுத் தள்ளி இருந்த, நாலாபுறமும் திறந்திருந்த குடில்களில் இளம் தம்பதிகள் அமர்ந்து பீர் குடித்துக்கொண்டிருந்தார்கள்.

சந்திரமோகன் கடல் அலைகளில் கால்களை நனைக்கச் செல்லவில்லை. அவனுக்குக் கடல் மகிழ்ச்சியைத் தருவதில்லை. கடலின் பிரமாண்டமும் அடங்காத தன்மையும் அவனுக்கு அச்சத்தைத் தான் தருகிறது. சிறுவர், சிறுமிகள் கடல் அலைகளை ஒட்டி கூக்குரலிட்டு ஓடி விளையாடுவது, கால்களை நனைப்பது ஆகியவற்றைக் கண்காணிப்பதற்கென்றே சில ஊழியர்களை ரிசார்ட்டில் அமர்த்தியிருந்தார்கள். அவர்கள் ரோந்துப் பணியில் இருந்தார்கள். இப்போது அந்தி நேரம்.



வானமும் கடலும் சந்திக்கும் கோட்டில் இருந்து ஐம்பது அடி தூரத்தில் நிலா இருப்பது போல சேரில் உட்கார்ந்திருக்கும் அவனுக்குத் தோன்றியது. மிக அழகான காட்சி. நிலா செந்நிறத்தில் இருந்தது. நிலா வானத்திலிருந்து இறங்கி கடலுக்குள் மறைய இன்னும் நேரமிருந்தது. அந்தி இருள் கவிய ஆரம்பித்தது. அவனுக்கு ரெஸ்ட் ரூம் செல்ல வேண்டும் போல இருந்தது. எழுந்து சென்றான்.

தூய்மையும் அழகும் நிறைந்த கட்டிட அமைப்பு. ரெஸ்ட் ரூமுக்குள் சென்றான். அங்கு ஒரு இளவயதுப் பையன் கையில் இருந்த துண்டுத் துணியால் கை கழுவும் இடத்தில் இருந்த நீண்ட கண்ணாடியைத் துடைத்துக்கொண்டிருந்தான். கண்ணாடியில் அழுக்கு இல்லை. ஆனால், ஆவி படியும் இடத்தைக் கண்டறிந்து துடைத்துக்கொண்டிருந்தான். அனைத்து இடங்களிலும் குளிர்சாதன வசதி கொண்ட கட்டிட அமைப்பு. கதவைத் திறந்தவுடன் எதிரே சுவரில் அகலமான உயரமான கண்ணாடி இருக்கிறது. கை கழுவும் இடத்தில் உள்ள கண்ணாடியையும் சுவரில் உள்ள பெரிய கண்ணாடியையும் துடைக்கும் பொறுப்பு அவனுடையது.

அந்தப் பையன் சிவப்பாக இருந்தான். மீசை அரும்பியிருந்தது. சந்திரமோகனைப் பார்த்துச் சிரித்தான். சந்திரமோகன் அவனை வடநாட்டுக்காரன் என்று



நினைத்தான். அவனிடம், "எந்த மாநிலம்" என்று ஆங்கிலத்தில் கேட்டான். அவன் பதிலுக்கு, "தமிழா" என்று கேட்டான். பிறகு அவனே தன்னை "மலையாளி" என்று சொன்னான்.

"இங்கே எவ்வளவு நேரம் வேலை பாக்கணும்" என்று சந்திரமோகன் கேட்டான்.

"காலையிலே ஒன்பதரை. நைட்டு பத்தரை மணி வரைக்கும்" என்றான்.

"எட்டு மணிநேரம் வேலை இல்லையா?"

"இல்லை, பதிமூணு மணிநேரம்."

"உக்கார முடியாதா?"

அவன் சிரித்தான். "சாப்பிடும்போது உக்காரலாம். இங்கே உக்கார முடியாது."

அவன் புன்னகைத்துவிட்டு ரெஸ்ட் ரூமை விட்டு வெளியேறினான். பையன் கண்ணாடியைத் துடைத்தான். கண்ணாடியில் ஆவி படிவதை அவன் ஒரு நிபுணனைப் போலக் கண்டறிந்து துடைத்துக்கொண்டிருந்தான். முடிவடையாத வேலை. அவனுடைய குடும்பப் பின்னணி, பொருளாதார நிலை அவனை இங்கே தள்ளியிருக்கலாம். வீட்டுடன் ஏற்பட்ட மோதலில் இங்கு வந்து சேர்ந்திருக்கலாம்.

சந்திரமோகன் பீச் மணலில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்திருந்தான். அந்தப் பையனின் வயதில் தான் பாதுகாப்பான சூழ்நிலையில் படித்துக்கொண்டிருந்ததை நினைத்தான். செந்நிற நிலா இறங்கிக்கொண்டிருந்தது.

பொழுது இருளாகிக்கொண்டிருந்தது. கண்காணிப்பு ஊழியர்கள் நீண்ட தொலைவு ஒளி அடிக்கும் டார்ச்லைட்டுடன் கரையிலிருந்தவர்களை வெளியேறச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். சந்திரமோகன் கூட வந்திருந்து பீச் நாற்காலிகளில் உட்கார்ந்திருந்தவர்கள் சாப்பிடச் செல்வதற்காக எழுந்தார்கள். அவனும் எழுந்தான். ரெஸ்டாரண்ட் செல்லும் வழியில் ரெஸ்ட் ரூம் சென்றான்.

உள்ளே சுவரில் இருந்த அந்த அகலமான உயரமான கண்ணாடியைத் துண்டுத் துணியால் அந்தப் பையன் துடைத்துக்கொண்டிருந்தான். சந்திரமோகனைப் பார்த்து அவன் நட்பாகச்

சிரித்தான். இவனும் சிரித்தான். சந்திரமோகன் அந்த ரெஸ்ட் ரூமை விட்டு வெளியேறினான். அந்தப் பையன் இரவு பத்தரை மணிக்குத்தான் அந்த ரெஸ்ட் ரூமை விட்டு வெளியேற முடியும். அவன் சாப்பிடும் இடத்திற்குச் சென்றான். அந்தப் பையன் எப்போதுமே முடிவடையாத தன்னுடைய துடைக்கும் வேலையைத் தொடர்ந்து செய்துகொண்டிருந்தான்.

## 2
## கண்டெய்னர் லாரி

பெரியவர் சுந்தரமும் இளைஞன் சேகரனும் பஸ்ஸில் சென்று கொண்டிருந்தார்கள். அவர்கள் விழுப்புரம் செல்ல வேண்டியிருந்தது. முகவரி இருந்தது. தேடி அந்த முகவரியைக் கண்டுபிடிக்க வேண்டும். தன்னுடைய தம்பி தணிகாசலத்தின் மகன் இருக்கும் இடத்தைத் தேடியே சேகரனை அழைத்துக்கொண்டு வந்திருக்கிறார் சுந்தரம்.

சுந்தரத்திற்குத் திருமணமாகவில்லை. அவருக்கு ஒரே தம்பி. அவர் இறந்து பல ஆண்டுகள் ஆகிவிட்டன. அவருடைய துரதிருஷ்டம், திருமணமான சில மாதங்களிலேயே மனைவியின் வயிற்றில் குழந்தை இருக்கும்போதே அவர் இறந்துவிட்டார். சுந்தரம் திருமணத்தை விரும்பவில்லை. உண்மையில் பெண்ணுடன் வாழ்வதை நினைக்கும்போது அவருக்குப் பயம்தான் ஏற்பட்டது. தன்னிடம் உடற்குறைபாடு இருக்கிறதோ என்ற எண்ணம் அவருக்கு அடிக்கடி ஏற்படும்.

குடியிருந்த வீட்டை விலைக்கு வாங்கிவிட்டார். அரசு மேல்நிலைப் பள்ளியில் பூகோளவியல் ஆசிரியராக இருந்தார். பணியிலிருந்து ஓய்வுபெற்றுவிட்டார். சேகரன் அவருக்குத் தூரத்து உறவினன். சேகரனின் குடும்பம் சுமாரான பொருளாதார நிலையில் இருக்கிறது. சேகரனுக்குச் சரியான வேலை அமையவில்லை. சேகரனின் வீட்டிற்குச் சென்று காலையிலும் மதியமும் சாப்பிடுவார். இரவில் வெளியே சாப்பிட்டுக்கொள்வார். உடல்நலமில்லை என்றால் சேகரனும் அவன் குடும்பத்தினரும் கவனித்துக்கொள்வார்கள். அவர்கள் வீட்டில் சாப்பிடுவதற்கு சுந்தரம் ஒரு தொகையைக் கொடுத்துவிடுவார். மருத்துவமனைக்குச் செல்லும்போது சேகரன் கூடச் செல்வான். உறுதுணையாக இருப்பான்.

சுந்தரத்திற்கு வயது எண்பதைத் தாண்டிவிட்டது. மூச்சுவிடச் சிரமப்படுகிறார். 'எப்போதாவது மரணம் ஏற்படத்தான் செய்யும். இந்த வீட்டை என்ன செய்வது. வங்கியிலும் கணிசமான பணம் இருக்கிறது. அதை என்ன செய்வது' என்றெல்லாம் அவர் யோசித்தபோது அவருடைய தம்பி மகனே சட்டப்படியான வாரிசு என்று நினைத்தார். அந்தச் சட்டப்படியான வாரிசை எப்போதோ அவர் பார்த்ததுதான். பல ஆண்டுகளாகத் தனக்கு உதவியாக இருக்கும் சேகரனுக்கு எழுதி வைக்கலாம். ஆனால், அவருக்கு மனம் ஒப்பவில்லை. இப்போது முகவரியைக் கண்டறிந்து அந்தத் தம்பி மகனைக் காண சேகரனை அழைத்துக்கொண்டு பஸ்ஸில் சென்றுகொண்டிருக்கிறார்.

ஊர் நெருங்கிக்கொண்டிருக்கும்போது அவருக்கு மனத்தில் தடுமாற்றமும் குழப்பமும் ஏற்பட்டது. சட்டப்படியான வாரிசு என்பதைத் தவிர வேறெந்தத் தொடர்பும் இல்லாத ஒருவனுக்குச் சொத்தைக் கொடுப்பதா என்று நினைத்தார்.

பஸ் சென்றுகொண்டிருந்தது. எதிரே ஒரு பெரிய கண்டெய்னர் லாரி திருப்பத்தில் திடீரெனத் தோன்றியது. இதை எதிர்பார்க்காத டிரைவர் பிரேக் போட்டார். பஸ் சத்தத்துடன் நின்றது. பஸ்ஸில் இருந்தவர்கள் இருக்கையிலிருந்து முன்னோக்கி விழுந்தார்கள். சுந்தரத்திற்கு என்ன நடந்தது என்று சில நொடிகளுக்குப் பின்தான் தெரிந்தது. அவர் முன்னே விழுந்துவிடாமல் சேகரன் பிடித்துக்கொண்டிருந்தான்.

பயணிகள் கீழே இறங்கி கண்டெய்னர் லாரி ஓட்டிவந்தவனிடம் சண்டைக்குச் சென்றார்கள். "ஹாரன் அடிக்க வேண்டாமா" என்று கேட்டார்கள். குழப்பங்கள் தீர்ந்து பஸ் மீண்டும் கிளம்பியது. சுந்தரத்திற்கு தனது சொத்தையும் பணத்தையும் தன் காலத்திற்குப் பின் சேகரனுக்குச் சேரும் என்று எழுதிப் பதிவு செய்திட வேண்டும் என்று தோன்றியது. நடந்த சம்பவத்தினால் நிலைகுலைந்திருந்த அவர், இருக்கையில் சாய்ந்து சௌகரியமாக உட்கார்ந்துகொண்டார்.

விழுப்புரம் பஸ் நிலையம் வந்தது. பயணிகள் இறங்கினார்கள். சுந்தரமும் சேகரனும் இறங்கினார்கள். முகவரி எழுதியிருந்த சீட்டை சேகரன் எடுத்து சுந்தரத்திடம் கொடுத்தான். அவர் அந்தச் சீட்டை வாங்கவில்லை. அவனையே வைத்திருக்கச் சொன்னார்.

"ஏதாவது சாப்பிட்டுவிட்டு அடுத்த பஸ்ஸில் ஊருக்குத் திரும்பிவிடுவோம்" என்றார் சுந்தரம். "எதுக்குத் தாத்தா" என்றான் சேகரன். "நான் முடிவு செய்துவிட்டேன்" என்று சொல்லி சாப்பிடுவதற்காக ஹோட்டலை நோக்கி சேகரனையும் அழைத்துக்கொண்டு சென்றார்.

## 3
## தாய், மகன், மகள்

ஜான்ஸி அத்தையிடமிருந்து எனக்கு அலைபேசி அழைப்பு வந்தது. பேசினேன். மகனும் மருமகளும்

அவரை வீட்டை விட்டு விரட்டிவிட்டதாகவும் மரத்தடியில் உட்கார்ந்திருப்பதாகவும் உடனே வந்து அவளை பக்கத்து ஊரில் இருக்கும் மகள் வீட்டில் விட்டுவிட்டும்படியும் அத்தை கேட்டுக்கொண்டாள். நான் வருவதாகச் சொன்னேன்.

நான் இங்கிருந்து அவள் இருக்கும் இடத்திற்குக் காரில் செல்ல ஒருமணிநேரம் ஆகலாம். பிறகு பக்கத்து ஊரில் இருக்கும் அவளுடைய மகள் வீட்டிற்குக்கொண்டுசென்று விடவேண்டும். என்ன பிரச்சினை என்று தெரியவில்லை. குடும்பப் பிரச்சினைகளில் என்னால் தலையிட முடியாது. நெருங்கிய உறவில் இல்லாமல் சற்று சுற்று உறவில் அவள் எனக்கு அத்தை. அவள் கிறிஸ்தவர். மாமா தெய்வசிகாமணி இந்து. இருவரும் தனியார் பள்ளியில் ஆசிரியராக இருந்தார்கள். திருமணம் செய்துகொண்டார்கள். இதெல்லாம் அந்தக் காலத்தில் நடந்தது.

என் அம்மா, நான் சிறுவனாகப் பள்ளியில் படித்துக்கொண்டிருக்கும்போது என்னை ஜான்ஸி அத்தை வீட்டிற்கு அழைத்துச் சென்றாள். அழகான வீடு. இவ்வளவு அழகான வீட்டை உறவினர் எவரிடமும் நான் பார்த்ததில்லை. வீட்டைச் சுற்றி மரங்களும் செடிகளும் இருந்தன. கோழிகளும் சேவல்களும் மேய்ந்துகொண்டிருந்தன. வீடு புதிதாக வெள்ளையடித்தது போலிருந்தது. உள் அறைகள் வண்ணத்தில் இருந்தன. உட்கார்ந்திருக்கும் சோபாக்கள், நாற்காலிகள் எல்லாம் எனக்குப் புதியதாகத் தெரிந்தன. சிறு பொம்மைகள் அழகுக்காக வைக்கப்பட்டிருந்தன. ஜான்ஸி அத்தை வெங்காய பஜ்ஜி தயார்செய்து கொடுத்தாள். ருசியாக இருந்தது.

ஜான்ஸி அத்தையும் கைத்தறி புடவை அணிந்து அழகாகத் தோற்றம் தந்தாள். சுவரில் ஜீஸஸ் படம் மாட்டப்பட்டிருந்தது. மாமா சிரித்த முகத்துடன் இருந்தார். இதெல்லாம் பல ஆண்டுகளுக்கு முன் முதன்முதலாகப் பார்த்தபோது ஏற்பட்ட அனுபவம். இப்போது மாமா இறந்து, மகனுடன் வாழ்ந்த அத்தை அவனால் விரட்டப்பட்டுத் தெருவில் உட்கார்ந்திருக்கிறாள்.

நான் ஒரு டாக்ஸி அமர்த்தி அவள் சொன்ன இடத்திற்கு விரைந்தேன். மரத்தடியில் ஒரு பெட்டியுடன் அத்தை அமர்ந்திருந்தாள். என்னைப் பார்த்ததும் மகனையும் மருமகளையும் திட்டினாள். மகள் இருக்கும் இடத்தைக் கேட்டேன். அந்த இடத்தை அடைய ஒன்றரை மணிநேரம் ஆகலாம். பின் இருக்கையில் அத்தையை அமரச் சொல்லி முன் இருக்கையில் நான் அமர்ந்துகொண்டேன். கார் சென்றுகொண்டிருந்தது. பழைய கதைகளையெல்லாம் இழுத்து ஏதோ சொல்லிக்கொண்டிருந்தாள். நான் சரியாகக் கவனிக்கவில்லை.

பெட்டியைத் திறந்து, பிரேம் போட்ட கருப்பு வெள்ளைப் புகைப்படத்தை என்னிடம் கொடுத்தாள். மாமவுடன் அத்தையும் இருக்கும் மார்பளவு புகைப்படம். இருவரும் இளமையில் இருக்கும்போது எடுத்த அழகான புகைப்படம். நான் பார்த்துவிட்டு திரும்பக் கொடுத்தேன்.

“இவர் இருக்கற வரைக்கும் எனக்கு ஒரு குறையும் இல்லை. பெத்து வளத்த பிள்ளை அன்பில்லாம இருக்கான்” என்றாள்.

“நாம வர்றதை மகள்கிட்டே சொல்லவேண்டாமா” என்றேன்.

“போன்லே சொன்னா சரியா வராது. நேர்லே போயி நின்னா, உள்ளே வராதேன்னு சொல்லியிருவாளா” என்றாள்.

எனக்கு அத்தையை மகள் ஏற்றுக்கொள்ளவில்லை என்றால் என்ன செய்வது என்ற குழப்பம் ஏற்பட்டது. கார் மகள் வீட்டில் முன் நின்றது. வீட்டை ஒட்டி அமைந்திருந்த சிமெண்ட் பெஞ்சில் உட்கார்ந்திருந்த மகள் வீட்டு வாசலில் கார் வந்து நிற்பதை ஆச்சரியமாகப் பார்த்தாள். நான் முதலில் காரைவிட்டு இறங்கி அவளைப் பார்த்துப் புன்னகைத்தேன். விசேஷ வீடுகளில் என்னைப் பார்த்த நினைவு ஏற்பட்டிருக்க வேண்டும். அவளும் புன்னகைத்தாள். ஜான்ஸி அத்தை பெட்டியுடன் காரிலிருந்து இறங்கினாள். மகள் இதை எதிர்பார்க்கவில்லை.

“இப்படி திடீர்னு வந்து நின்னா நான் என்ன செய்றது. எங்க வீட்டுக்காரரை எப்படி சமாளிக்கிறது” என்றாள்.

“கோவிச்சுகாதேடி. ரெண்டு நாள்லே உன் அண்ணன் கோபம் தணிஞ்சுரும். நான் போயிருவேன்” என்றாள் ஜான்ஸி அத்தை. இப்படிச் சொல்லிக்கொண்டே வீட்டினுள் நுழைந்துவிட்டாள். திரும்பிப் பார்க்கவில்லை. மேற்கொண்டு பிரச்சினைகளில் சிக்கிக்கொள்ள வேண்டாம் என்று நினைத்து, மகளிடம் சொல்லிக்கொண்டு நான் காரில் ஏறினேன். வீட்டுக்குள் சென்ற அத்தை வெளியே வரவில்லை.

நான் காரில் என் இடத்திற்குத் திரும்பினேன். அடுத்த நாள் அலைபேசியில் ஜான்ஸி அத்தை கூப்பிட்டாள். நான் எடுக்கவில்லை. இரண்டு தடவை அழைப்பு மணி அடித்து ஓய்ந்தது. சற்று நேரங்கழித்து மூன்றாவதாக அழைப்பு மணி அடித்தது. சிக்கலில் மாட்டிக்கொள்வேன் என்று தோன்றியது. நான் அலைபேசியை எடுக்கவில்லை. வருத்தமாக இருந்தது.

சுரேஷ்குமார இந்திரஜித்
<sureshkumaraindrajith@gmail.com>

# சமத்துவத்தை வலியுறுத்துவதே எனது படங்களின் மையப் பண்பாக இருக்கிறது

**விம் வெண்டர்ஸ்**

**தமிழில்: ராம் முரளி**

எண்பது வயதை நெருங்கிக் கொண்டிருக்கும் ஜெர்மனிய இயக்குநரான விம் வெண்டர்ஸ் தொடர்ந்து படைப்பாக்கச் செயல்பாடுகளில் தீவிரத்துடன் ஈடுபட்டு வருகிறார். Perfect Days திரைப்படமும் Anselm ஆவணப்படமும் அவரது சமீபத்திய படைப்புகள்.

Perfect Days கழிவறைகளைச் சுத்தம் செய்யும் ஒருவரின் அன்றாட வாழ்க்கைத் தருணங்களைப் பதிவு செய்கிறது. தொழில்முறையாக வாழ்வாதாரத்திற்காக அவர் அப்பணியில் ஈடுபட்டு வருகிறார் என்றாலும் அவர் தனது அறையைப் பராமரிக்கும் விதம், ஃபால்க்னர் உள்ளிட்ட எழுத்தாளர்களை வாசிப்பது, இசையில் தனித்துவம் மிக்க ரசனையைக் கொண்டிருப்பது, புகைப்படக் கலையின் மீதான அவரது ஆர்வம் ஆகியவை அச்சூழலுக்கு அவர் அந்நியமானவர் எனும் அறிதலைக் கிளர்த்துவதாக இருக்கின்றன. எனினும், வேறொருவராக வாழும் இச்சூழலில் இந்தச் சின்ன சின்ன கண்டுபிடிப்புகள்தான் அவரது வாழ்க்கையை முன்னகர்த்துவதாகவும் இருக்கின்றன. வார்த்தைகள் அவசியமற்ற ஒரு தனியுலகில் செடிகளுடனும் மரங்களுடனும் சூரியக் கதிர்களுடனும் சிறுவர்களுடனும் ஒலிகளுடனும் அகவயமாகப் பிணைக்கப்பட்டவராகவும் இந்தப் பிணைப்புகளே அவரது தற்காலத்திய வாழ்க்கையின் சாரமாகவும் இருக்கின்றன. இதில் ஏதோவொரு சிறு தொந்திரவு உண்டாகும்போதும் அவர் பதற்றமடைந்துவிடுகிறார்.



வாழ்க்கையின் எளியத் தருணங்களையும் அத்தருணங்களில் உண்டாகும் சிறுசிறு சந்தோஷங்களையும் எளிமையின் பிரமாண்டத்தையும் அதனிடம் சரணாகதி அடைவதையும் ஹிராயமா எனும் பாத்திரத்தின் வழியே விம் வெண்டர்ஸ் Perfect Days திரைப்படத்தில் துலக்கியிருக்கிறார். கேன்ஸ் திரைப்பட விழாவில் இத்திரைப்படத்திற்காகச் சிறந்த நடிகர் விருதை கோஜி யகுசோ வென்றிருக்கிறார்.

Anselm ஆவணப்படம் சர்ச்சைக்குரியவராகக் கருதப்படும் ஜெர்மனிய ஓவியரும் சிற்பக் கலைஞருமான அன்செல்ம் கெயிஃபெரின் கலைச் செயல்பாடுகள் குறித்தது. சமீபத்திய படைப்புகளான இவ்விரு ஆக்கங்கள் குறித்தும் Progressive இதழில் விம் வெண்டர்ஸ் பகிர்ந்தளித்த பதில்களே இங்கு மொழியாக்கம் செய்யப்பட்டிருக்கின்றன.

- ராம் முரளி

**அமெரிக்காவில், பெரும்பாலும் குற்றவியலை மையப்படுத்தும் திரைப்படங்களும் சூப்பர் ஹீரோக்களை மையப்படுத்தும் திரைப்படங்களும் உருவாக்கப்பட்டு வரும் ஒரு காலத்தில் வாழ்ந்து வருகிறோம். அப்படியிருக்கும்போது பாட்டாளிவர்க்கத்தைச்சேர்ந்தநாயகன் குறித்த திரைப்படத்தை உருவாக்க ஏன்**



முடிவுசெய்தீர்கள்?

ஏனெனில், கதையின் போக்கில் அவனும் ஒரு சூப்பர் ஹீரோவாக ஆகிறான் இல்லையா! [சிரிக்கிறார்]. ஒரு கட்டுப்படுத்தப்பட்ட வாழ்க்கைச் சூழலில் இருக்கும் அவன் சில அசாதாரணமான செயல்களையும் செய்கிறான். இன்றைய காலத்தில் சந்தோஷமாக வாழ்வதும் தன்னிடம் இருப்பவற்றைப் புகாரின்றி ஏற்றுக்கொள்வதும் சூப்பர் ஹீரோவின் பண்பு; இல்லையெனில், வேறு எதைத்தான் சூப்பர் ஹீரோக்கள் செய்வார்கள் என்று எனக்குத் தெரியவில்லை.

உங்களுடைய படைப்புகளில் வர்க்கம் என்னவிதமான பங்களிப்பைச் செய்கிறது?

மக்கள் அனைவரும் சமமானவர்கள் எனும் அடிப்படையில்தான் எனது அனைத்துத் திரைப்படங்களும் உருவாக்கப்படுகின்றன. சமத்துவம் என்பது எனது எல்லா திரைப்படங்களிலும் முதன்மைப் பண்பாகச் செயல்படுகிறது. Wings of Desire திரைப்படத்தில் வருகின்ற தேவதைகள் இதைத் தெளிவாக உணர்த்துகின்றன. மக்கள் எல்லோரும் மக்கள்தான் என்பதை அவை புலப்படுத்துகின்றன. அதில் மேலாண்மையோ கீழிறக்கமோ இல்லை. அவர்கள் முக்கியமானவர்களோ முக்கியமற்றவர்களோ இல்லை. இந்தத் திரைப்படத்தில் ஹிராயமாவும் அதையேதான் பார்க்கிறான். கழிவறைக்கு அருகில் வசிக்கும் வீடற்ற நபரைப் பார்ப்பதைப் போலவேதான், அவனை ஒருபோதும் பொருட்படுத்தாத வசதிப் படைத்தவர்களையும் பார்க்கிறான். ஹிராயமாவைப் பொருத்தவரையில், எல்லா மனிதர்களும் ஒரேபோலவே பார்க்கவும் மதிக்கப்படவும் வேண்டும். அவன் எல்லோருக்கும் ஒரேவிதத்தில்தான் மதிப்பளிக்கிறான். என்னைப் பொருத்தவரையில், பிரஞ்சு புரட்சியில் சமத்துவம்தான் முக்கியமானது. சுதந்திரமோ சகோதரத்துவமோ அல்ல.

Perfect Days திரைப்படம் டி சிகா, ரோஸாலினி ஆகியோர் போருக்குப் பிறகு உருவாக்கிய இத்தாலிய நியோ ரியலிசத் திரைப்படங்களை நினைவூட்டுவதாக இருந்தது. அப்படங்களின் தாக்கம் உங்களின் மீதோ PerfectDays திரைப்படத்தின் மீதோ உள்ளதா?

அரிதாகவே குறிப்பிடப்படுகின்ற அமெரிக்க இயக்குநரான ஃபிரான்க் காப்ராவையும் நீங்கள் சேர்த்துக்கொள்ளலாம். ஆனால், இத்திரைப்படத்தை உருவாக்கும்போது உண்மையாகவே எங்கள் மனதில் இருந்த இயக்குநர் யாரென்றால் ஜப்பானின் தலைசிறந்த இயக்குநர்களில் ஒருவரான யாசுஜிரோ

ஓஸு அவர்கள்தான். ஹிராயமா எனும் பெயரே அவர் உருவாக்கிய Tokyo Story [1953] படத்தில் வருகின்ற பிரதான கதாபாத்திரத்தின் பெயர்தான். திரைப்படங்கள் சார்ந்த எனது அனுபவத்தில் மிக முக்கியமான படம் அது.

Perfect Days ஓஸுவுக்கு அர்ப்பணிக்கப் பட்டிருக்கிறதா?

ஆமாம்.

'வளமான முன்காலத்தைக் கொண்ட ஒருவன் வர்க்கரீதியாக மிக அடிநிலைக்குத் தள்ளப்பட்டிருப்பதே' இத்திரைப்படத்தின் மையச் சரடு என்று பத்திரிகைக் குறிப்பில் இருந்தது. அவ்வகையில் 1970களில் வெளிவந்த Five Easy Pieces திரைப்படத்தையும் இது எனக்கு நினைவூட்டியது.

ஹிராயமாவிடம் ஒரு பழைய பழுதடைந்த வேனும் அதில் ஒரு கேஸட் பிளேயரும் மட்டுமே உள்ளது. அதில் அவன் இசையைக் கேட்கிறான். நல்லவேளையாக 70, 80களில் தன்னிடம் இருந்த கேஸட்களை அவன் தொலைத்திருக்கவில்லை. இசை இங்குக் கதையின் ஓர் அங்கமாகச் செயல்படுகிறது. வசனம் அதிகம் இதில் பயன்படுத்தப்படவில்லை. சில சமயங்களில் கதைச் சொல்லலே இசையின் வாயிலாகத்தான் கையாளப்பட்டிருக்கிறது. ம்ம்ம். ஆமாம். ஹிராயாமாவுக்கு முற்றிலும் மாறுபட்ட வேறொரு கடந்த காலம் இருந்திருக்கிறது. நீங்கள் Five Easy Pieces திரைப்படத்தை நினைவு கூர்ந்தது எனக்குப் பிடித்திருக்கிறது. அது எனக்கு மிகப் பிடித்தமான படங்களில் ஒன்று. அது மிகச் சிறந்த சாலைமையத் திரைப்படங்களில் ஒன்றும்கூட. படத்தின் இறுதியில் ஜாக் நிக்கல்சன் டிரக்கில் ஏறுவது திரைப்பட வரலாற்றின் மிக முக்கியமான தருணங்களில் ஒன்று.

இசை, ஹிராயமாவின் வாழ்க்கையிலும் இருப்பதை வைத்து வாழும் அவன் போக்கிலும் ஓர் அங்கமாகவே இருக்கிறது. அவனிடம் அதிகத் தொழில்நுட்பச் சாதனங்கள் எதுவும் இல்லாததால் அவன் கேஸட்களில் இசை கேட்கிறான். அவனது அறையில் ஒரு தொலைக்காட்சி கூட இருப்பதில்லை. டிஜிட்டல் மீடியாவில் இருந்தும் அவன் விலகியே இருக்கிறான். இருப்பினும், அவனிடம் சில உபகரணங்கள் இருக்கவே செய்கின்றன. ஒரு கேமராவும் இந்தக் கேஸட் பிளேயரும். இவையே அவனுக்குத் தேவையான அனைத்தையும் வழங்கிவிடுகின்றன. அவனுக்கு விருப்பமான சிலவற்றை அவன் படம்பிடிக்கிறான். பொதுவாக மரங்களையும் மரங்களுக்குள் ஊடுருவும் ஒளியையுமே அவன் படம்பிடிக்கிறான். இதை ஜப்பானியர்கள் Komorebi என அழகாகச் சுட்டுகிறார்கள். படம் நெடுக அவனைச் சந்திக்கும் இளம் தலைமுறையினர் அவனையும் அவனது உடைமைகளையும் காலாவதியாகிவிட்ட ஒன்று என்றே கருதுகின்றனர். கேஸட்டை அந்தப் பிளேயரில் எப்படிச் சொருக வேண்டும் என்றே அவர்கள் அறிந்திருப்பதில்லை. எனினும், அதில் ஏதேவொன்று இருப்பதாக அவர்கள் உணருகின்றனர். இறுதியில், அது அமைதியாகவே முடிந்துவிடுகிறது. அந்தக் கேஸட்களை மதிப்புமிக்க பழம்பொருட்கள் என்று நம்மால் விற்பனை செய்ய முடியும். பெரும் பணம் கொடுத்து அவற்றை வாங்கிக்கொள்ள ஆட்கள் இருக்கிறார்கள். அது புனைவு அல்ல. அத்தகைய கேஸட்களை விற்று, அதில் கிடைக்கும் வருமானத்தின் மூலம் டோக்கியோ நகரத்திற்கான உங்கள் அடுத்த பயணத்தையே திட்டமிட முடியும்.

லூயி ரீடின் 'Perfect Day' பாடல் உங்கள் திரைப்படத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கிறதே?

ஹிராயமா அந்தப் பாடலைக் கேட்கும் காட்சியைப் படமாக்கிய தினத்தில்தான், இத்திரைப்படத்தின் தலைப்பு Perfect Days என்று இருக்கப்போவதை நாங்கள் முடிவுசெய்தோம். திரைக்கதையை எழுதிய போதும், படப்பிடிப்பு தினங்களின் துவக்கத்திலும் அதன் தலைப்பு Komorebi என்பதாகவே இருந்தது. ஹிராயமா தரையில் படுத்துக்கொண்டு இந்தப் பாடலைக் கேட்கும் காட்சியைப் படமாக்கியபோது நானும் இத்திரைப்படத்தின் இணை எழுத்தாளருமான டாகுமா டக்காஷியும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு, எங்களுக்குள் ரகசியமாக இதுதான் இத்திரைப்படத்திற்கு ஏற்ற அசலான தலைப்பு என முணுமுணுத்துக் கொண்டோம். அதே சமயத்தில், இப்பாடலையும் தலைப்பையும் இவ்வகையில் பயன்படுத்தினால் அதற்கான உரிமத்தை வாங்க வேண்டுமென்கிற முன்யோசனையும் எங்களுக்கு இருந்தது. நல்லவேளையாக எவ்விதச் சிரமமும் இல்லாமல் எங்களால் அவற்றுக்கான உரிமத்தைப் பெற முடிந்தது. படத்தில் நீங்கள் கேட்கும் அனைத்துப் பாடல்களையும் படப்பிடிப்புத் தருணங்களிலும் நாங்கள் ஒலிக்கச் செய்தோம். படத்தின் இறுதியில், அவன் கேட்கும் Feeling Good பாடல் நினா சிமோனுடையது. அந்தப் பாடலையும் ஒலிக்கச் செய்துதான் அக்காட்சியைப் படம்பிடித்தோம். முழு படமும் இவ்வகையில்தான் உருவாக்கப்பட்டது. எப்போதுமே நாங்கள் படத்தில் இடம்பெறும் பாடலைத்தான் அந்தந்தக் காட்சிகளின் படப்பிடிப்பின்போதும் ஒலிக்கச் செய்தோம். அது எங்களுக்குக் கதையைச் சொல்வதற்கும் இசையை எங்கள் கதைச் சொல்லும் செயல்முறையில் ஓர் அங்கமாக மாற்றுவதற்கும் பேருதவி செய்தது.

ஹிராயமாவின் கதாபாத்திரம் Five Easy Pieces திரைப்படத்தில் வருகின்ற ஜாக் நிக்கல்ஸனின் கதாபாத்திரத்துடன் பெரிதும் ஒத்துப்போகிறது. அதிலும் அவன் மிக வசதியான குடும்பத்தைச் சேர்ந்தவனாக இருக்கிறான். ஆனால், சில காரணங்களால் அவனது ஆர்வமான


Perfect Day

**இசைத்துறையில் உள்நுழையாமல் வேறொரு வாழ்க்கையைத் தேர்வுசெய்துகொள்கிறான். இதில் ஹிராயமா கழிவறைகளைச் சுத்தம் செய்யும் பணியைத் தேர்வுசெய்கிறார். படத்தில் சொல்லப்படாத அவரது முன்கதைஎன்னவென்று சொல்ல முடியுமா?**

இந்த வகையில் அப்படி வழங்க நான் விரும்பவில்லை. ஹிராயமா கதாபாத்திரத்தில் நடித்திருந்த கோஜி யகுசோவுக்கு அப்படியான முன்கதையுடன் கூடிய திரைக்கதையை வழங்கினேன். அவர் அதை வாசித்திருக்கிறார் என்பதால் அவருக்கு அது தெரியும். ஆனால், இதைத் தவிர படத்தைப் பார்ப்பவர்கள் அவர்களாகத் தங்களுடைய கற்பனையின் மூலம் அவனுடைய முன்கதையைக் கட்டமைத்துக்கொள்ள வேண்டும் என்றே விரும்புகிறேன். உங்களுக்கு இதை மட்டும் சொல்கிறேன்: அவன் ஒரு தொழிலதிபர். பெரும் பணக்காரன். ஆனால், மகிழ்ச்சி இல்லாதவன். அதனால் குடியின் பிடியில் வீழ்ந்து மெல்ல மெல்ல தன்னையே அவன் தகர்த்துக்கொள்கிறான். ஒருநாள் இந்த அலங்கோலமான ஹோட்டல் அறையில் அவன் கண் விழிக்கிறான். அங்கு எப்படி வந்தோம் என்பதை அவன் அறிருந்திருப்பதில்லை. என்ன நடந்தது என்றோ யாருடனாவது பாலியல் உறவுகொண்டோமா என்றோ அவன் அறிந்திருப்பதில்லை. அவன் வாழ்க்கைசீரழிந்துள்ளது என்று அவன் நினைக்கிறான். அச்சூழலை அவன் விரும்பவில்லை. உண்மையில் அச்சூழலை முடிவுக்குக் கொண்டுவரும் தீர்மானத்தைத்தான் கையில் எடுக்கிறான். ஆனால், அதியற்புதமாக, அதிகாலையில் அவனுக்கெதிரில் இருக்கும் சுவரில் சூரிய ரேகைகள் பட்டுப் பிரதிபலிக்கின்றன. ஜன்னலுக்கு அருகில் இருக்கும் மரத்தின் மீதும் அவ்வொளி பிரகாசிக்கிறது. இலைகளுக்கும் சூரிய ஒளிக்கும் நிழல்களின் அசைவுகளுக்கும் இடையில் ஒரு நாடகம் அரங்கேறுகிறது. இதைப் பார்க்கும் அவன் அழத் தொடங்கிவிடுகிறான். இவ்வளவு அழகான ஒன்றை இதுவரை அவன் பார்த்ததே இல்லை. ஒருவேளை அவன் பார்த்திருக்கலாம், ஆனால், அதை அவன் கவனத்துடன் அணுகியதில்லை. அவனுடைய இருத்தலியல் சிக்கலுக்கான பதில் அதுதான் (அவற்றைக் கவனிக்கும் ஒருவனாக மாறுவது) என்று அவன் திடீரென்று கண்டுபிடிக்கிறான். அவன் தனது விலையுயர்ந்த காரையும் தனது வேலையையும் துறந்துவிடுகிறான். முதலில் ஒரு தோட்டக்காரனாகவும் அதன்பிறகு, கழிவறைகளைப் பாதுகாக்கக் கூடியவனாகவும் மாறிவிடுகிறான். ஏனெனில் அவையெல்லாம் சிறிய சிறிய பூங்காக்களில் இருக்கின்றன. அவற்றைப் பராமரிப்பதற்கு ஏற்ற நபர் அவன்தான் என்பதை நிர்வாகம் கண்டுகொள்கிறது. இதுதான் அவனது முன்கதை. நான் அதைத் தெரிவித்துவிட்டேன் இப்படிச் சொல்வதில் எனக்கு விருப்பமில்லை என்றாலும்கூட.

**ஆவணப்படங்களையும் திரைப்படங்களையும் இயக்குகின்ற ஒருசில இயக்குநர்களில் நீங்களும் ஒருவர். ஏன் அப்படி இரண்டின் உருவாக்கத்திலும் ஈடுபடுகிறீர்கள்?**

உண்மையைத் தெரிந்துகொள்ள விரும்புகிறீர்களா? ஆமாம், தெரிந்துகொள்ளத்தான் விரும்புகிறீர்கள். மிக மிகக் குறைவான விஷயங்களைக் கையாளும்போதுதான் நான்


Anselm

சிறப்பாகச் செயல்படுவதாக உணர்கிறேன். புனைக்கதைகளோ திரைக்கதையோ இல்லாமல் செயல்படும்போதுதான் என்னால் சிறந்த முறையில் செயல்பட முடிகிறது. என்னுடைய Paris, Texas திரைப்படத்தை அடிப்படையான ஒரு திரைக்கதை இல்லாமல்தான் உருவாக்கினேன். Wings of Desire திரைப்படத்தையும் அடிப்படையான ஒரு திரைக்கதை இல்லாமல்தான் உருவாக்கினேன். படமாக்கச் செயல்பாட்டின்போதுதான் அதன் எழுத்தாக்கப் பணி மெல்ல மெல்ல வளர்ச்சியுற்றது. Kings of the Road திரைப்படத்திற்கு முதலில் அரை பக்கத் திரைக்கதையே எழுதப்பட்டிருந்தது. மற்றவை அனைத்தும் படைப்பாக்கச் செயல்பாட்டில் உருதிரண்டவையாகவே இருந்தன. சாலையை மையப்படுத்தும் கதைச் சொல்லலை நான் பெரிதும் விரும்புகிறேன். ஏனெனில் சாலை மட்டும்தான் நம்மை படத்தின் காட்சி வரிசையின்படியே படம்பிடிக்க அனுமதிக்கும். அவ்வரிசையில் படமாக்கும்போது, கதையை உங்களுக்கு ஏற்றபடி எப்படி வேண்டுமானாலும் வளைத்துக்கொள்ளும் சுதந்திரம் உங்களுக்கு இருக்கிறது. படத்தின் முடிவை முதல் வாரத்தில் படம்பிடித்துவிட்டால், ஒருபோதும் அதை மாற்றுவதற்கான சாத்தியம் நமக்கு இருக்கப்போவதில்லை. படப்பிடிப்பைத் துவங்கிய பிறகு, அதை எனக்கு ஏற்றாற்போல வளைத்துக்கொள்ளும் முறையை நான் பெரிதும் விரும்புகிறேன். அதனாலேயே பலவற்றையும் நான் மறுக்க வேண்டியிருந்தது. 90களிலும் சமீப காலங்களில் மிக அதிகமாகவும் பலவற்றையும் நான் மறுக்கவே செய்திருக்கிறேன். திரைப்படங்கள் ரொம்பவே திட்டமிட்டு உருவாக்கப்படுகின்றன. மீண்டும் மீண்டும் திருத்தியெழுதப்படுகின்றன. அவற்றை உருவாக்குவதற்குப் பணம் செலவு செய்பவர்களுக்கு, படப்பிடிப்பு துவங்கும் முன்பாக இறுதியில் தங்களுக்கு என்ன கிடைக்கப் போகிறது என்கிற புரிதல் நிச்சயமாக இருந்தாக வேண்டும். நாம் அதை அவர்களுக்குத் தெளிவுப்படுத்த வேண்டும். இந்த முறையியல் எனக்கு ஒத்துவராது என்று கருதுகிறேன். என்னளவில் இனிமேல் அதற்குச் சாத்தியமும் இல்லை. ஆனால், ஆவணப்படங்களில் இது சாத்தியம் என்று பின்னர் உணர்ந்தேன். யாரும் ஆவணப்படங்களுக்குத் திரைக்கதை எழுதும்படி உங்களை நிர்பந்திப்பதில்லை. எனினும், இப்போது சிலர் அதற்கும் திரைக்கதைகள் எழுதுகிறார்கள். எனக்கு அதிகளவிலான சுதந்திரம் இருக்கிறது என்கிற காரணத்தினாலேயே மீண்டும் மீண்டும் ஆவணப்படங்களை உருவாக்கினேன். புனைவுப் படங்களை மட்டுமே உருவாக்கியுள்ள இயக்குநர்கள் தமது சிந்தனையை இன்னும் தெளிவாக்கிக்கொள்ள ஆவணப்படங்களையும் உருவாக்க வேண்டும் என்று விரும்புகிறேன்.

**உங்கள் சமீபத்திய ஆவணப்படம் Anselm. அன்செல்ம் கெய்ஃபெரின் கலைப்படைப்புகளை**

(தொடர்ச்சி 27ஆம் பக்கம்)



# அம்ருதா பதிப்பகம்

## புதிய வெளியீடுகள்



விலை.150/- பக்கங்கள்.140




விலை.250/- பக்கங்கள்.256



விலை.150/- பக்கங்கள்.128



விலை.140/- பக்கங்கள்.140

**நேரில் வந்து புத்தகங்களை வாங்குபவர்களுக்கு 10% தள்ளுபடி வழங்கப்படும்**

2ஆம் விரிவாக்கம்,சி.ஐ.டி. நகர் – கிழக்கு, நந்தனம், சென்னை – 600035.
போன்: 044 – 24353555, 94440 70000.

24 ஆம் பக்கத் தொடர்ச்சி)

**வர்ணிக்க எனக்கு வார்த்தைகள் போதவில்லை. உங்களால் அவற்றை விவரிக்க முடியுமா?**

இல்லை.என்னாலும்முடியாது.அதுமிகவும்பரந்த அளவிலானதுஎன்பதோடுரொம்பவும்சிக்கலானதும் கூட.இந்தப்பிரபஞ்சத்தில்தனக்குதோன்றும்எதையும் வரைவதற்கு அஞ்சாத ஒரே ஓவியர் அவர்தான் என்று கருதுகிறேன். ஒவ்வொன்றுமே கலைப் படைப்பாக மாற்றுவதற்குச் சாத்தியமுள்ளதுதான் என்றும் எதை வேண்டுமானாலும் வரையலாம் என்றும் அவர் நினைக்கிறார். பிரபஞ்சத்தையும் (அதோடு மேக்ரோஸோமையும் மைக்ரோஸோமையும்), அறிவியல்மற்றும்வரலாற்றையும்தொன்மங்கள்மற்றும் மதங்களையும் பிற எல்லாவற்றையும் கூட வரைய முடியும் என்று அவர் கருதியிருக்கிறார். ஓவியத்தால் என்ன செய்ய முடியும் என்பது குறித்த பரந்த யோசனைகளையும் தைரியத்தையும் கொண்டிருந்த வேறு எவரையும் நான் அறிந்திருக்கவில்லை. நாங்கள் இருவருமே போருக்குப் பிறகு 1945ல் ஜெர்மனியில் பிறந்தோம். அதனால், வரலாறு இல்லாத ஒரு நாட்டில் சொல்லப்படும் அதே கதைகளுடன்தான் இருவரும் வளர்ந்திருக்கிறோம். வரலாறோ கடந்த காலமோ இல்லாத ஒரு நாட்டில் எங்களுக்கான ஓர் உலகத்தை நாங்கள் மறுவுருவாக்கம் செய்ய வேண்டியிருந்தது. கடந்தகால வரலாற்றுத்தன்மையை மிகுந்த தைரியத்துடன் அன்செல்ம் எதிர்கொண்டார். நம்மைச் சுற்றியுள்ள பலரும் அழிக்கவும் மறக்கவும் நடந்தவற்றை மாற்ற முடியா நிலையிலும் இருக்கும் ஜெர்மனியின் வரலாற்றுப் பக்கங்களில் சிலவற்றைத் திறந்து ஜெர்மனியர்களுக்கும் உலகிற்கும் மீண்டும் அவர் வெளிப்படுத்தினார். அவரது கலை எப்படியானது என்பது மக்கள் அனுபவம்கொள்ளும் வகையில் நான் ஒரு படத்தை உருவாக்கியிருக்கிறேன். அவரது கலை குறித்த எனது நிலைப்பாடு அல்ல அது. நான் இதுவரை உருவாக்கிய எதை விடவும் ஒரு பெரும் அனுபவத்தை அப்படைப்பு உருவாக்குவதாக இருக்கிறது. அதனால்தான் அது ஆர்வமூட்டக்கூடியதாக இருக்கிறது.

**ஏன் சில ஜெர்மனியர்கள் அவருடைய படைப்புகளைச் சர்ச்சைக்குரியவையாகப் பார்க்கிறார்கள் என்று சொல்ல முடியுமா? அவற்றில் நாஜி எதிர்ப்புப் பண்பை விளக்க முடியுமா?**

ஃபாஸிசம், நாஜி ஜெர்மனி, இனப் படுகொலை ஆகியவற்றைப் பற்றிப் பேசக்கூடாது என்கிற ஒருமித்த கருத்து நிலவிவந்த 1960, 70களில் அன்செல்ம் அவை குறித்த கருத்துகளை முன்வைக்கலானார். பல ஜெர்மனியர்கள் நாஜிக்களால் தவறாகப் பிரயோகிக்கப்பட்ட தொன்மங்களைக் கையாள்பவராக அவரைக் கருதினார்கள். நாஜிக்கள் ஜெர்மனியின் பல்வேறு கலாச்சாரக் கூறுகளையும் ரொமாண்டிசம் உள்ளிட்ட பத்தொன்பதாம் நூற்றாண்டின் பல்வேறு போக்குகளையும் தன்வயப்படுத்தி அவற்றைத் தமது இயங்குமுறையின் ஒரு கூறாக மாற்றிக்கொண்டனர். நாஜிக்களால்சிதைக்கப்பட்ட அனைத்தையும்மீண்டும் அணுகுவதற்கான வாய்ப்பை உருவாக்குபவராக அன்செல்ம் இருக்கிறார். 'இதுபோன்றவற்றை விரும்புகிறார் என்றால், நிச்சயம் அவரும் ஒரு நாஜியாகத்தான் இருந்தாக வேண்டும்' என்று பலரும் அவரைப் பற்றி நினைத்தார்கள். ஆனால், அவருடைய நோக்கம் என்பது எந்தளவிற்கு ஜென்மனியின் வரலாறும் தொன்மங்களும் கலையும் தவறாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது,சீரழிக்கப்பட்டிருக்கிறது என்பதை வெளிப்படுத்துவதுதான். நாங்கள் மிக ஆழமாகப் புதைத்து அதன் மீது போர்வையை வைத்து மூடியிருந்த ஒன்றைத் தோண்டி அவர் அதன் மூடியைத் திறந்துவிட்டார். மிகுந்த மன தைரியம் உடையவர் அவர். அதனாலேயே உலகத்தில் வேறு எங்கேயும் விட ஜெர்மனியர்களால் அதிகளவில் தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டவராக அவர் இருக்கிறார். அமெரிக்கர்கள்தான் அவரைக் கண்டுகொண்டனர். அதனால் அவருடைய படைப்புகள் நியூ யார்க், சிகாகோ, லாஸ் ஏஞ்சல்ஸ் போன்ற இடங்களில் காட்சிக்கு வைக்கப்பட்டன. வாழ்ந்து வரும் தலைசிறந்த கலைஞர் என அவரைக் கொண்டாடிய அதே நேரத்தில் ஜெர்மனியில் அவர் எந்தளவிற்குச் சர்ச்சைக்குரிய ஒருவராகக் கருதப்படுகிறார் என்பதையும் அவர்கள் உணர்ந்திருந்தனர். ஆனால், அவருடைய படைப்புகளின் மேதமைகளை மதிப்பிட வரலாற்றுடனான அவரது ஈடுபாட்டை அவர்கள் கருத்தில்கொள்ளவில்லை. அல்லது அவர்களுக்கு அந்தப் பளு தேவைப்படவில்லை.

**அடுத்து என்ன செய்யவிருக்கிறீர்கள்?**

ஏற்கெனவே பல வருடங்களாக ஓர் ஆவணப்படத்தை உருவாக்கி வருகிறேன். அதுவொரு நீண்ட காலத் திட்டப்பணியாகும். அதனால், அதை நிறைவுசெய்ய இன்னும் கூடுதலாகச் சில வருடங்கள் தேவைப்படும். பிரிட்ஸ்கர் விருது பெற்றிருக்கும் மிகச் சிறந்த கட்டடவியல் கலைஞர் குறித்தது அந்த ஆவணப்படம். அவர் ஏராளமான வடிவமைப்புகளைச் செய்திருக்கவில்லை என்றாலும், அவரது சமகாலத்திய கட்டடவியல் கலைஞர்களிடம் அத்துறையில் தமக்கு விருப்பமானவர் யாரென்று கேட்டால் எல்லோருமே அவருடைய பெயரைத்தான் சொல்வார்கள். ஆமாம். அவரேதான். சுவிட்சர்லாந்து நாட்டைச் சேர்ந்த பீட்டர் ஜூம்தோர். லாஸ் ஏஞ்சல்ஸ் கவுண்டி மியூசியம் ஆஃப் ஆர்ட்டுக்காக ஒரு கட்டடத்தை அவர் வடிவமைத்து வருகிறார். அவர் மிகவும் தீவிரமானவர். எதைப் பயனுள்ளது என்றும் அவசியமானது என்றும் கருதுகிறாரோ அதை மட்டுமே அவர் கட்டமைக்கிறார். அவரைப் பற்றிய இந்த ஆவணப்படத்தை ஐந்து ஆண்டுகளுக்கு முன்னால் தொடங்கினேன்.

**ராம் முரளி** <raammurali@gmail.com>

# கூலிக்கு மாரடிக்கிறவர்கள்

**இந்திரா பார்த்தசாரதி**

இக்காலத்தில், 'அறிவு ஜீவி' என்றால் ஆங்கிலம் தெரிந்தவர்களை மட்டுந்தான் குறிக்கும் என்ற ஒரு பொதுவான கருத்து நிலவுகின்றது. காரணம், நாம் ஆங்கிலச் சொல்லாகிய 'intellectual' என்பதைக் குறிக்க, 'அறிவு ஜீவி' என்ற சொல்லை உருவாக்கிக் கொண்டோம். சமஸ்கிருத எழுத்துக்குப் பதிலாக, தமிழில் சொல்ல வேண்டுமென்றால், 'அறிவு சீவி' என்று சொல்லலாம், அது ஒரு வகையில் பொருந்துவதாகவும் இருக்கக்கூடும்!

அறிஞர் என்ற அழகிய தமிழ்ச் சொல் இதே கருத்தைத்தான் குறிக்கின்றது. திருவள்ளுவர் 'அறிஞரா' அல்லது 'அறிவு ஜீவியா'? 'அறிஞர்' தான், 'அறிவுஜீவி' இல்லை. காரணம், அவருக்கு ஆங்கிலம் தெரிந்திருக்கக் கூடிய வாய்ப்பில்லை!

தமிழகத்தில், சங்க காலத்தில் புலவர்கள் யாவருமே 'அறிஞர்களாக' அறியப்பட்டனர். அவர் அரசனாக இருக்கலாம், அமைச்சராக இருக்கலாம், பாணராக இருக்கலாம், சங்கு அறுப்பவராக இருக்கலாம், மருத்துவராக இருக்கலாம், கணியராக (விண்மீன் ஆய்வாளர்) இருக்கலாம்; அவர்கள் எத்தொழில் செய்பவராக இருந்தாலும், புலமை மிக்கவராக இருந்தால் அவர்கள் 'அறிஞர்கள்' என்று அடையாளம் பெற்றனர்.

இவ் அறிஞர்களின் கடமை என்ன? யார் தவறு செய்தாலும், அவன் அரசனாக இருந்தாலும், சமூகத்துக்கு ஒவ்வாத காரியம் செய்தால், அதைச் சுட்டிக்காட்டித் திருத்த வேண்டியது அவர்கள் பொறுப்பு.

ஓர் அரசன், நாடு வறட்சியுற்ற காலத்தில் பொது மக்களிடமிருந்து வரி வசூலிக்கக் கூடாது. அதுதான் அக்காலத்திய அரசியல் தர்மம். அவ்வாறு செய்யாமல் அரசன் வசூலித்தானானால், அதைக் கண்டித்து, அவன் செவிகைப்ப, அவன் செய்ய வேண்டிய தர்மத்தை அவனுக்கு உணர்த்தவேண்டிய பொறுப்பு, கவிஞர்களுக்குண்டு. இவ்வாறு



பாடப்படும் பாடல்களின் துறைக்கு 'செவியறிவுறூஉ' என்ற பெயர்.

> 'இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
> கெடுப்பா ரிலானுங் கெடும்'

'உண்மைச் சுடும் என்று பாராமல், அரசன் கேட்க விரும்பவற்றையே சொல்லாமல், அவனுக்கும் மக்களுக்கும் நல்லவனவற்றைக் கூறும் அறிஞர்களுடைய பாதுகாவலில்லாத அரசன், பகைவர் யாருமில்லாமலேயே கெடுவான்' என்பது இக் குறளின் பொருள்.

'அமைச்சர்கள்' என்றால் என்ன பொருள்? 'அமாத்தியா' என்ற சம்ஸ்கிருத சொல்லினின்றும் இது வந்தது.

'நெருங்கியிருப்பவர்கள்' என்றுதான் அர்த்தம். எதற்காக நெருங்கியிருக்க வேண்டும்? ஜால்ரா கொட்ட அல்ல, அரசனுக்குச் சமூக நீதி எதுவோ அதை உணர்த்துவதற்குத் தான். சமஸ்கிருதச் சொல்லாகிய 'அமாத்தியா' என்பதற்கும் இதுதான் பொருள். வள்ளுவர் இப்பொருளில்தான், அமைச்சனை 'உழையிருந்தான்' என்கிறார். 'அருகிலிருப்பவன்' என்று பொருள்படும்.

> 'அறிகொன் றறியான் எனினும் உறுதி
> உழையிருந்தான் கூறல் கடன்'

'அறிந்து சொல்கின்றவர்களுடைய வார்த்தையையும் மதிக்காமல் 'நான்' எனும் செருக்கு என்கிற அறியாமையில் மூழ்கியிருக்கும் அரசனுக்கு, சமூக உண்மை நிலவரங்களை அஞ்சாமல் சொல்ல வேண்டியது அமைச்சர்களுடைய கடமை.'

இக்கால 'அறிஞர்கள்' (அமைச்சர்கள் உள்பட) தங்கள் சமூகப் பொறுப்பை, வள்ளுவர் கூறுவது போல் செயல்படுத்திக் கொண்டு வருகின்றார்களா என்ற கேள்வி எழுகின்றது.



'சர்வாதிகாரம்' என்றால் தடியெடுத்தவன் தண்டல்காரன் என்று பொருள். சர்வாதிகாரியை நெருங்கி இருப்பவர்கள் அவனை முதலில் மக்களிடமிருந்து அந்நியப்படுத்தி, அவன் கேட்க விரும்பவனற்றையே அவன் காது குளிரக் கூறுவர்கள். அவனைப் பற்றியே, அவன் கவனத்தைப் பெறும் பொருட்டு, ஏராளமான புத்தகங்கள் எழுதுவார்கள். பாராட்டுக்கூட்டம்நடத்திக்கொண்டே இருப்பார்கள்.

லூயி பிஷர் என்ற அமெரிக்க ஆசிரியர், 'ஸ்டாலினின் பிறப்பும் இறப்பும்' என்று, சோவியத் யூனியன் அதிபர் ஸ்டாலினைப் பற்றி ஒரு நூல் எழுதியிருக்கிறார். ரஷ்ய கொடுங்கோல் மன்னனை எதிர்த்துப் புரட்சி இயக்கம் நடத்திப் பிறகு தாம் பதவிக்கு வந்ததும் சர்வாதிகாரியாகிவிட்ட ஸ்டாலின் அவர் வாழ்நாள் முழுவதும் விரும்பிப் படித்த நூல்கள், அவருடைய அடிவருடிகளால் எழுதப்பட்ட அவருடைய வாழ்க்கை வரலாற்றுப் புத்தகங்கள்தாம் என்கிறார் லூயி பிஷர்.

ஆள்கின்றவர் அனைவராலும் அணுகத்தக்கவராக இருத்தல் வேண்டும். நேரு ஒரு சமயம் கூறினார்: "இந்த அரசியல் சூழ்நிலையில் இந்த ஸ்தாபன விதிகளை எதிர்த்து, இந்நாட்டின் சாமன்யனோடு என்னால் அளவளாவ முடியவில்லையே என்று என் இயலாமையைக் குறித்து நான் வருந்துகிறேன். என் அருகில் இருப்பவர்களின் துதிகளைக் கேட்டு கேட்டு எனக்கு அலுத்துவிட்டது. சுதந்திரத்துக்கு முன்னால் இது எனக்கு சாத்தியமாயிருந்தது. அப்பொழுது நான் சுதந்திரமாக இருந்தேன்.'

நேரு ஒரு உண்மையான ஜனநாயக வாதியாக இருந்ததால் அவரால் இவ்வாறு சொல்வதற்கான கண்ணியம் அவரிடமிருந்தது. ஆனால், பதவியில் இருக்கும் பெரும்பான்மையோர், பதவிக்கு முன்னால் எப்படி இருந்திருந்தாலும், நாற்காலியில் உட்கார்ந்ததும் அடியோடு மாறிவிடுகிறார்கள். உழையிருப்பவர்களும் மற்றவர்களும் தொடர்ந்து தங்களைப் புகழ்ந்து கொண்டேயிருக்க வேண்டுமென்றுதான் விரும்புகிறார்கள். இப்பொழுது, குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைச் சாடிய ஒரு வெள்ளைக்குடிநாகனார் போன்ற ஓர் அறிஞர் சாத்தியமா? அல்லது ராட்சச விளம்பர ஆவேசங்களைக் கண்டு கூச்சப்பட்ட நேருவின் நாகரிகம், இன்று ஆள்கின்றவர்களிடையே எத்தனைப் பேருக்கு இருக்கிறது? அவர் மகளிடத்திலேயே இல்லாமல் போய்விட்டதே!

வள்ளுவர் இதை 'நாணுடைமை' என்கிறார். இதைப் பரிமேலழகர் அருமையாக விளக்குகிறார். 'சால்பு, பண்பு முதலிய குணங்களால் உயர்ந்தோர் தமக்கு ஒவ்வாத கருமங்களில் நாணுதலுடையாராந் தன்மை'. 'ஒவ்வாத கருமங்கள்' என்பன 'பகட்டு வெளிச்சம், ஆரவாரம், ஆர்ப்பாட்டம், தங்கள் தங்கள் காரியத்தைச் சாதித்துக் கொள்ளக் கூனிக் குறுகும் மனிதரிடம் நட்புப் போன்றன.

'அணியன்றோ நாணுடைமை சான்றோர்க் அஃதின்றேல்
பிணியன்றோ பீடு நடை'.

இந்த 'நாணுடைமை' உள்ளவர்க்குத் தான் 'பீடு நடை' சாத்தியம், 'வேண்டாமைசெருக்கா'வதுபோல!

அகத்தில் பிணைப்பு இல்லாமல் 'முகம் நகப் பாராட்டிப் பேசித் தமக்கு வேண்டியவற்றைச் சாதித்துக் கோள்கின்றவர்கள்தாம் (நம் நாட்டு அரசியல் 'தோழமைக் கட்சிகள்' நினைவுக்கு வருகின்றனவா?) 'உட்பகை' என்கிறார் வள்ளுவர்.

வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு

இறுதியாக ஒரு குறள்

பழுதெண்ணும் மந்திரியிற் பக்கத்துள் தெவ்வோர்
எழுபது கூறு தலை.

தன்னலனையே எண்ணி, அரசன் மகிழ, அவன் 'மகிழும்' அறிவுரை கூறும் அமைச்சர்களைக் காட்டிலும், பகைவர்கள் எழுபது மடங்கு நல்லவர்கள்.

இத்தகைய 'அறிவுஜீவிகளை'த் தாம் 'கூழாட்பட்டார்' என்கிறார் பெரியாழ்வார். இன்றைய தமிழில் சொல்லப் போனால், கூலிக்கு மாரடிக்கின்றவர்கள்.

இந்திரா பார்த்தசாரதி

<parthasarathyindira@gmail.com>

# பொன் கிள்ளை

பிரேம்

ஓவியம்: அ. விஸ்வம்

1

அவள் பெயர் பொக்கிலை அல்லது பொக்கிளி. ஆயா அந்திமணி அவளுடைய பெயருக்கு இரண்டு அர்த்தம் சொல்லுவார். பொற்கிளி அதாவது பொன்கிளி, மற்றொரு அர்த்தம் பொற்கிளை அதாவது பொன்கிளை. பாட்டிக்கு அந்த அர்த்தங்கள் காலகாலமாக வந்த நினைவு சார்ந்தது. பாட்டிக்குப் படிக்கத் தெரியாவிட்டாலும் அந்த நினைவுகளை வைத்தே பலவற்றுக்கு அர்த்தமும் காரணமும் சொல்லிவிடுவார்.

அந்திமணி என்கிற தன் பெயருக்கு மாலை நேரத்தில் ஒலிக்கும் கோயில் மணி என்றுதானே சிலர் அர்த்தம் சொல்லுவார்கள். ஆனால், அதற்கு வேறு இரண்டு அர்த்தங்கள் உண்டாம். அந்தியில் கன்றுகாலிகள் வீடு திரும்பும் போது ஒலிக்கும் மணி, அந்தி காலத்தில் தோன்றும் மங்கிய ஒளி.

பாட்டிதான் அவளுக்கு பொக்கிளை என்ற அந்தப் பெயரை வைத்தார். அது பதிவுப் பெயராகவும் இருந்தது. ஆனால், அவளுடைய தோழி சென்னம்மாவுக்கு அவள் பொன்னு அல்லது கிளி. அவளுடைய பெயரின் இரண்டு அர்த்தங்களும் தெரிந்திருந்தும் கேலி செய்யவோ கொஞ்சவோ இரண்டு பெயர்களை அவள் உருவாக்கியிருந்தாள். கிளி என்றால் கேலி, பொன்னு என்றால் கொஞ்சல்.

சென்னம்மாவிற்கு தன் கருப்பின் மீது ஒரு பெருமையை உண்டாக்கித் தந்தது பொக்கிளைதான். பொக்கிளையின் சிவப்பு உடம்பைப் போல தனக்கில்லை என்று கவலைப்படத் தொடங்கிய சென்னம்மாவிடம் உன்னோட கருப்புதான்பா அழகு. என்னோட செவப்பு ஒரு நெறம் மட்டும்தான். உன்னோட கண்ணப் பாரு அதுல அழகு மட்டுமா இருக்கு வெற நெறய இருக்கு என்று சொல்லி உண்மையாகவே அவளைப் புன்னகை செய்ய வைத்தவள் பொக்கிளை.



அதனை அடிக்கடி கேட்பதற்காகவே என்ன இருந்தாலும் நான் கருப்புதானே என்று சொல்லிவிட்டு பொக்கிளையின் முகத்தைப் பார்க்காதது போல மறுபக்கம் திரும்பிக்கொண்டால் சென்னம்மாவுக்கு நெறய கொஞ்சல்கள் கிடைக்கும்.

சென்னம்மாவுக்கு பொக்கிளை மீது பொறாமையோ போட்டியோ இல்லை. ஆனால், பயம்தான் இருந்தது. செவப்பாக இருப்பதில் உள்ள ஆபத்து அவளுக்குத் தெரியும். எப்படி தெரியும்? இதுவும் காலகாலமாக இருந்து வந்த நினைவிலிருந்தும் பேச்சிருந்தும் உருகொண்ட ஒன்றுதான்.

பணக்கார வீடுகளில் செவப்பாக இருந்தாலும் பாதுகாப்பு; ஆனால், ஏழை வீடுகளில் செவப்பாகப் பொறந்து விட்டால் அதைவிட ஆபத்து கிடையாது. சென்னம்மாவுக்கு இது பற்றிய கதைகள் பல தெரியும். சிவப்பாக இல்லை என்பதைப் பற்றிய குறை மனதில் இருந்தாலும், “கருப்புக்கு நகைபோட்டு கண்ணால பாரு, செவப்புக்கு நகை போட்டு செருப்பால அடி” என்று பேசிக்கொள்ளும் பெண்கள், “அவளுக்கு என்ன பாப்பாத்தி போல வெள்ளையா இல்ல இருக்கா” என்று நெட்டி முறிப்பார்கள்.

“செவப்பு, வெள்ளை இரண்டு நெறத்திலும் யாரும் இல்லை. ஆனா, ஏண்டி பொன்னு இவங்க செவப்பு வெள்ள அப்படின்னு பேசிக்கிறாங்க. மஞ்சளும் களிமண் நெறமும் கலந்த நிறம்தான் உன்னோடது. ஆனா, செவப்பா உயரமா ஒருத்தி இருக்காளே அப்படின்னு பேசிக்கிறாங்க.” சென்னம்மா கேட்கும்பொழுது, “வெள்ளையா யாராவது இருந்தா பயமா இருக்குமில்லை? கருப்பு கருப்புன்னு கொல்லுறயே, உன்னோட நெறம் வெல்லம் போட்டு செஞ்ச கொழுக்கட்டை நெறம்தானே” என்பாள் பொக்கிளை.

நெறம் பத்தி இருவரும் அடிக்கடி பேசிக்கொள்வதற்கு காரணம் இருந்தது.





வகுப்பில் பொக்கிளையை வாத்தியார்களும் டீச்சர்களும், “என்ன வெள்ளச்சி நேத்து சொன்னத எழுதிவரலயா” என்று கேட்பவர்கள், “சென்னம்மாவை என்ன பனைவெல்லம் இதக்கூட சரியா எழுத மாட்டியா” என்பார்கள். இரண்டு பேரும் ஒன்னா உட்கார்ந்திருந்தால் திமுக கொடி என்ற கேலி. அவர்களின் நெறம் ஒரு நாளைக்கு சராசரியா இருவது தடவையாவது காதில் படாமல் போகாது.

வீட்டிலும் தன்னுடைய பெயரில் ஒட்டிக்கொண்ட அந்த நிறத்தை நொந்துகொள்ள வேண்டியிருந்தது சென்னமாவுக்கு. அவளுடைய அம்மா தவிர அத்தை, மாமா எல்லாம் சென்னகருப்பி எனக் கூப்பிட ஆரம்பித்து, இப்போது சின்ன கருப்பியாக அது மாறியது. சின்ன கருப்பி என்பதற்கு அர்த்தம் அவளுடைய அம்மாவை பெரிய கருப்பி என்று சொல்லிக்காட்டத்தான் என்பதை சென்னம்மா பிறகு தெரிந்துகொண்டாள்.

அவளுடைய அம்மாகூட சில சமயம், “சென்னு கண்ணுஇப்படி குறைஞ்ச நெறத்தில பொறந்திட்டயேடி, கல்யாண வயசுல உன்னோட நெறத்த சொல்லியே உயிர எடுத்துவாளுங்களே மாப்பிளை வீட்டு பொம்பளைங்க” என்று கவலைப்பட்டுக்கொள்வார்.

பல நேரங்களில் அதை அமைதியாகக் கேட்டுக்கொண்டாலும், “உனக்கு கல்யாணமாகி ரெண்டு புள்ள பெக்கலயா, அது போல ஏதாவது நடந்திட்டு போகுமில்ல” என்று எதுவும் தெரியாதது போல சொல்லி வைப்பாள்.

“ஆமாம் கல்யாணமும் ஆயி ரெண்டை பெத்தும் வச்சிருக்கேன், இன்னும் உங்க தாத்தா வீட்டுக்காரங்களுக்கு நான் கருப்பு பொன்னிதானே.” அம்மா சொல்லி பெருமூச்சு விடும்போது பாவமாக இருக்கும்.

ஆம்பிளைகள் கருப்பாக இருப்பதைப் பத்தி பேசாத சனங்கள் பெண்களை மட்டும் நிறத்தை வைத்து பேசிக்கொள்வது ஏன்? சென்னம்மாவுக்கும் பொக்கிளைக்கும் இந்தச் சந்தேகம் தொடர்ந்து இருந்தது. நிறத்தில் உள்ள சிக்கலை கொஞ்ச நாள் வரைக்கும் விளையாட்டாப் பேசியும் கேலியாக் கடந்தும் வந்த சென்னம்மாவிற்கும் பொக்கிளைக்கும் ஆறாவது ஏழாவது படிக்கும் காலத்தில்தான் அதில் வேறு பல சிக்கல்கள் இருப்பது புரியத் தொடங்கிச்சி.

அருந்ததிபுரத்தில் இருந்து வரும் பொக்கிளையைப் பற்றி பசங்கள் பேசுவதன் அர்த்தமும், தன்னுடைய சாதியைச் சேர்ந்த பசங்க மட்டுமில்லாம மற்ற சாதிப் பசங்களும் பெக்கிளையைப் பத்திப் பேசும் பேச்சில் இருந்த அசிங்கமும், சென்னம்மாவிற்குப் புரிய

வந்துச்சு. தன்னுடைய அண்ணனே பொக்கிளையைப் பத்திப் பேசும்போது, "அந்த செங்கராமீனு என்ன சொல்லுது" என்பான். சில சமயம் சென்னம்மா ரேங்கில் குறைந்துவிட்டால்,"என்ன அந்தக் 'கறிவத்தல்' இந்த முற முன்ன போயிடிச்சோ" என்றும் கேட்பான்.

அவனுடைய நண்பர்களும் அவளிடம் பேசுவது போல பொக்கிளையைப் பத்திதான் ஏதாவது பேசிக் கொண்டிருப்பார்கள். அதில் அதிக ரெட்டை அர்த்தமிருக்கும். தன் தோழியை தன்னிடமே இப்படிப் பேசும் இந்த நாயிங்க தன்னைப் பத்தி தான் இல்லாத போது என்னவெல்லாம் பேசுங்க என்பதை நினைத்து எரிச்சலும் வேதனையுமடைவாள் சென்னம்மா.

"தனியா வெளிய போகாத சென்னம்மா" என்று சொல்லும் அவளுடைய அண்ணன்தான் தன்னுடைய நண்பர்களுடன் சினிமா கொட்டகை வாசலில் நின்று பெண்களைப் பார்த்து ஏதோ சாடை மாடை பேசிக் கொண்டிருக்கிறான் என்பதை அவள் தெரிந்து வைத்திருந்தாள். தன்னுடைய தோழிகள் சொல்லியும் கேட்டிருக்கிறாள். அவன் கூட்டத்தில் இருந்தால் அவர்கள் வரும் போது மட்டும் பின்னால் நகர்ந்து கொள்வானாம். தனக்கும் அதற்கும் சம்பந்தம் இல்லை என்பது போல முகத்தை வைத்துக் கொள்வானாம். சில முறைகள் சென்னம்மாவே அதனைப் பார்த்தும் இருக்கிறாள்.

இதைப் பத்தி அவனிடம் கேட்ட முடியாது. அம்மாவிடம் ஒருமுறை,"அண்ணன் அந்த பொறுக்கிப் பசங்களோடயே சுத்திக்கிட்டு இருக்கேம்மா, நீ சொல்லக்கூடாதா?" என்றதும், "ஆம்பள பசங்க அம்மா, அப்பா சொல்லற பேச்ச இந்த வயசில கேக்க மாட்டானுவடி" என்று சாதாரணமாகச் சொல்லிவிட்டார்.

ஆனால், "உன்னோட அண்ணனுக்கு வறுத்த மீன்தாண்டி பிடிக்கும்" என்று சொல்லி மூன்று மீன்களையாவது வறுத்து வைக்காமல் இருக்க மாட்டார். கால நேரம் இல்லாமல் அவன் வீட்டுக்கு வந்தாலும், "என்ன எரும சப்பாடு கூட இல்லாம ஊரு மேஞ்சிக்கிட்டு வர, கொழம்பு மீனெல்லாம் ஆறி அவிஞ்சிப் போய் கிடக்குதே, சென்னு அந்த தட்ட எடுத்து வந்து வையி, தண்ணிய கொண்டுவா" என்பார்.

அள்ளி வாரி வாயில் போட்டுக்கொண்டு தட்டிலேயே கையைக் கழுவிவிட்டு எழுந்துவிடுவான். "தட்ட கழுவி கவுத்து வையி சென்னம்மா." தவறாமல் அம்மாவின் அன்புக் கட்டளை அவளைத்தான் வந்தடையும்.

அப்பாவிடம் காட்டும் சிறிய கண்டிப்பைக்கூட அம்மா தன் அண்ணனிடம் காட்டுவதில்லை என்பதை எட்டாவது முடித்து ஒன்பதாவது படிக்க அரசு உயர்நிலைப் பள்ளிக்குப் போகத் தொடங்கிய காலத்தில்தான் அவள் கண்டு பிடித்தாள்.

அண்ணனையும் அவனுடைய சிநேகிதர்களையும் பார்த்தாலே பத்திக்கொண்டு வந்தது சென்னம்மாவிற்கு. அதுவும் பொக்கிளை பத்தித் தன்னிடம் பேசும்போது கொள்ளிக் கட்டையை எடுத்து வாயில் செருக வேண்டும் போல இருக்கும். ஆனால், அவளால் எதுவும் செய்ய முடியாது.

அம்மா அவர்களில் சிலரை சாதி பார்த்து வீட்டுக்குள் அழைத்து, "எப்படி கண்ணு இருக்காங்க அம்மா" என்றபடி, "சென்னு அந்த பொருளங்கா உருண்டய எடுத்து வா" என உபசரிக்கும் பொழுது சென்னம்மாவுக்கு வருமொரு ஆங்காரம், மயான கொள்ளையின் போது அங்காள பரமேஸ்வரிக்கு வருமே அது.

தட்டில் தனக்குப் பிடித்த அந்த உருண்டைகளை முள்ளம் பன்னிகளுக்கு எடுத்து வந்து கொடுத்துவிட்டு உள்ளே போய் படுத்துக்கொள்வதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியாது. அத்தோடு அது முடிந்தும் போகாது."சென்னம்மா செம்புல தண்ணி எடுத்துவா." அம்மாவின் குரலுக்கு கேட்காதது போல நடித்துக் கொண்டிருந்தாலும் அம்மா அறைக்குள் வந்து, "இப்பதான் முழிச்சிக்கிட்டிருந்த அதுக்குள்ள தூக்கமா? தோட்டத்து கை பம்புல இருந்து சின்ன குண்டான்ல தண்ணி எடுத்து வா" என்னும் பொழுது ஆங்காரத்தையும் மீறிய ஏதோ ஒன்று உள்ளே பொங்கும். எதையுமே வெளியே காட்டிக்கொள்ள முடியாது.

அதைவிட அவளை ரொம்ப ரொம்ப பாதிப்பது அம்மா சில சமயம் கொட்டும் அந்த வார்த்தைகள். "இதுங்கள்ள ஏதோ ஒன்னதாண்டி நீ கட்டிக்க வேண்டியிருக்கும்." அதற்கு இதுவரை சென்னம்மா எந்த பதிலும் சொன்னதில்லை. ஆனால், அம்மாவை உற்றுப் பார்ப்பாள். பிறகு புத்தகத்தை எடுத்துக்கொண்டு தோட்டத்திற்குப் போய்விடுவாள். வீட்டின் பின் பக்கமாக அப்படியே ஓடிப் போய்விட்டால் எப்படி இருக்கும்? ஆனால், எங்கே போவது?

அவள் இரண்டுமுறை தொலைந்து போயிருக்கிறாள், வேண்டுமென்றே வழி தெரியாமல் தொலைந்து போய் இருக்கிறாள். ஆனால், இரண்டு முறையுமே பஸ் ஓடும் தவளக்குப்பத்திலும் பஸ் போகாத கொம்பாக்கத்து ரோட்டிலும் வைத்து அவளைப் பிடித்து வீட்டுக்கு அழைத்து வந்துவிட்டார்கள். அவள் இரண்டு முறையுமே யாரோ தன்னை சைக்கிளில் ஏத்திக்கொண்டு போய் வெளியே விட்டுவிட்டு போய்விட்டதாகப் பொய் சொல்லித் தப்பிக்க நினைத்தாலும் அப்பா, "படிக்கிற புள்ளைக்கு தெரியாதா யாராவது சைக்கிளில் ஏறச் சொன்னால் ஏறக்கூடாதுன்னு? சூடு போடு பொன்னம்மா அப்பத்தான் உறைக்கும்" என்றார்.

தொலையவும் முடியாது, ஓடவும் முடியாது, இதிலிருந்து தப்பவும் முடியாது. ஆனால், பொக்கிளையுடன் இதெல்லாத்தியும் பேசத்தான் முடியும். வேறு சிநேகிதிகளிடம் சொன்னால் அவளுக்குத்தான் அவமானம், அத்துடன் அவங்களுக்கும் ஜாலியாகத்தான் இருக்கும். "அப்பிடியா சென்னம்மா ரொம்ப கஷ்டமில்ல" என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே, "நல்லா வேணுன்டி உனக்கு மூணாவது ரேங்கு, ரெண்டாவது ரேங்கு எடுக்கிற திமிரு, இதுல அந்த பொக்கிலையோட ஒட்டிக்கிட்டு திரியறது வேற, நல்லா வேணும்" என்று சினிமாவுல வர்ற மனசாட்சி போல உள்ளே வேறு ஒன்று ஓடிக்கொண்டிருக்கும்.

எல்லாத்தியும் தாண்டி அவளுக்கு பொக்கிளையும் தமிழ் டீச்சரும் மியூசிக் வாத்தியாரும் இருக்கும் இந்த உலகம் இனியதாவே இருந்தது. ஆனால், அதுவும் நீடிக்கவில்லை. எட்டாம் வகுப்பை முடித்த பின் நிலமை பெரிய சிக்கலானது.

அருந்ததிபுரத்திலிருந்து பொக்கிளை நடந்து வரும் வழியில்தான் சென்னம்மாவின் வீடு. பொக்கிளை வீட்டு வாசலில் வந்து நின்று 'சென்னு' என்று கூப்பிட்டு விட்டு காத்திருப்பாள். அவளை வீட்டிற்குள் ஒரு நாளும் விடாத சென்னுவின் அம்மா, "தோடி பொக்கிள வந்துட்டா, சிங்காரிச்சது போதும் வெளிய வா" என்பார்.

புத்தகப் பையை சரிபார்த்தபடி ஓடிவந்து பொக்கிளையின் தோளில் இடித்து போகலாமா என்று சென்னு சொன்ன பின்தான் அவர்கள் பள்ளிக்கூடத்திற்கு நடப்பார்கள். போகப் போக ஒவ்வொருவராகச் சேரச்சேர அவர்களுடைய கூட்டம் அதிகமாகும். அது ஒரு ஆறுதலான நேரம். ஆனால், வீடுகள் இருக்கும் தெருக்களைக் கடந்து தென்னந்தோப்பு வழியாக நடக்கும் போதுதான் அந்த துயரம் தொடங்கும்.

பெண் பிள்ளைகள் போல ஒயர் கூடையில் புத்தகத்தை எடுத்து வராமல் புத்தக் கட்டுகளை கையில் வைத்துக்கொண்டு கால் சட்டையுடன் நடக்கும் பசங்களும், சைக்கிள் வைத்திருந்தும் தங்களோட சிநேகிதர்களுக்காக சைக்கிளில் போகாமல் தள்ளிக்கொண்டு வரும் பையன்களும் ஏதாவது ஒரு கூட்டத்தின் பின்னாலேயே நடந்து வருவார்கள்.

"எவ்வளவு பொறுமயா நடந்தாலும் அந்த நாய்களும் அதைவிட பொறுமையா நடக்குதுங்களே பொக்கிளை என்ன செய்யறது" என்று கேட்பாள் சென்னம்மா. அவர்களுடைய சிநேகிதிகளில் கொஞ்சம் பெரிய பிள்ளைகள், "பின்னாள வரதுக்கு ஒனக்கு அர்த்தம் தெரியாதா சென்னு. ஒன்னோட அண்ணனும் என்னோட அண்ணனும் அங்க வேற ஒரு கூட்டத்தோட பின்னாடிதான் நடந்து வராங்க. என்ன செய்யறது" என்பார்கள்.

சென்னம்மாவிற்கு அண்ணனை மட்டுமில்லை அப்பா, மாமா, பெரியப்பா, சித்தப்பா என்று யாரையும் பிடிக்காமல் போய்விட்டது. அவர்கள் இரண்டு பேரோ மூன்று பேரோ சேர்ந்துவிட்டால், தங்களோட வீட்டுப் பெண்களைத் தவிர மத்த வீட்டுப் பெண்களையோ மத்த சாதிப் பெண்களையோ, "குட்டி எப்படி ஆயிட்டா, ஊம் முன்னயும் பாக்கமுடியல, பின்னயும் பாக்கமுடியல" என்பதும்; மற்ற சாதிப் பெண்களை, "அவ அவங்கூட போனாளாம் இவ இவங்கூட போனாளாம், என்னவோ காலம் கெட்டுப் போச்சி, நமக்கு என்ன வந்தது" என்று சொல்வதும்; சிலர், "அந்தச் சாதியே அந்தக் காலத்திலிருந்தே அப்படித்தானே என்ன புதுசா" என்று சொல்லியும் சிரித்துக் கொண்டிருப்பார்கள். "சென்னம்மா அந்த வடையையும் சுண்டலையும் எடுத்துக்கிட்டு சின்ன குடத்துல தண்ணியும் எடுத்து வா." அப்பாவோ மாமாவோ சொல்லும் போது உள்ளே இருந்து அவங்க பேசுவதை கேட்டுக் கொண்டிருக்கும் சென்னம்மாவிற்கு கொதிக்கும் எண்ணையை தன் உள்ளங்கையில் ஊத்தியது போல பதறல் வரும். என்ன செய்வது. செய்யத்தானே வேண்டும். இதில் கோயில் உபயம், தேர் திருவிழான்னு பக்தர் வேசம்.

அவளுக்கு அதிக கோபத்தையும் ஆங்காரத்தையும் உருவாக்குவது உறவுக்கார ஆம்பிளைகள், "உங்கூட படிக்கிறாளாமே ஒருத்தி, தெனம் வீட்டுக்கு வந்து உன்ன கூட்டிக்கிட்டு பொறாளாமே அந்தச் சக்கிலிப் புள்ள. அவபேரு என்ன சென்னம்மா?" என்று கேட்பதுதான். அவள் அதைக் காதில் வாங்காமல் என்னமா கூப்பிட்டியா என்றுபடி உள்ளே போய் விடுவாள்.

பொக்கிளையின் வீடு இவர்கள் சொல்வது போல வசதியில்லாத வீடு இல்லை. அவளுடைய அப்பா சவானா ஆலையில் வேலை செய்கிறார். அம்மாவும் ஆலையில்தான் வேலை செய்கிறார். முன்னும் பின்னும் மரங்களுடைய பெரிய வீடு அவளுடையது. ஒரே தெருவானாலும் முன்னும் பின்னும் மரங்களைக் கொண்ட அந்த அருந்ததிபுரம் வெய்யில் படதா அழகான ஊர்தான் என்பது சென்னம்மாவிற்கு சின்ன வயதிலிருந்தே தெரியும்.

மூணு நாலு படிக்கும் போதிருந்தே பள்ளிக்கூடம் பாதிநாளில் மூடிவிட்டால் பொக்கிளையுடன் அவளும் வேறு இரண்டு மூன்று பேருமாக அருந்ததிபுரம் போய் விடுவார்கள். பொக்கிளையின் அம்மாவோ அக்காவோ வீட்டில் இருப்பார்கள். அம்மா செல சமயம் தலைநிறைய பஞ்சுடன் வீட்டுக்கு வருவார். குளித்து முடித்து புள்ளி போட்ட சேலையும் ரவிக்கையுமாக உள்ளே வந்தால் சினிமா நடிகை போல இருக்காங்கடி என்று சென்னம்மாவும் மத்த பிள்ளைகளும் குசுகுசுப்பார்கள்.

பொக்கிளையின் வீட்டில் ஏதாவது பலகாரம் இருந்து கொண்டே இருக்கும். சில சமயம் மீன் குழம்பு நாக்கைக் கீறி மனதைப் பிழிந்து விடும். யாரையும் சாப்பிடாமல் அனுப்புவதே இல்லை பொக்கிளையின் அக்கா. பேசிக்கொண்டே நடத்தும் அவருடைய சமையல் மாய மந்திரம் போல சில நிமிஷங்களில் தயாராகிவிடும். பொக்கிளையின் வீட்டில் சாப்பிட்டதை யாரும் தங்கள் வீடுகளில் மட்டுமில்லை வேற சிநேகிதங்களிடம் கூட சொல்ல முடியாத நிலை. சிலர் நாளாக நாளாக வீட்டில், "எங்க போனடின்னு கேட்டு அடிப்பாங்க" என்று சொல்லி வருவதை நிறுத்திக்கொண்டார்கள்.

பொக்கிளையின் அப்பா ராத்திரி ஷிப்டு போய் வருவதால் பல நாட்களில் பின் தோட்டத்தில் கயித்துக் கட்டிலில் தூங்கிக்கொண்டே இருப்பார். சைக்கிளில் வேலைக்கு போகும் போதுதான் அவரை அதிகம் பார்க்க முடியும். வெள்ளை வேட்டியும் அரைக்கை சட்டையுடன் வேலைக்குச் செல்லும் அவர் தலை உடம்பு முழுக்க பஞ்சுடனும் காக்கிக் கால்சட்டையுமாய் திரும்பி வருவார்.

ஆலை வேலை செய்யும் எல்லாருமே பஞ்சு படிந்த தலையுடன் வருவது ஏன் என்று சின்னப் பிள்ளைகளுக்குத் தெரியாது. அப்பாவுக்கோ அண்ணனுக்கோ டிபன் பாக்ஸில் சாப்பாடு கொண்டு போகும் வயசில்தான் அது தெரியவரும். பாண்டிச்சேரியின் மூன்று ஆலைகளில் எதாவது ஒன்றில் அப்பாவோ அண்ணனோ, சில வீடுகளில் அம்மாவோ வேலை செய்துவிட்டால் அவர்களின் வாழ்க்கை சந்தோஷமாக இருக்கும்.

பத்தாம் தேதிக்காகக் காத்திருக்கும் குடும்பங்கள் ஆலை வாசல்களில் கூடும் சந்தைக்குப் போய் அண்டா குண்டா முதல் செங்கல் அளவுள்ள மைசூரு பாக்கு வரை வாங்கி வருவார்கள். பொதுவாக அம்மாக்கள் தங்கள் குழந்தைகளுடன் பத்தாம் தேதி ஆலை வாசலில் நிற்பது, கணவன்மார்களை கைத்தாங்கலாக இழுத்து வந்து சம்பளப் பணத்தை கால் சட்டையிலிருந்து எடுத்துக்கொண்டு ஐந்து ரூபாயைக் கொடுத்து விட்டு வருவதற்காகத்தான். இல்லையென்றால் அது சூது வெளையாடும் இடத்திலோ சாராயக்கடையிலோ காணாமல் போய் விடும் வாய்ப்புகள் அதிகம்.

என்ன காரணத்தினாலோ பல அப்பாக்களுக்கு கடன் இருந்து கொண்டே இருக்கும். சாராயக்கடைக்குப் போகாமல் வீட்டுக்குத் திரும்பும் அப்பாக்கள் இருந்துவிட்டால் அதுபோல சொர்க்கம் வேறொன்று கிடையாது.

இன்னொரு வகை...சாராயத்தை வீட்டுக்கு வாங்கி வந்து, குளித்து முடித்து, கறி மீனுடன் சாப்பிட்டுக் குடித்து விட்டு, ஆறு ஏழு மணி நேரம் தூங்கும் அப்பாக்கள். இவர்களும் பாதி தெய்வம்தான்.

அடுத்து ஒரு வகை உண்டு. வீட்டுக்கு வந்து ஆம்பிளை பிள்ளையிடமோ பொம்பிளை பிள்ளையிடமோ காசு கொடுத்து ரெண்டு லீத்தர் கள் வாங்கி வரச்சொல்லி அம்மாக்களுடன் குடிப்பவர்கள். அதில் பிள்ளைகளுக்கும் ஒரு சந்தோஷம். கறிக்கடையில் சுண்டலோ மீன் பஜ்ஜியோ அவர்களுக்குக் கிடைக்கும். சில நாட்களில் கறி வறுவலும் கிடைக்கும். இந்த வீடுகளில் சிரிப்பும் கும்மாளமும் இருப்பது ஏன் என்று வேறு சிலருக்குத் தெரியாது. பெண்களும் ஆண்களும் கேலி கிண்டல் என எப்போதும் இருப்பதால் சிலர் அவர்கள் கண்ணில் படவே தயங்குவார்கள்.

எப்படியாவது ஆலையில் வேலை வாங்கி விட்டால் வாழ்க்கை நல்லபடியா அமைந்து விடும் என்ற நம்பிக்கை அந்தப் பகுதி சனங்களுக்கு. பிரஞ்சுக்காரர்கள் காலத்தில் அது தொடங்கியதாக பொக்கிளையின் அப்பா சொல்லியிருக்கிறார். அவர் குடிப்பது இல்லை. ஆனால், எப்போதாவது சூது விளையாட தோப்புப் பக்கம் போவார் என பொக்கிளையின் அம்மா சொல்வார்.

பொன்னு என்று அவளுடைய ஆயாவும் அவளுடைய அப்பாவும் கூப்பிடுவது போல சென்னம்மாவும் கூப்பிடுவதில் பொக்கிளைக்கு பெரிய ஒரு சந்தோஷம். இவர்கள் இருவருக்கும் சந்தோஷமான நாள் ஒன்று உண்டு. புது சினிமா வந்து விட்டால் முன்னமே சதிசெய்து இரண்டு குடும்பங்களையும் ஒரே நாளில் சேர்த்து விடுவது. ஏதேச்சையாக சந்தித்துக்கொள்வது போல, "என்ன சென்னா சினிமா வரதா சொல்லவே இல்லை" என பொக்கிளையோ, "என்ன பொன்னு இப்பதான் இந்த சினிமாவ பாக்கிறயா" என்று சென்னம்மாவோ கேட்டு, இருவரும் சேர்ந்துகொள்வார்கள்.

பொக்கிளையின் அக்கா புவனம்மா சென்னம்மாவின் காதில், "சினிமா வரது உங்க ரெண்டு பேருக்கும் தெரியாதில்ல பாவம்பா நீங்க" என்பாள். பொக்கிளையை வீட்டுக்குள் கூப்பிட விடாத சென்னம்மாவின் அம்மா சினிமா கொட்டாயில் ரெண்டு பேரும் ஒன்னா உக்காருவதை தடுக்க முடியாமல், "என்ன பொக்கிள அக்காவோட வந்திருக்கியா" என்று கேட்பார். "அங்க உங்க அம்மா இருக்கிறாங்க போல இருக்கு" என்பார்.

பொக்கிளையின் அம்மாவைப் பார்த்து சென்னம்மாவின் அம்மா முதல் முறை அசந்து போய்விட்டார். கழுத்தில் தங்கச் செயின் நெற்றில், அழகான சிறிய குங்குமப் பொட்டு, நீல நிறத்தில் டெரிலின் புடவை, காலில் செருப்பு, அதைவிட மஞ்சள் பூசிய முகம் போல உடம்பு எல்லாம் மஞ்சள்.

பொக்கிளையின் அக்கா புவனம்மாவோ பதினொன்னாவது படித்து விட்டு ஜிப்மரில் வேலைக்காக காத்திருந்தாள். "என்ன உயரண்டி

அவ, காஞ்சனா மாதிரி இல்ல இருக்கா" என சென்னம்மாவின் அம்மா பெருமூச்சு விடுவார். "என்ன விட கருப்பா பொறந்திட்டயடி. உங்க அப்பா கருப்பும் எங்கருப்பும் ஒன்னா கலந்து பொறந்திருக்க. உன் அண்ணனாவது பரவாயில்ல மாநெரம். ஆம்பள புள்ள. நீதான் எனக்கு பெரிய கவலையா இருக்க" என்று நூறாவது முறையாக சொல்லத் தொடங்கிவிடுவார். ஒன்பது பத்து வயசிலிருந்தே தொடங்கி விட்ட வாடிக்கையிது.

சென்னம்மாவிற்கு எதைப் பற்றியும் பயமில்லை. தன்னுடைய அண்ணன் சின்னராசு பற்றித்தான் பயம், கவலை, அதைவிட ஒரு அருவருப்பு. பொக்கிளைப் பார்ப்பதற்காவே சின்ன வயசிலிருந்தே ஏதாவது சாக்குச் சொல்லி சென்னம்மாவைப் பார்க்க கிளாஸ் ரூமுக்கோ விளையாடும் இடத்திற்கோ வந்துவிடுவான்.

சென்னம்மாவிடம் பிஸ்கட், மிட்டாய் எதையாவது கொடுத்து உன்னோட பிரண்டுக்கும் கொடு என்று பொக்கிளையை பார்த்துக்கொண்டு நிற்பான். ஏழாவது வரை இந்தக் கொக்கி முள்ளு இரண்டு பேரையுமே தைத்துக்கொண்டு கிடந்தது. ஒரு முறை சின்னராசுவின் சிநேகிதன் அவனுடன் வந்த போது சென்னம்மா வேண்டுமென்றே, "மாமாவும் அத்தையும் எங்க வீட்டுக்கு வந்தாங்க தெரியுமா?" என்று அவனுடைய வீட்டை ஞாபகப்படுத்தியதுடன், "நீ எனக்கு தேன் முட்டாய், தேங்கா முட்டாய் வாங்கி வரலியா?" என்று கேட்டு இரண்டு பேரையும் உணிக்கா முள்ளால் ஒரு இழுப்பு இழுத்து விட்டாள். ஆனால், என்ன மூன்று நாள் கழித்து மீண்டும் கோழி குப்பையைக் கிளறத் தொடங்கிவிட்டது.

அவளுடைய அண்ணன் தரும் எதையும் சென்னம்மா சாப்பிடுவதில்லை. அவன் போன பிறகு சன்னல் வழியாகவோ சாக்கடையிலோ போட்டுவிட்டு நிம்மதியாக மூச்சு விடுவாள். பொக்கிளை எத்தனையோ முறை, "என்னப்பா எனக்குத்தான் தர உனக்கு அவமானமா இருக்கு, சரி நீ சாப்பிட வேண்டியதுதானேன்னு" எனச் சொல்லிப் பார்த்து விட்டாள்.

சென்னம்மாவோ, "பொன்னு நீயே சொல்லு உனக்கு இது மாதிரி ஒரு அண்ணன் இருந்து எனக்காக இப்படிக் கொடுத்து விட்டா என்ன செய்வ?" என்று கேட்டாள். "நான் செருப்பால அடிப்பேன், இல்லன்னா அம்மாக்கிட்ட சொன்னாப்போதும் கையில் கம்பியக் காச்சி வச்சிடுவாங்க."

"அது போல என்னால செய்ய முடியாது பொன்னு. என்ன செய்யிறது?"

இது எல்லாம் அவன் ஒன்பதாவது போய்த்தொலைந்த பிறகு ஒழிந்ததென்று இரண்டு பேருமே ஆறுதல் பெருமூச்சு விட்டார்கள். ஆனால், அதுவும் நிறைய நாள் நீடிக்கவில்லை.

2

எட்டாவது முடித்து ஒன்பதாவது போன போது அந்தக் கொடுமை இன்னும் அதிகமாகி விட்டது. அவளுடைய அண்ணனுடன் பத்தாவது படிக்கும் சில பசங்களும் சேர்ந்து கொண்டார்கள். அவளிடம் பேச வருவது போல, "சென்னம்மா எப்படி இருக்கு கிளாசு? நெறைய மார்க்கு எடுக்கிறிங்க போல ரெண்டு பேரும். இப்ப வேற பதினொன்னாவது இல்ல. உங்களுக்கு ஜாலிதான்." இப்படி எதையாவது பேசி அறுப்பார்கள்.

"உன்னோட பிரண்ட் எதுவும் பேச மாட்டுது, ரொம்ப ஸ்டைலுதான் இல்ல." அவர்களின் பேச்சு சென்னம்மாவிற்கு தொடர்ந்து எரிச்சலை ஏற்படுத்திக் கொண்டிருந்தது. அதைத் தடுக்க அவள் ஒரு வழி செய்தாள். "அம்மா அண்ணங்களோட பிரண்டுங்க செலபேரு அது கூட வராங்க. எங்கிட்ட ஜாடை மாடையா ஏதோ பேசறாங்க. அதுல ஒருத்தன், உன் பையில என்ன இருக்கு? இவ்வளோ பெருசா இருக்கேன்னு ரெட்ட அர்த்தத்தில பேசறான். எனக்கு புத்தப் பைய எடுத்துப் போகவே வெக்கக் கேடா இருக்கு." என்று சொல்லி கண் கலங்கினாள். சென்னம்மாவின் உத்தி நல்லாவே பலிச்சது.

"ஏய் ராசு இனிமே சிநேகிதக்காரன் சித்தப்பன் மகனுன்னு எவனையாவது கூட்டிக்கிட்டு சென்னம்மாகூட பேசப் போன செருப்பு பிஞ்சிடும் தெரியுதா, வெக்கங்கெட்டவனே. கூட பொறந்த தங்கச்சி வயசுக்கு வந்து பள்ளிக்கூடம் போறா, உனக்கு அறிவு இல்ல, பசங்கள கூட்டிக்கிட்டு அவ பக்கம் போற?" முதமுறையாக அண்ணங்காரன் சின்ன ராசுவுக்கு அடிபடாமலேயே முகம் வீங்கிப் போனது.

தங்கச்சிய ஒன்னும் சொல்ல முடியாது. அம்மாவுக்கு வேறு காரணம் ஒன்னும் சொல்லவும் முடியாது. அவனும் அவன் சிநேகிதக்காரனுவளும் பொக்கிளைக்காகத்தான் அந்தக் கூட்டத்துடன் அவ்வப்போது நடந்து போகும் வழக்கத்தை ஏற்படுத்தி இருந்தார்கள். அதிலிருந்து அவன் மட்டும் விலகிக்கொள்ள நினைத்தாலும் அவனுக்குத்தான் அது அதிகம் தேவைப்பட்டது.

சென்னம்மா அந்தக் கூட்டத்தில் இருப்பது பெரிய தொல்லையாக இருந்தது, ஆனால், சென்னம்மா இல்லையென்றால் அந்தக் கூட்டத்துப் பக்கம் போக முடியாது. அந்தக் கூட்டத்தில் இரண்டு பேர் தவிர மற்றவர்கள் வேறுவேறு சாதிகள். பொக்கிளையும் முனியம்மாவும்தான் அருந்ததிபுரத்தில் இருந்து வருபவர்கள்.

அவர்களைத் தனியே பிரித்து விட்டால் தாங்கள் என்ன செய்தாலும் கேட்க ஆளில்லை என்று அவர்கள் தப்புக் கணக்கும் போட்டார்கள். ஆனால், அந்தக் கூட்டத்தை சாதி சொல்லி பிரிக்க முடியாத நிலைதான் இருந்தது.

படிக்கும் பெண்பிள்ளைகள் கல்யாணம் ஆகும் வரை சாதி பார்க்கும் பழக்கம் அந்தப் பகுதியில் இல்லை. சின்னராசு ஒரு முறை அவனுடைய அப்பா முத்துக்கண்ணு கவுண்டரிடம், "சென்னம்மா எப்பவும் அந்த பொக்கிலியோடத்தான் ஒட்டிக்கிட்டு இருக்கா, பசங்க ஒரு மாதிரி பேசறாங்கப்பா" என்று பத்த வைத்துப் பார்த்தான். முத்துக்கண்ணுவோ, "அந்த புள்ள வீட்டுக்குள்ள வராத வரைக்கும் பேச ஒன்னுமில்ல. சாதியப் பத்திப் பேசி போலீஸில மாட்டிக்க வேணாம்னு பசங்க கிட்ட சொல்லி வை" அப்படின்னு சொல்லிவிட்டார்.

அவர்கள் சாதியைப் பத்தி நேராக எதுவும் இப்போது பேச முடியாது என்ற நிலை உருவாகி இருந்தது. அதை விட முக்கியம் அருந்ததிபுரத்தில் யாரும் அடங்கியிருப்பவர்கள் இல்லை. அறுபது எழுவது வீடுகளில் இருபது முப்பது வீடுகள் ஆலைக்காரார்கள் வீடுகள். பாண்டிச்சேரியிலும் பக்கத்து ஊர்களிலும் ஏதாவது வேலை செய்கிறவர்கள் பலர். எலக்ட்ரிக் வேலை, சைக்கிள் கடை வேலை என ஏதாவது வேலை.

எப்பொழுதாவது ஊர்க்காரர்கள் வேண்டிக் கேட்டுக்கொண்டால் கோயில் திருவிழாவில் மேளம் அடிக்கச் சிலர் செல்வார்கள். மாரியம்மன் கோயில் மரத்திற்கு அடியில் தாம்பூலம் வைத்து முறையாக அழைக்க வேண்டும். அதை விட அருந்ததிபுரத்தில் இரண்டு சொல்தா குடும்பங்களும் இருந்தன. கோட் சூட் போட்டு பிரஞ்சு எலக்ஷனுக்கு ஓட்டுப் போட காரில் செல்வார்கள். மாதாகோயிலுக்கும் சில சமயம் போய் வருவார்கள். இரண்டு பேர் வாத்தியார் வேலையில் இருந்தார்கள். மூன்று பேர் பெரிய ஆஸ்பத்திரியில் வேலை செய்தார்கள். சிலர் ஆரோவில்லில் வேலையில் இருந்தார்கள். பள்ளிக்கூடத்திலோ அருந்ததிபுரம் பிள்ளைகள் நிறைய பேர் படித்தார்கள்.

செருப்புக் கடை வைத்திருந்த பெரிய பகண்டைகூட யாருக்கும் பயந்து பேசுவதில்லை "அதுதான் சொல்றன் இல்ல அய்யா, அடித்தோலு வர நாலு அஞ்சு நாளாகும். வந்தபெறகுதான் செருப்பு முடியும், அப்புறம் காய ஒரு நாளாவும், இது என்ன கொழுக்கட்டையா கையால புடிச்சி இட்டிலிக் குண்டான்ல வச்சி அவிச்சித் தர்றதுக்கு." முகத்துக்கு நேராகச் சொல்லிவிடுவார்.

யாராவது செருப்பைக் கொடுத்துவிட்டு, "என்ன பெரிசு இப்படி பொறுமையா இழுத்து இழுத்து நேரத்தக் கடத்துற" என்று கேட்டுவிட்டால் போதும், "இந்த மிதியடிய நாலு அஞ்சு வருஷமா சரிபாத்துச் செஞ்சி தரேன். வேகமா தச்சா வேற எடத்துல பிஞ்சிக்கிட்டு வந்துடும்" என்று மானத்தை வாங்கிவிடுவார்.

சில சமயம், "இந்தாங்க உடையாரே ஊசியும் நூலும் உங்க கையில தரேன் ரெண்டு தையலப் போட்டுக் காட்டுங்க பாப்போம்" என்று சொல்லி நிறுத்திவிட்டு, "தப்பா நெனச்சிக்காதிங்க சின்னவரே வித்தை தெரிஞ்சாதான் வேலை, கொஞ்சம் அசந்தா கையில தச்சிடும் ஊசி, மெல்லமா இழுத்தாதான் அழுத்தமா முடிச்சி விழும்" என்பார். அதில் ஒரு விடைப்பும் அச்சுறுத்தலும் இருக்கும்.

அந்த ஊர்ப்பக்கம் அழுத்தமான முணுமுணுப்புகள். இலவச மனைப்பட்டா வேறு கொடுக்க ஆரம்பித்து விட்டார்கள். பள்ளிக்கூடங்களில் ஸ்காலார்ஷிப், புத்தகம், கால் சட்டை மேல் சட்டை இப்படி எத்தனயோ வசதிகள்.

"என்னடா இது, இந்த ரெண்டு சாதிப் பசங்களும் இப்படி ராஜா மாறி வாழத் தொடங்கிட்டாங்க" என பொருமல் பெருகி ஓடத் தொடங்கி இருந்தது. அந்த சமயத்தில் தான் அந்தப் பகுதியில் ஒரு சங்கம் வேறு உருவாகி நெருப்பை மூட்டிவிட்டு உள்ளேயே புழுங்கிக் கொண்டிருந்தது.

"இந்தப் போலீஸ்காரங்க ஒரு சட்டத்த வேற வச்சிக்கிட்டு பயமுறுத்திக்கிட்டு கெடக்கிறானுவ. அரசாங்கத்தை மாத்திட வேண்டியதுதான். சாதிய பத்தி பயமத்துப்போச்சி" என்று தென்னந்தோப்புகளில் கூட்டம் போட்டு பேசத் தொடங்கியிருந்தார்கள்.

சென்னம்மாவின் அப்பாவும் அந்தக் கூட்டத்தில் இருந்தார். சென்னம்மாவின் வீட்டின் பின் பக்கமும் அந்தக் கூட்டம் சில சமயம் நடக்கத் தொடங்கியிருந்தது. சென்னம்மாவிற்கு இதன் அர்த்தம் எதுவும் புரியவில்லை. ஆனால், தானும் தன் அண்ணனும் படித்து முடித்தாலும் வேலை கிடைக்காதாம் அதனால் ஏதாவது செய்யவில்லையென்றால் அவர்கள் சாதிக்காரப் பிள்ளைகள் தெருவில் நிற்க வேண்டியிருக்குமாம். அந்தப் பேச்சு அவளுடைய சிநேகதங்கள் சிலரிடம் பாதிப்பை ஏற்படுத்தியிருந்தது.

பொக்கிளைக்கு வேலை கிடைக்கும்; ஆனால், தன் அண்ணன் சின்னராசுவுக்கு வேலை கிடைக்காது. தன் மாமன் மகன், அத்தை மகன், தன் அண்ணனுடைய சிநேகிதர்களுக்கும் வேலை கிடைக்காது. நிலம் இருக்கும் திமிரில் சரியா படிக்காமல் திரியும் இந்த பண்ணாடைகளுக்கு வேலைதான் ஒரு கேடு. சென்னம்மவுக்கு மட்டும் ஒரு பெரிய ஆறுதல். தனக்கு பத்தாவதுக்கு மேல் படிப்பு இல்லை என்று ஏற்கனவே உறுதியாகிவிட்டது. சென்னம்மா பொக்கிளையிடம் சொன்னாள். "நீ நல்லா படிக்கிற, அதே சமயம் நெறய



பெரிய படிப்பா படி. அக்கா மாதிரி கொஞ்சம் படிச்சிட்டு வேலைக்கு அப்பிளிகேஷன் போட்டுட்டு காத்திருக்கக் கூடாது.'

3

சென்னம்மாவும் பொக்கிளையும் ஒம்பதாவது முடித்து முழுப்பரிட்சையில் இருந்த போதுதான் அது நடந்தது. சின்னராசுவும் அவனுடைய சிநேகங்களும் பத்தாவதில் இரண்டு ஒன்று சப்ஜெக்டுகளில் பெயிலாக அரியர் எழுதி பாஸாகி விடுவதாகச் சொல்லிவிட்டு கவலையில்லாமல் இருந்தார்கள்.

தினத்தந்தியில் நெம்பர் வரும் என அவர்கள் வீட்டில் இருப்பவர்கள் தேடிக் கொண்டிருந்த பொழுது வீட்டுப் பக்கம் போகாமல் சின்ன வீராம்பட்டனத்தில் போய் பதுங்கிக் கொண்டனர். பிள்ளைகள் பெயிலானால் பாலிடாயில் குடித்துச் செத்துப்போவார்கள் என்று பயப்படும் பெற்றோர்கள் எப்படியாவது பிள்ளைகள் உயிரோடு வந்தால் போதும் என்று புலம்பிக்கொண்டு சொந்தக்காரர்கள் வீடுகளில் தேடுவது தெரிந்த பிறகு, யாராவது ஒரு சொந்தக்காரர் வீட்டிற்குப் போயிருந்து, "எஞ்சாமி பெயிலானா என்னடா கண்ணு, நெலம் இருக்கு, தோப்பு இருக்கு, உட்கார்ந்து சாப்பிடலாமே" என்ற தெய்வ வாக்கைக் கேட்டபடி வீடு வந்து சேர்வார்கள்.

ஒருவாரத்திற்கு கறியும் மீனுமாக சாப்பிட்டுவிட்டு சினிமாவுக்கும் போய் கொண்டாடித் தீர்ப்பார்கள். பெண்கள் பாசானால்தான் வீட்டில் உள்ளவர்களுக்கு கவலை. பத்தாவது பாசான பெண்ணைக் கட்டிக்கொள்ள ஆண்பிள்ளைகள் பயப்படும் காலம் அது.

சின்னராசுவும் அவனுடைய நாலு சிநேகிதர்களும் சின்ன வீராம்பட்டினத்தில் பதுங்கியிருந்த போது மெட்ராசிலிருந்து வந்திருந்த இரண்டு பேரைச் சந்தித்தார்கள். தென்னந்தோப்பில் கள்ளு குடித்து மீன் வறுவல் சாப்பிட்டு ஒரு குடிசையில் தங்கியிருந்த அந்த இருவரும் அவர்களுக்கு பிராந்தியும் கறியும் சிகரெட்டும் கொடுத்து ஒரு புதிய உலகத்தை அறிமுகப்படுத்தியதுடன் மெட்ராஸின் மாய உலகம் பத்தியும் அறிமுகப்படுத்தி வைத்தார்கள்.

அதில் சின்னராசுவின் நண்பர்களை மிகவும் ஆட்டிவைத்த ஒரு செய்தி இருந்தது. மெட்ராஸில் பல மாநிலங்களில் இருந்து வரும் பெண்கள் இருக்கிறார்கள். அவர்கள் சினிமா நடிகைகளை விட அழகும் இளமையும் கொண்டவர்கள். அவர்களுடன் உல்லாசமாக நாட்களைக் கழித்துவிட்டு ஓய்வெடுக்கத்தான் இங்கே வந்திருப்பதாக அவர்கள் சொன்னார்கள்.

அதில் ஒரு ஆள், "இன்னும் ஒருவாரத்தில் இரண்டு பெண்கள் பாண்டிச்சேரியில் வந்து தங்க போறாங்க. அவங்க ரெண்டுநாளு சின்னவீராம்பட்டினம், பெரிய வீராம்பட்டினம் பார்க்க வருவாங்க" என்றான்.

இன்னொருவன் அவனை தலையைச் சாய்த்துப் பார்த்தான், "என்ன செயபாலு உனக்குத் தெரியாதா, இன்னிக்குதான் செய்தி வந்தது" என்றான் செய்தி சொன்னவன்.

"ஆமாம் வரதா சொல்லியிருந்தாளுவ; ஆனா, எப்போன்னு சொல்லாம இல்ல இருந்தாளுவ." அவனுடைய பேச்சில் ஒரு இளக்காரம் இருந்தது. "பிராந்தி, பிரியாணின்னு வாங்கிக் கொடுத்தே மாளேதே நமக்கு. ஒரு ஆயிரம் ரெண்டாயிரத்த முழுங்காம போக மாட்டாளுவளே. பாண்டிச்சேரிக்கு வந்தாலே குடியும் தூக்கமும்தான். தொட்டாலும் தெரியாது, இழுத்தாலும் தெரியாது, அப்படியில்ல கெடப்பாளுவ. ஐதராபாத் சரக்குங்க வேற. சினிமாவுல குரூப் டான்சுல பின்னால ஆடர திமிருவேற. என்ன தலைவரே செய்யறது?"

"என்னடா தம்பி சின்ன புள்ளங்க, இந்த தம்பிங்க வயசுகூட இருக்காது. ஆசை இருக்காதா? ஆண்டு அனுபவிச்சி இருந்தா பரவாயில்லை. இதுல யாராவது ஒருத்தி பெரிய நடிகையா ஆயி நம்பளயே தோட்டத்துவேலைக்காரனா இருக்கச்சொன்னாலும் ஆச்சரியப்படறதுக்கில்ல."

அவர்களின் பேச்சு சின்னராசுவையும் அவனுடைய சிநேகிதங்களையும் சிவ்வென்று உயரே

தூக்கி பொட்டென்று கீழே போட்டது. நரம்புகள் அதிர்ந்து நாடி கடகடத்தது. என்ன சொல்வதென்றே தெரியாமல் ஒடுங்கிப் போய் இருந்தார்கள்.

“அட நீ வேற சின்ன புள்ளங்க இருக்கிறப்போ எதையெதையோ பேசி மனச கெடுக்கிற. ஏற்கனவே பரிச்சல பெயிலாயி இங்கப் பதுங்கிக் கிடக்குதுங்க. நம்மள மாதிரி இதுவளும் பொண்ணு குடின்னு வீணா போகணுமா என்ன? பொண்ணு சொகம், குடி கும்மாளம் எல்லாம் எத்தன நாளைக்கு சொல்லு? வூடு நெலம்னு நிம்மதியா உக்கார வேணாமா என்ன?’

“இப்ப என்னகொற தலைவா, எல்லாத்தையும் அனுபவிச்சாலும் சேத்துத்தானே வச்சிருக்கோம், இன்னும் நாலு வருஷமோ அஞ்சு வருஷமோ, பண்ரூட்டி, நெய்வேலி, செங்கல்பட்டுன்னு ஏதாவது ஒரு எடத்தில் வீடும் நெலமுமா வாழாமலா போகப் போறோம், சொல்லு?”

“நீங்க இதையெல்லாம் கண்டுக்காதிங்க தங்கம், படிங்க வேலைக்குப் போங்க. வீட்டுல பாக்கர பொண்ண கட்டிக்கிட்டு பிள்ளக் குட்டியோட பிரச்சினையில்லாம வாழுங்க.” அவர்களின் கடைசி அறிவுரை சின்னராசுவின் நண்பர்களைச் சீண்டிவிட்டது.

“அண்ணா என்ன செஞ்சா உங்கள மாதிரி மெட்ராசுல வந்து வேற மாதிரி வாழலாம் சொல்லுங்க?’

“அதெல்லாம் உங்களுக்கு ஆகாது கண்ணுங்களா, உயிரைக் கொடுத்து உயிரை எடுக்கிற வேலை, நடந்தா லட்சாதிபதி, மாட்டுனா எலும்பு ஒடைஞ்சிடும்.”

“நீங்க இதுவர மாட்டி இருக்கிங்களா?”

“நாங்களா, மாட்டியிருந்தா இங்க வந்து எறா வறுவல் சாப்பிட்டுக்கிட்டு ஒக்காந்திருக்க முடியுமா? சொல்லு.’

“அப்ப நாங்க மட்டும் எப்படி மாட்டிக்குவோம்னு சொல்றிங்க? இன்னா செய்யனும்? சொல்லிக்கொடுங்க நாங்க செய்யிறோம்.” மெட்ராஸ்காரர்கள் இரண்டு பேரும் ஒருத்தரை ஒருத்தர் பார்த்துக்கொண்டனர்.

“நம்பிச் சொல்லலாமா, அண்ணே?”

“என்ன தம்பி மூணு நாலு நாளா பழகியிருக்கோம். முகத்தை பார்த்தாலே சொல்லிடுவேன். நம்பிக்கையான புள்ளங்கதான். அது மட்டுமில்லை வெளிய சொன்னா அதுங்களுக்கும் ஆபத்துத்தானே?’

அந்த மாய வலை அப்படித்தான் அங்கு பின்னப்பட்டது. “அந்தப் புள்ளங்க வறதுக்குள்ள செல வேலைகள செஞ்சிட்டா, கொஞ்சம் நிம்மதியா இருக்கலாம்.’

“இதோ பாருங்க கண்ணுங்களா, வேலைய முடிச்சி அதுக்கான பங்க வாங்கிட்டு சந்தோஷமா இருக்கணும். அடுத்து ஒரு வேலை பிறகு கொஞ்ச நாள் சும்மா இருக்கணும். இந்த புள்ளங்க கிட்ட நெருங்கிப் பழகினா, சின்னப் புள்ளங்க அதுவளும் உங்கள உடாதுங்க நீங்களும் பணத்துள பாதியும் முக்காலுமா கொடுத்துட்டு சும்மா நிக்கணும் பாத்து நடந்துக்குங்க. இந்தத் தொழில்ல இதுதான் ஒரு பிரச்சினை. பொம்பள பழக்கம் கூடவே கூடாது. அப்பிடியே இருந்தாலும் ரெண்டு தடவைக்கு மேல ஒரு புள்ளய பாக்கக் கூடாது. ஒட்டினா ஒட்டினதுதான். ஒன்று ரெண்டுன்னு போயிகிட்டே இருக்கும். எங்கள பாரு, இதுங்க கிட்ட இருந்து தப்பிச்சா போதும்னு இங்க வந்து ஒளிஞ்சிக்கிட்டு கிடக்கறோம்.’

அவர்களின் பேச்சு புள்ளைகளை ஒரு உலுக்க உலுக்கி ஒரு குலுக்கு குலுக்கி சுழற்றிப் போட்டது. என்ன சொன்னாலும் செய்து விட வேண்டியதுதான். மெட்ராஸ்காரர்கள் சொன்னார்கள். “முதல்ல வூட்டுக்குப் போய் சேருங்க. நல்லா ஒரு வாரம் சாப்பிட்டு தூங்கி பெறகு இங்க வாங்க, என்ன. ஆனா, நீங்க நாலு பேரு போதாது, இன்னும் ஒன்னு ரெண்டு பேரு வேணும். நம்பிக்கையான ஆளுங்களா, உங்க சிநேகிதங்களா பாத்து சேத்துக்குங்க. இதுல ஒன்னு இருக்கு, அவங்ககிட்ட முழு விவரமும் சொல்லக்கூடாது. தெரியுதா. நீங்க போறப்போ கூட வரணும். கொடுக்கிறத வாங்கிகிட்டு போயிடனும். ரெண்டு மூணு வேல முடிஞ்சதும் ஆள மாத்திடனும். நல்லா ஞாபகம் வச்சிக்குங்க. நீங்க மாட்டினா, நாங்க காப்பத்த முடியாது. எங்கள யாராளும் கண்டு பிடிக்க முடியாது. தெரியுதா?” அவர்களின் பேச்சு தண்ணீரில் இட்ட உப்புபோல அவர்களுக்குள் புகுந்துவிட்டது.

வீடு வந்து ஆறு நாள் கழித்து மெட்ராஸ்காரர்களை பாண்டிச்சேரியில் ஒரு லாட்ஜில் சந்தித்தார்கள். தொழிலின் தொடக்கம் எளிமையாக இருந்தது. ஆளுக்கு ஒரு கட்டு மஞ்சள் துணி, கோயிலுக்கு வேண்டுதல் செய்து கொண்டவர்கள் எடுத்துச் செல்பவது போல ஆளுக்கு ஒரு திசை.

வெவ்வேறு ஊர்களின் கோயில்களில் காத்திருக்க வேண்டியது. அங்கே வரும் ஆட்கள் சிலர் வெத்திலைப்பாக்கு கொடுத்து என்ன தம்பி பிரசாதம் கொண்டு வந்திருக்கியா என்பார்கள். வெத்திலையை எண்ணிப் பார்த்தால் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கை இருக்கும். பிறகு பைகள் கைமாறும். போனது தெரியாதது போல திரும்பி வர வேண்டியதுதான்.

மெட்ராஸ்காரர்கள் எங்காவது ஒரு இடத்தில் வந்து பையை வாங்கிக்கொண்டு, கொஞ்சம் பணத்தை அவர்களுக்கு கொடுப்பார்கள். சின்னராசுவுக்கும் அவனுடைய நண்பர்களுக்கும் பணத்தை வாங்கி வைத்துக்கொண்டு என்ன செய்வது என்றே தெரியவில்லை. மெட்ராஸ் புள்ளங்க வந்தா

கொஞ்சம் செலவு செய்யலாம். பெறகு மெட்ராசுக்கே போனாலும் போகலாம்.

வேலையோ வாரம் ஒருமுறை என விடாமல் தொடர்ந்தது. பணமோ பெருகிக்கொண்டிருந்தது. மெட்ராஸிலிருந்து புள்ளைகள் வருவது தள்ளிப் போனது. "கேரளா பக்கம் ஒரு குரூப் டான்சாம் வெள்ளை டிரஸ்ஸில் இவங்க ஆடனுமாம், போயிருக்குதுங்க. வர கொஞ்சம் நாளாவும். அதுவும் நல்லதுதான் ரெண்டு பேரு வரதா சொல்லியிருந்தாங்க. இப்போ மூணு பேரு வரதா சேதி வந்திருக்கு."

வெள்ளை டிரஸ் என்ற வார்த்தை சின்னராசு குழுவினரை கட்டுமரத்தில் ஏத்தி கடலில் தள்ளிவிட்டது. ஆடி அலைந்து ஒரு நிலைக்கு வர ஒரு வாரமானது.

இரண்டு மாதங்கள் பெரிய வருமானம். கொஞ் சம்தான் செலவு. அந்த முறை சின்னராசு மாதையனை துணைக்குச் சேர்த்துக்கொண்டான். மாதையன் பொக்கிளையின் உறவுக்கார பெரியம்மா பையன். பத்தாவதில் கொஞ்சமாக மார்க் வாங்கியிருந்தாலும் பாஸாகியிருந்தான். ஆனால், ஹையர் செக்கண்டிரியில் இடம் கிடைக்காமல் அரவிந்தர் ஆசிரமத்தில் தோட்ட வேலைக்குச் சேர்ந்திருந்தான்.

அவனை எதேச்சையாப் பார்த்த சின்னராசு அதுவரை இல்லாத பாசத்துடன், "என்ன மாதயா பாசாகியும் மேல படிக்க முடியாம போச்சே உங்களுக்குதான் 'ரெஷவேஷம்' இருக்கே. ஏன் இப்படி?" என்று கவலையுடன் கேட்டான். "அதுவா, எடம் கிடைச்சாலும் பாகூர் போகணும். சைக்கிள் இல்ல. எங்க வீட்டிலயும் நிலமை சரியில்லை. ரிக்ஷா விழுந்து அப்பாவுக்கு காலுல அடி. ஒரு வருஷம் கூட ஆகுமாம். அப்படியும் கூட மறுபடி வண்டியெல்லாம் ஓட்ட முடியாதாம். என்னமோ, அம்மா செஞ்ச வேலை எனக்குக் கெடச்சிது."

அவனுடைய துயரத்தைப் போக்க பிராந்தி வாங்கிக்கொடுத்து, எறா வறுவல் விருந்தும் கொடுத்து அன்று அனுப்பி வைத்தான் சின்னராசு. அதற்குப் பிறகு அடிக்கடி அரவிந்தர் ஆசிரமம் பக்கம் சின்னராசுவின் புது சைக்கிள் போய்வரத் தொடங்கியது.

துப்புராயப் பேட்டையில் ஒரு வீட்டில் விருந்து ஏற்பாடுகள் தொடர்ந்து நடந்தது. சினிமா, பிராந்தி, வறுத்த கறி என மயக்கும் ஒரு உலகம். மாதையன் அந்த வலையில் சிக்கிக்கொள்வது தெரியாலேயே சிக்கிக்கொண்டான்.

ஒரு நாள் நூறு ரூபாயைக் கொடுத்ததுடன் புது பேண்டும் சட்டையும் வாங்கிக் கொடுத்தான் சின்னராசு. அன்பின் பிடியில் மாதையன் அவன் சொல்வதைச் செய்யும் உற்ற நண்பனாக மாறினான். வேலையை விட வேண்டாம். ஞாயிற்று கிழமை மட்டும் வேலை செய்தால் போதும். அதுவும் பஸ்ஸில் தன்னுடன் வருவதுதான் வேலை. மாதைய்யனுக்கு அது ஒரு புதிய அனுபவம்.

4

முழுப் பரிட்சை முடியுமா என்று காத்திருந்த பொக்கிளையும் சென்னம்மாவும் மீண்டும் பள்ளிக் கூடம் போகத் தொடங்கிய பின் ஒரு வாரத்துக்குப் பேசி மாளவில்லை. ரெண்டு பேருமே உயரமாக வளர்ந்துவிட்டதாகச் சொல்லிக்கொண்டார்கள். புதிதாக ஒரு உடை சேர்ந்துகொண்டதாக பொக்கிளை சொன்னாள். அதனை வாங்கித் தந்தது அக்காதான் என்றாள். சென்னம்மாவிற்கு அது கிடைக்க இன்னும் நாளாகும் என்றபொழுது, வீட்டுக்கு வரச் சொல்லி அக்காவிடம் அதனைத் தெரிவித்து ஒரு ரகசிய ஏற்பாடும் செய்தாள். அத பதுக்கி வைத்து அணிந்துகொள்ள சென்னம்மா மெல்லக் கற்றுக்கொண்டாள்.

இது எல்லாவற்றையும் விட, "பத்தாவது பரிச்சையில் பள்ளிக்கூடத்தில் பர்ஸ்ட் வரவேண்டும் நீ" என்பதுதான் சென்னம்மாவின் அன்புக் கட்டளையாக இருந்தது.

"வரலாம் சென்னா, அது ஒன்னும் கஷ்டம் இல்ல, ஆனா, பாண்டியிலேயே பர்ஸட் மார்க் வாங்கினா இன்னும் நல்லா இருக்குமில்ல?"

சென்னம்மா, "அப்படி சொல்லுடி என் அந்திமல்லி, அடைந்தால் மகாதேவி இல்லையேல் மரணதேவி" என்று கன்னத்தைத் தடவி திருஷ்டி கழித்தாள்.

"என்னடி இது மரணதேவி மண்ணென்ன தேவின்னுட்டு, நாம ரெண்டு பேருமே நல்ல மார்க் எடுக்குறோம். பர்ஸ்ட் குரூப் போரோம், சரியா?"

சென்னம்மா முகம் சற்று மங்கியது. "பத்தாவதோட படிப்பு நின்னுப் போகுண்டி எனக்கு."

இப்போது பொக்கிளையின் முகம் இருண்டு போனது. அது அவளுக்கு முன்பே தெரிந்த ஒன்றுதான்.

பண்ருட்டியில் ஒரு மாமன் மகனுக்கு அவள் பெரியவளானதுமே பேசி வைத்துவிட்டார்கள். இதில் திண்டிவனம் மாமா வீட்டுக்காரர்களுக்கு வருத்தம். போக்குவரத்து நின்று போனது. பொக்கிளை சொன்னாள்: "நீதானே சொன்ன நெறைய நெலம் இருக்கு, டிராக்டர் இருக்குன்னு. நிம்மதியா இரு என்ன?"

"பாப்போம். எப்படியோ இந்த அண்ணங்கிட்ட இருந்து தப்பிச்சா போதும். அந்தக் கூட்டம்

மொத்தமும் புட்டுக்கிச்சி, இனிமே பின்னாடி பாக்கிறது முன்னாடி பாக்கிறதெல்லாம் இல்ல."

"தோ பாரு சென்னு, இனிமே எவனாவது பின்னால வந்தா இதால ஒரு கிழி கிழின்னு எங்க ஆயா கொடுத்திச்சி, இத பாரு." பையில் இருந்து சாண் நீளமுள்ள ஒரு தோல் உறையை எடுத்துக் காட்டினாள் பொக்கிளை.

"என்னப்பா இது?" உருவிப் பாரேன் பொக்கிளை சொல்ல, மெல்ல உருவிய சென்னம்மாவின் கண்கள் விரிந்தன. தோல் அறுக்கும் பட்டைக் கத்தி.

"இது என்னோட ஆயாவுக்கு அவங்க ஆயா கொடுத்ததாம். மாசம் ஒருமுறை தோலுப் பட்டையில தீத்தி வச்சா போதும். தொட்டுப் பாத்தாலே வெரலு கிழிஞ்சிடும்."

சென்னம்மாவிற்கு ஆச்சரியமாக இல்லை. அவளே பார்த்திருக்கிறாள் பொக்கிளையின் பாட்டி மாட்டு வார் அறுக்க இந்தக் கத்தியைப் பயன்படுத்துவார், பிறகு உறையில் போட்டு முந்தானையில் முடிந்துகொள்வார். அவர் சுருக்குப் பையிலும் ஒரு கொத்து ஆயுதங்கள் இருக்கும். கொக்கி போல, சின்ன கத்திபோல, கோணி ஊசி போல. அதில் உள்ள முள்ளு வாங்கியைத் தவிர மற்றவை எதற்கு என்று பொக்கிளைக்குத் தெரியாது.

ஒரு முறை சென்னம்மா கேட்டாள்: "ஆயா என்ன இது, ஆப்ரேஷன் தேட்டருல இருக்கிற மாதிரி இத்தனை ஆயுதம்?"

ஆயா சொன்னார்: "ஆமாம் கண்ணு ஆப்பரேஷன்தான், அளவுக்குமீறினா ஆம்படையானா இருந்தாலும் ஆப்பரேஷன் பன்னிவிட்டுடனும். எங்க பொண்ணுங்கள இவனுவ சும்மாவா விடுவாணுங்க? என்னயே கல்யானம் ஆயி வந்தப் புதிசில ஊரு ஆளுங்க, 'என்ன மணி இடுப்பு இப்படி பளபளன்னு இருக்கே என்னத்தை வச்சி தீட்டி வச்சிருக்கன்னு' கேப்பானுவ. முந்தானையில முடிஞ்சிருக்கிற சூரிக்கத்திய எடுத்து மூஞ்சிக்கு நேரா காட்டி, 'இதாலதான் அண்ணே தீட்டி வச்சிருக்கே'ன்னு சொல்லுவேன்."

"நீ நல்லா இருப்ப தாயி, ஆனாலும் சொல்லறன், உங்களுக்கு உங்க சாதியே கேடயம் மாதிரிதான். ஆனா, எங்களுக்கு?" ஆயா சொன்னது சென்னம்மாவை உள்ளுக்குள் குத்திக் கிழித்தாலும், அது உண்மைதான், இந்த கேடுகெட்ட அண்ணனும் அவங்கூட இருக்கிற நாய்ங்களும் வெற எதுக்காக இப்படி நடந்துக்குதுங்க?

பொக்கிளை காட்டிய சூரிக் கத்தியை வைத்து பேப்பரை வெட்டிப் பார்த்த சென்னம்மா பயந்துதான் போனாள். அது பிளேடைவிட ஷார்ப்பாக பால் பொங்கும் போது வரும் ஒரு சத்தத்துடன் பேப்பரைக் கிழித்தது.

"பொக்கிளை உண்மையாவே இதால பசங்கள கிழிப்பியா?"

"கிழிக்கணும்னா கிழிக்கலாம், ஆனா, இத சும்மா புடிக்கிற முறையில கைல புடிச்சிச் காட்டினாலே ஓடிப் போயிடும் இந்த நாயிங்க. எங்க அம்மா ரெண்டாவதுமுறை முடிஞ்சி இது வரைக்கும் தனியாத்தானே வரும். எவனாவது முறைச்சி பார்த்து நின்னிருக்கானா சொல்லு? அம்மா பயப்படறதே இல்ல. ஆலைல கூட சாடைமாடையா பேசினா, 'நூலு அறுக்கனுமா?'ன்னு கேக்ககுமாம் எங்க அம்மா. எல்லாம் மனசிலதாம்பா இருக்கு."

சென்னம்மாவுக்கு பொக்கிளைக்குள் இப்படி ஒரு உருவம் இருப்பது அப்பத்தான் தெரிஞ்சது. தங்கள் பின்னால் வரும் பசங்கள் பேசுவதைக் கேட்டும், 'கெடக்குது நாயிங்க, நாம பாட்டும் கேக்காத மாறி போவோம்' என்பதற்குள்ளே இருந்த அந்த சூரிக் கத்திய சென்னம்பாவே அப்பொழுதான் புரிந்துகொண்டாள்.

"சரி சரி பையில வையி. இதுக்கெல்லாம் தேவை வராது பொக்கிளை" என்றாள் சென்னம்மா. அவளுக்கு சின்னராசுவை நினைத்துதான் கொஞ்சம் பயம் வந்தது. அதே சமயம் பொக்கிளை பற்றி அவளுக்குள் இருந்த பயம் மறைந்து போனது.

## 5

சின்னராசுவும் அவனுடைய கூட்டாளிகளும் மெட்ராஸ் கும்பலுடன் நெருக்கமாகிப் போனார்கள். அங்கிருந்த இரண்டு பேருடன் வேறு சிலரும் வந்து குடித்து விருந்து உண்டு ஓய்வெடுத்துச் சென்றார்கள். சிலர் குடும்பமாக பெண்டாட்டி பிள்ளைகளுடன் வந்தார்கள். அவர்கள் கொண்டு வரும் அலுமினியக் குண்டான்களில் சரக்கு இருந்தது. இரண்டு மூன்று நாட்கள் இருந்த பின் அவர்கள் போய்விடுவார்கள். சின்னராசுவுக்கு தான் கொண்டு செல்வதும் கொண்டு வருவதும் என்னவென்று தெரியாமலேயே இருந்ததில் ஒரு வருத்தம் இருந்தது. ஒரு முறை மஞ்சள் பையை மாற்றி வரும் வழியில் அதனைப் பிரித்துப் பார்த்தான். இரண்டு கட்டு இருவது ரூபாய் நோட்டுகள். அவனுக்கு நம்பவே முடியவில்லை. அப்படியென்றால் இதுவரை தான் புத்தகப் பையிலோ பிரசாதப் பையிலோ வைத்துத் தூக்கிச் சென்றது பணக்கட்டுகளா? பணத்தை எடுத்து வருவதில் என்ன பிரச்சினை?

அவன் திரும்பி வந்து பையைக் கொடுத்தான். மெட்ராஸ்காரன் உள்ளே போய்விட்டு வந்து அவனுக்கு கொஞ்சம் பணம் கொடுத்து விட்டு, "சின்னராசு இனிமே பையை அவுத்துப் பார்க்கிற வேலை வேணாம். இது மொத தடவ, சின்ன பிள்ள அதனால விட்டுடறேன். இனிமே இப்படி விட மாட்டேன் தெரியுமா" என்றான். தான் பிரித்தது



எப்படி அண்ணனுக்குத் தெரிந்தது. “அண்ணா நான் பிரிக்கில” என்றான். “இல்ல தங்கம் நீ பிரிச்சி பார்த்து கட்டியிருக்க. பொய் சொல்ல வேணாம். நீ இதுல இருந்து ஒரு நோட்ட கூட எடுக்கல. அதனாலதான் இப்படி அன்பா பேசிக்கிட்டு இருக்கிறேன். இனிமே இப்படி செய்யாத. அத்தோட பொய்யும் சொல்லாத. நம்ம தொழிலு நம்பிக்கை அடிப்படையிலதான் நடக்குது. சத்தியத்துக்கு கட்டுப்படனும் தெரியுதா.”

மெட்ராஸ் அண்ணன் பேசிய முறை சின்னராசுவை குலைநடுங்க வைத்தது. “உனக்கு இதுக்குள்ள என்ன இருக்குன்னு தெரிஞ்சி போச்சி இல்ல, ஆனா, மத்தவங்களுக்கு தெரிஞ்சிதுன்னா, ஆந்திராவில இருந்து ஒரு கூட்டம் வரும். அத்தனை பேரையும் ரெண்டா வகுந்து கடல்ல போட்டுட்டு போயிகிட்டே இருக்கும். ஞாபகம் வச்சிக்க. பயப்படாத அதெல்லாம் நடக்காது. இப்போ இந்த பிராந்திய குடி.”

அன்று குடித்து விட்டு மெட்ராஸ் அண்ணன் காலில் எட்டு முறை விழுந்து அழுது மன்னிப்பு கேட்டுத் தூங்கிப் போனான் சின்னராசு. ஒரு இரண்டு வாரம் அவனுக்கு ஒரு சின்ன ஓய்வு. ஆனால், அதற்குப் பிறகு கனமான பைகள் அவன் வழியாவே மாறின. கோயில்கள், சவுக்குத் தோப்புகள், ஆத்தங்கரைகள் என இடங்கள் விரிந்தன. பிறகு விழுப்புரம், திண்டிவனம், கடலூர் என நேராகக் கடைகளுக்கே போய் வரும் வேலைகள் சின்னராசுவுக்குத் தரப்பட்டன.

அவனுடைய சகாக்களுக்கு சின்ன வேலைகள்தான். சின்னராசுவுடன் மாதையன் இப்போது முழு நேரம் இருக்க வேண்டியிருந்தது. வீட்டில் அவன் லாரி கிளினராக சேர்ந்திருப்பதாக சொல்லியிருந்தான். அதில் அவனுக்கு எந்த பிரச்சினையும் இல்லை.

6

பொக்கிளையும் சென்னம்மாவும் சினிமாவுக்குப் போவதைக்கூட நிறுத்திவிட்டு படித்துக் கொண்டிருந்தார்கள். மற்ற சப்ஜெக்டுகள் ஈஸிதான்; ஆனால், இங்கிலீஷ் மனப்பாடம் செய்ய வேண்டும்; பிறகு எழுதி ஸ்பெல்லிங் மிஸ்டேக் பார்க்க வேண்டும். வாத்தியார்களும் அதைச் சரியாக சொல்லிக் கொடுப்பதில்லை. வெறும் கைடைக் கொடுத்து மனப்பாடம் செய்யச் சொல்லி எழுது எழுது என்று சொல்லி உயிரை வாங்கிவிடுவார்கள். ஒன்பதாவது வரை எதையும் சொல்லிக் கொடுக்காமல் பப்ளிக் எக்ஸாம் வரும் பொழுது கிராமர் குராமர் என்று கழுத்தறுப்பார்கள். ரென் அண்ட் மார்டின் படிக்கும் கான்வெண்டு பசங்களுடன் போட்டிப் போட்டு பாசாக வேண்டும். பிறகு பதினொன்னாவதில் அப்படியே இங்கிலீஷ் மீடியம்.

பொக்கிளைக்கு அதிக பதற்றமா இருந்தது. இந்த இங்கிலீஷைகைப்பிடிக்குள் கொண்டு வந்துவிட்டால் போதும், மற்றதெல்லாம் மல்லிகை பூ கட்டுவது மாதிரிதான். சென்னம்மாவுக்கு பாஸானால், போதும். ஆனால், பொக்கிளைதான், “பாஸானால் நல்ல மார்க் எடுத்து பாஸாகனும், எனக்காக, தெரியுமா” என்று சொல்லிவிட்டாள்.

மாடல் எக்ஸாமில் இருவருமே நல்ல மார்க் எடுத்த போது அப்பாடா என்று இருந்தது. ஒரு சினிமா பாக்க வேண்டும். ‘முள்ளும் மலரும்’ என்று ஒரு படம் ஊரில் வந்து பலரை அழவைத்துக் கொண்டிருந்தது. அந்தப் படம் அவர்களையும் அழவைத்தது. அதில் வரும் அண்ணன் போல தனக்கு இல்லையே என்று சென்னம்மா ஏங்கினாள். பொக்கிளைக்கு, ‘செந்தாழம் பூவில் வந்தாடும் தென்றல்’ என்ற பாடல் மனப்பாடமாகிவிட்டது. பரிட்சைக்குப் பிறகு பாடிப் பழக வேண்டும் என்று முடிவு செய்துகொண்டாள். ஷோபாவை இருவருக்குமே பிடித்துப் போனது. ‘அடிப்பெண்ணே’ என்ற பாடலில் வரும் ஷோபாவின் முகம் அவர்களுக்கு மிகவும் நெருக்கமாக இருந்தது. பொக்கிளையின் பக்கத்தில் போய் ஒட்டுக் கேட்டால், ‘செந்தாழம் பூவில்’ ஹம்மிங் கேட்டபடி இருந்தது. அது பாடலாக மாற இன்னும் கொஞ்ச நாளாகலாம்.

7

சின்னராசு அன்று இரண்டு பெரிய சுமைகளைச் சுமந்துச் செல்ல வேண்டியிருந்தது. உரம் சாக்கில்

இரண்டு மூட்டைகள். மாதையனும் சின்ன ராசுவும் வடலூருக்குப் போனார்கள். திரும்பி வரும்போது பாதி சுமையுடைய இரண்டு மூட்டைகளைச் சுமந்து வந்தார்கள். ஒரு தோப்பைக் கடந்து வெளியே வந்த பொழுது. வெள்ளைச் சட்டையும் காக்கிப் பேண்டும் போட்ட மூன்று பேர் அவர்களை மறித்ததும் அவர்களுக்கு உயிரே போனது போல ஆகிவிட்டது.

இதுவரை இல்லாத கனமான மூட்டைகள். வந்தவர்களில் ஒரு ஆள் தெரிந்த முகம் போல இருந்தது. ஆனால்,எல்லாம் சில நிமிடங்களில் முடிந்துபோனது. "உயிரோட போயிடுங்கடா பசங்களா. வாழ வேண்டிய வயசு, அதனால அனுப்பி வைக்கிறோம். இல்லன்னா கேப்பர் மலை ஜெயில்தான்." இருவரும் தொண்டை வரண்டு அங்கேயே உட்கார்ந்து விட்டார்கள்.

மாதையன் கேட்டான். "சின்னராசு அதுல என்னப்பா இருக்கு?"

இனியும் சொல்லாமல் இருக்கமுடியாது. "அவ்வளவும் ரூபா நோட்டுடா" என்றான்.

"அப்ப இத்தன நாளும் நாம எடுத்துப் போனதும் எடுத்து வந்ததும் ரூபா நோட்டுதானா, புரியலையே."

"எடுத்துப் போனது செஞ்சியில வச்சி அடிச்சது, எடுத்து வர்றது கவர்மெண்டு அடிச்சது."

மாதையனுக்கு உண்மையாகவே பேண்ட் நனைந்துவிட்டது. அங்கே இருவரும் எவ்வளவு நேரம் உட்கார்ந்திருந்தார்கள் என்பது தெரியாது. ஒரு கிணற்றில் குளித்து பேண்டை அலசிக் காயவைத்துப் போட்டுக்கொண்டு கிடைத்த பஸ்சை பிடித்து சின்னராசு பண்ருட்டியில் இருந்த மாமன் வீட்டுக்குப் போனான்.

அங்கே எதுவும் சொல்லாமல், வீட்டில் இருந்தால் பெயிலானது மனதை போட்டு படுத்துகிறது என்று சொல்லி இரண்டு நாள் விருந்து சாப்பிட்டான். மாதையனை மோட்டார் கொட்டாயில் படுத்துக்கொள்ளச் சொல்லிவிட்டான். சாப்பிட மட்டுமே அவன் வீட்டுக்கு வந்து சென்றான்.

என்ன செய்வது? எல்லாவற்றையும் மாமனிடம் சொல்லிவிட்டு தப்பிக்க வழிதேட முடியுமா? முடியவே முடியாது. பாண்டிச்சேரிக்குப் போய் உண்மையைச் சொல்லி காலில் விழுந்து உயிரைக் காப்பாற்றிக் கொள்வதா? அதுவும் முடியாது. எடுத்துச் செல்லும் சுமை தொலைந்தாலும் கொண்டு வரும் சுமை தொலையக் கூடாது என்ற கட்டளை அவன் நெஞ்சை அறுத்தது. மாதையனுக்கோ தான் எதைச் சுமந்து வந்தோம் என்பதையே சொல்லாமல் இதில் மாட்டிவிட்ட சின்னராசுவின் மீது கொலை வெறி வந்தது. ஆனால், ஒன்றும் செய்ய முடியாது.

அவனுக்குக் காய்ச்சல் வேறு வந்துவிட்டது. மூன்றாவது நாள் காலை கிணற்றில் குளித்துவிட்டு இட்டிலி சாப்பிட மாமன் வீட்டுக்கு வந்த போது திண்ணையில் மெட்ராஸ் அண்ணன்களும் அவர்களுடன் வேறு ஒரு ஆளும் உட்கார்ந்திருந்தனர். தூரத்தில் சின்னராசுவின் சிநேகிதன் சங்கரன் நின்று கொண்டிருந்தான். அவனுக்கு என்ன நடக்கிறதென்றே தெரியவில்லை. சின்னராசுவின் சொந்தக்காரர்கள் வீட்டுக்கெல்லாம் அழைத்துச் செல்லச் சொன்ன மெட்ராஸ் அண்ணன்கள் அன்று மாமன் வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள்.

மாமா சின்னராசுவிடம்,"என்ன ராசு இவங்களுக்கு ஏதோ நெலம் வாங்கித் தரதா சொல்லிட்டு இங்க வந்துட்டயாம். அவங்களும் அட்வான்ஸ் பணம் கொடுத்துட்டாங்களாம்." என்றார்.

அவன் எதுவும் சொல்லாமல் மெட்ராஸ் அண்ணன்களைப் பார்த்தான். "பரவாயில்லை சின்னராசு இன்னிக்கு போயி முழுசா பேசி முடிச்சிடலாம் கௌம்பி வா" என்றார்கள். மாமா வீட்டில் வந்தவர்களுக்கும் இட்டிலி தோசை விருந்து நடந்தது. கிளம்பும் பொழுது மெட்ராஸ் அண்ணன் சின்னராசுவின் தோளில் கையைப் போட்டுக்கொண்டார்.

புதியவர் மாதைய்யன் தோளில் கையைப் போட்டுக்கொண்டார். பாண்டிச்சேரி வந்து சேரும் வரை யாரும் எதுவும் பேசவே இல்லை, தோளில் இருந்த கையும் இறங்கவில்லை. பாண்டிச்சேரியில் பிரியாணி பிராந்தி பிறகு காலப்பட்டுக்கு காரில் பயணம். தோப்பில் இருந்த பங்காளாவில் இன்னும் சிலபேர் இருந்தார்கள்.

மெட்ராஸ் அண்ணன்தான் பேசினார். "என்ன சின்னராசு இதுக்கெல்லாம் பயப்படலாமா? இதெல்லாம் இந்தத் தொழிலுல சகஜம். நேரா வந்து சொல்லிட்டு வீட்டுல போயி ஓய்வெடுக்கணும். பெறகு அடுத்த வேலையைத் தொடங்கணும். ரெண்டு தடவை போய் வந்தா, நஷ்டம் சரியாயிடப் போவுது. இப்போ ஒரே ஒரு குறைதான். மாதையனுக்கும் தெரிஞ்சி போச்சி. இப்ப நாம ஒரு குடும்பமா ஆயிட்டோம் என்ன மாதைய்யா?"

"நஷ்டமோ லாபமோ நீங்க செஞ்ச வேலைக்கான சம்பளம் இது. போங்க வீட்டுல போயி ரெஸ்ட் எடுங்க. நாலு நாள் கழிச்சி வேற ஒன்னு பெரிசா செய்யறோம், என்ன? போ சின்னராசு, மாதைய்யா பத்திரம். நம்ம தொழில்ல அம்மாக்கிட்ட, பொண்டாட்டிகிட்ட, அக்கா தங்கச்சிங்க கிட்ட கூட உண்மைய சொல்லிடக்கூடாது. பணம் போனா வந்துடும், உயிரு வருமா சொல்லு?"

"இதுல செல பேருக்கு உயிருகூட போயிருக்கு. ஒங்கள உயிரோட விட்டானுவளே அதுவே

(தொடர்ச்சி 45ஆம் பக்கம்)

(42ஆம் பக்கத் தொடர்ச்சி)

பெரிசுதான். நீங்க காணாம போனதும் நாங்க உங்களுக்கு என்ன ஆயிடுச்சோன்னுதான் பயந்துட்டோம். பணம் போனா மசுரே போச்சி, நாம பாக்காத பணமா?"

சின்னராசுவும் மாதைய்யனும் தாங்கள் மெட்ராஸ் அண்ணன்களைத் தப்பாக நெனைச்சது பத்தி வருத்தப்பட்டபடி வீடு வந்த சேர்ந்தார்கள்.

சின்னராசு மாமன் வீட்டுக்குப் போனதைச் சொன்னான். "உங்கதங்கச்சி புருஷன பாக்க அவசரமா? சொல்லிட்டுப் போறதுதானே. அரசிக்கடைக்கு வந்த பண்ருட்டியாரு சொல்லிதான் நீ அங்க இருக்கிறதே தெரியும்." அம்மாதான் அலுத்துக்கொண்டார். அப்பா வழக்கம் போல எதுவும் கேட்டுக்கொள்ளவில்லை. விழுப்புரம் மண்டிக்குப் போய்வரச் சொல்லி டிராக்டரில் அனுப்பினார்.

சின்னராசுவின் சிநிநேகிதர்கள் கொஞ்ச நாளைக்கு பையெடுக்கிற வேலையில்லை என்று சொல்லி சேர்த்து வைத்திருந்த பணத்தில் சின்னதாக பெட்டிக் கடைகளை ஆரம்பித்து நடத்த ஏற்பாடுகளைத் தொடங்கிவிட்டார்கள். சின்னராசுவுக்கும் இரண்டு வாரம் எதுவும் வேலையில்லை.

அன்று வெளியே போய் வந்தவனுக்கு சின்ன அதிர்ச்சி. மெட்ராஸ் அண்ணன்கள் கிராப்வெட்டி மழமழன்னு ஷேவ் செய்துகொண்டு வாத்தியார்கள் போல வீட்டுத் திண்ணையில் உக்கார்ந்திருந்தார்கள்.

அவன் தயங்கியபடி, "என்ன அண்ணா வீட்டுல தெரிஞ்சா" என்றான்.

"அதெல்லாம் பயப்படாத சின்னராசு. அம்மாவும் தங்கச்சியும் ஏற்கனவே எங்களுக்கு காப்பி, வடை எல்லாம் கொடுத்து கவனிச்சிட்டாங்க. டுடோரியல் வாத்தியாருங்க தானே நாங்க நீ ஏன் பயப்படனும்? போ உள்ள" என்று சிரித்தார்கள்.

உள்ளே போனவனிடம் அம்மா கேட்டார்: "என்னடா உங்க டுடோரியல் வாத்தியாருங்க வருவாங்கன்னு ஒரு வார்த்த சொல்றதில்லையா? பாரு சென்னம்மாவ அனுப்பி காப்பித்தூளு வங்கியாறச் சொன்னேன். பின் பக்கமா போயி நானு சூடா வடைய வாங்கி வந்தேன். வீட்டுக்கு வந்தவங்கள கவனிக்கணுமில்ல?" சின்னராசுக்கு அப்பாடா என்று இருந்தது.

மெட்ராஸ் அண்ணன்கள், "சரிம்மா நாங்க கௌம்பறோம்" என்றார்கள். "இருங்க சாப்பிட்டுட்டு போகலாம்." அம்மாவின் குரலில் அன்பு தெரிந்தது. அண்ணன்மார்கள் அன்புடன், "அடுத்த முற வரும்போது சாப்பிடறோம். இன்னிக்கு இன்னும் ஒரு தம்பிய பார்க்கனும். கொஞ்சம் தண்ணி மட்டும் கொடுங்க" என்றார்கள். சென்னம்மாவிடம் தண்ணி எடுத்துவரச் சொன்னார் அம்மா. சென்னம்மாவிடம், "என்ன படிக்கிற பாப்பா" என்றார்கள் டுடோரியல் சார்கள்.

"டண்த் எக்ஸாம் எழுதப் போரேன் சார்" என்றாள் சென்னம்மா. "நல்லா எழுதனும் அண்ணன் மாறி கோட்ட விட்டுட்டு எங்ககிட்ட வந்து நிக்கக்கூடாது." தண்ணிய குடித்து விட்டு, "சின்னராசு, மாதைய்யன் வீடு ஒனக்குத் தெரியுமா?" என்றார்கள். அவன் அவர்களைப் பார்த்தான். "அந்தப் புள்ள பிரைவேட்டா பிளஸ்டு எழுதனும்னு சொல்லிச்சி, அதான்." அவன் அவர்களுடன் கிளம்பினான்.

கார் அருந்ததிபுரம் நோக்கிச் சென்றது. மாதையன் அவர்களை எதிர்ப்பார்க்கவில்லை. அவனுடைய வீட்டில் உட்கார இடமில்லை. வந்தவர்கள், "உங்க சின்னம்மா வீடு பெரிசாமே. அங்க தோட்டத்துல உக்காந்து பேசலாமே" என்றார்கள். மாதையன் போய் கேட்டுவிட்டு வந்து அவர்களை அழைத்துப் போனான்.

அங்கும் டுடோரியல் வாத்தியார்கள்தான் பேசினார்கள். மாதையன் மரத்தில் ஏறி இளநி இறக்கி உள்ளே எடுத்துச் சென்றான். பொக்கிளை இளநி தண்ணீரை டம்ளர்களில் ஊற்றி தட்டில் எடுத்து வந்து தந்தாள். சின்னராசுவுக்கும் ஒரு டம்ளர்.

வந்தவர்கள் அவளிடமும், "பாப்பா என்ன படிக்கிற?" என்று கேட்டு தெரிந்துகொண்டார்கள். திரும்பி வரும்போது, "என்ன சின்னராசு, மாதைய்யன் தங்கச்சி இப்படி இருக்கிறா, மெட்ராஸ் வந்து சினிமாவுல சேந்தா பெரிய ஆளா ஆயிடுவா தெரியுமா?" என்றார்கள்.

அவனை வீட்டில் விட்டுவிட்டுப் போகும் பொழுது, "ஒரு வழியா அந்த புள்ளங்க வராங்களாம், இன்னும் ரெண்டு நாளுள மூணு பேரு வந்து ஊரச் சுத்திப் பாக்கணுமாம். நீயும் மாதைய்யனும் அவங்க கூட காருல போகணும். ஆனா, பொம்பள புள்ளங்க யாராவது கூட இருந்தா அவங்களுக்குத் தொணையா இருக்கும். ஆம்பள புள்ளங்க கூட போனா பாக்க ஒரு மாதிரி இருக்கும், பாக்கலாம்" என்று தயங்கியபடி சொல்லிவிட்டு, "நாளைக்கு ரெண்டு பேரும் வாங்க, அஜந்தா தேட்டரு பக்கம் இருக்கிற பாருக்கு." கட்டளையும் தந்து விட்டு காரில் ஏறிப் போனார்கள்.

சின்னராசு, மாதையனைப் பார்க்கப் போனான். "நாளைக்கு ஒரு பெரிய வேலை இருக்குப்பா" என்று சொல்லிவிட்டு, புள்ளகள் வருவதைப் பற்றியும் சொன்னான். மாதையன் குழப்பத்துடன் அவனைப் பார்த்தான். "நாமதான் அவங்களுக்கு கூடமாட இருக்கணுமாம்" என்று கண்ணைச் சிமிட்டினான். தன் சிநேகிதர்களிடம் இதைப் பற்றி மூச்சுவிடக்கூடாது என்பது அவனுக்குத் தெரியும்.

8

**செ**ன்னம்மா, பொக்கிளையைப் பார்க்க அவளுடைய வீட்டுக்குப் போயிருந்தாள். இன்னும் மூன்று நாளில் பரிட்சை. அதற்குள் கொஞ்சம் அரட்டை அடிக்க வேண்டும். கொஞ்சம் தமிழ் இலக்கணமும் கேட்க வேணும்.

மதியம் சாப்பிட்டு விட்டுத் தோட்டத்தில் உக்கார்ந்து படித்துக் கொண்டிருந்தபோது மாதையன் வந்தான். "சின்னராசு வந்திருக்குது" என்றான். சென்னம்மாவுக்கு ஒன்னும் புரியவில்லை. பொக்கிளை, "வரச்சொல்லு" என்றாள்.

வந்தவன் கட்டிலில் உட்கார்ந்து மாதையனைப் பார்த்தான். மாதையன், "அன்னிக்கு வந்தாங்களே டுடோரியல் சாருங்க. அவங்களோட வீட்டுக்கார அம்மாங்க அரிக்கமேடு பாக்கணும்னு ஆசைப்படறாங்களாம். ஆம்பிளைப் பிள்ளைங்ககூட காருல நெருக்கியடிச்சுப் போக ஒரு மாதிரி இருக்காம். அதுதான் நீங்க ரெண்டு பேரும் வந்து எடத்தைச் சுத்திக் காட்டி அழைச்சிட்டு வர முடியுமான்னு சாருங்க கேட்டாங்க."

"அங்க போகணும்னா அஞ்சு மணிக்குள்ள போயி ஆறு ஆறரைக்குத் திரும்பி வந்துடனும்" என்றாள் சென்னம்மா. "அவங்க வீராம்பட்டிணம் கோயிலுக்கும் போகணுமாம்." சின்னராசு சொன்னான்.

நாலு மணிக்கு கார் வந்து தூரத்தில் நின்றது. காரில் டிரைவரும் மாதையனும் மட்டும் இருந்தார்கள். பொக்கிளையும் சென்னம்மாவும் பின் சீட்டில் உட்கார கார் கொஞ்சம் வேகமாகவே சென்றது.

சென்னம்மா பொக்கிளையின் தாவணியை இழுத்துவிட்டுச் சரிசெய்தாள். பொக்கிளை சென்னம்மாவின் சடையை நுனியில் பிரித்து மீண்டும் பின்னிவிட்டாள்.

கார் ஒரு முடக்கில் நின்றபோது சின்னராசு வந்து ஏறிக்கொண்டான். அவன் சென்னம்மா பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான். கார் எந்தப் பக்கம் போகிறதென்பது கொஞ்ச நேரம் தெரியவில்லை. இன்னொரு கார் வந்து சேர்ந்துகொள்ள இரண்டும் முன்னும் பின்னுமாகச் சென்றன. மற்றொரு காரில் பெண்கள் இருக்கிறார்கள் என்றான் சின்னராசு. அரிக்க மேடு பக்கம் வந்தும் நிற்காமல் இரண்டு கார்களும் மேலே சென்றன.

மாதையன், "என்ன டிரைவர் இங்கதானே அரிக்கமேடு இருக்கு" என்றான். "முதல்ல சின்ன வீராம்பட்டினம் போறாங்களாம், கையை காட்டினாங்க." டிரைவர் சொல்லிவிட்டு வேகத்தை அதிகமாக்கினான். கொஞ்சம்போல இருட்டு இறங்கிக் கொண்டிருந்தது.

9

**ஹா**ல் டிக்கெட் வாங்க பொக்கிளையும் சென்னம்மாவும் மணவெளி பள்ளிக்கூடம் போன அன்று ஊரே களேபரமாகியிருந்தது.

'சின்ன வீராம்பட்டினம் உப்புத் தண்ணி கலங்கல்ல ஆறு ஆம்பிளங்க பொணம் உப்பிப்போயி கெடந்துதாம். நரிங்க வந்து சின்னாபின்னமாக்கிட்டு போயிடுச்சாம். மெட்ராசுல இருந்து வந்த இரண்டு காருங்க ஒரு சவுக்குத் தோப்பில நிக்குதாம். கொஞ்சநாளாவே மெட்ராசுல இருந்து வந்த ஒரு கள்ளநோட்டுக் கும்பல் பாண்டிச்சேரில இருந்துகிட்டு அக்கிரமம் பன்னிகிட்டு இருந்திருக்கு. ரெண்டு கும்பலுக்கும் நடுவுல நோட்டு மாத்தறதுல சண்ட வந்து குத்திக்கிட்டு செத்திருக்கலாம்னு சொல்றாங்க போலீசுங்க.'

ஒன்னு ரெண்டு பிணங்கள பாத்த அந்த ஊரு இப்ப ஆறு பொணங்கள ஒன்னா பாத்து அலண்டு போயிருந்தது.

சென்னம்மாவும் பொக்கிளையும் ஹால் டிக்கட் வாங்கிக்கொண்டு தோழிகளோட நடந்து வந்து கொண்டிருந்தார்கள். பின்னால் வழக்கம் போலப் பசங்க கும்பல். அதில ஒரு நெட்டயன், "என்ன சென்னம்மா உன்னோட பிரண்டு எதுக்கு எக்ஸாம்லாம் எழுதிக்கிட்டு கிடக்கணும்? மெட்ராஸ் போனா சிரிதேவி மாதிரி பெரிய ஸ்டாரா ஆகிடலாம், பெறகு அக்கா நான் பாஸாயிட்டேன்னு சொல்லிட்டு பாட்டு பாடலாமில்ல" என்றான். சென்னம்மா, "அத நீயே அவக்கிட்ட சொன்னின்னா சுண்ணாப்பாதில மிதந்திடலாமில்ல?" என்றாள். பொக்கிளை சிரிப்பை அடக்க முடியாமல் விழுந்து விழுந்து சிரித்தாள். பொக்கிளை புன்னகைத்துக் கூடப் பார்க்காத பசங்களுக்கு அவள் விழுந்து விழுந்து சிரிப்பதைப் பார்த்ததும் கிலி கண்டது.

சென்னம்மா பொக்கிளையின் காதில் வந்து, "அது என்ன வேற எங்கயும் இல்லாம கழுத்துல மட்டும் ஒரு கீறு? அந்த மாதைய்யன மட்டுமாவது விட்டிருக்கலாண்டி" என்றாள்.

"விட்டிருந்தா நாம இப்படிச் சிரிச்சிக்கிட்டு, நடந்து போயிக்கிட்டு இருக்க முடியாது தெரியுமில்ல சென்னு."

சென்னு, பொக்கிளையின் இடுப்பைக் கையால் செல்லமாக வளைத்துப் பிடித்த போது பின் பக்கத் துணி மடிப்பில் அது பத்திரமாக இருந்தது. "என் மேல உனக்குக் கோபமா இல்லயா சென்னு?" என்ற பொக்கிளையிடம், "நீ இனிமே இப்படி சிரிச்சிக்கிட்டே இருக்கணும்பா அதுபோதும்" என்றாள் சென்னம்மா, சிரிக்காமல்.

பிரேம் <kpremananthan@gmail.com>

# ரமா சுரேஷின் அம்பரம்

**நடேசன்**

இனிப்பான உணவை உண்டபின், அந்த நினைவுகள் நாக்கைவிட்டு அகலமறுப்பதுபோல், ஒரு நாவல் வாசித்தபின்னர், அதில் வரும் ஒன்று அல்லது இரண்டு பாத்திரங்கள் நமது சிந்தனையில் நாட்கள் நினைவிருந்தால், அந்த நாவல் வெற்றியடைந்ததாக நினைப்பேன். இதுவே காலம் காலமாக காவியங்களின் அளவீடாகும். பாரதம் வாசிக்காதவர்களும் என்னடா வீமனைப் போல் தின்கிறாய் என்பார்கள். எந்தப் பெண் தனக்கு ராமர் போன்ற கணவனை விரும்பாதவர்கள்? இவை எல்லாம் கற்பனைக் கதைகளானாலும் பாத்திரங்களது குணம், செயல்கள் நம்மைப் பாதிக்கிறது. இப்பொழுது ராமனை, வெறுப்பவர்களும் கம்பனது பாதிப்பின் தழும்பைத் காவுகிறவர்களே.

இதைவிட ஒரு நிலத்தில் நிகழ்வோடு நாவல் பின்னும்போது, எங்களை அந்த நிலத்திற்கு கையை இறுகப்பிடித்து அழைத்துச் செல்லும் ரமா சுரேஷின் உத்தி வெற்றியளிக்கிறது. 'அம்பரம்' நாவலில் கதாநாயகன் யூசுப், 1930இல் பர்மாவில் பேகு என்ற இடத்தில் நடந்த நில நடுக்கத்தில் தனது தாயை இழக்கிறான். அதேபோல் அவனது மனைவியை, ஜப்பானியர், பிரித்தானியரிடம் இருந்து சிங்கப்பூரை கைப்பற்றிய காலங்களில் அவர்கள் செய்த கொலைகளால் பறி கொடுக்கிறான் என்ற வரலாற்றோடு கையறு நிலையில் சிங்கப்பூரில் இருந்து ரங்கூனுக்கு மீண்டும் கப்பல் ஏறுகிறான். யூசுப் வாழ்க்கையோடு தொடரும் நில நடுக்கம், போர் முதலான இரண்டு சம்பவங்கள், நாவலை வாசிக்கும் எங்களையும் வைரசாக தொற்றுகிறது.

ஜோர்ஜ் ஓர்வலின் 'பர்மிய டேய்ஸ்' (Burmese Days) என்ற நாவலில் கதாநாயகன் தனது காதலைச் சொல்ல முயலும்போது, பர்மாவில் நில நடுக்கம் ஏற்பட்டு, அதன் களேபரத்தில் அந்தக் காதல் நசிந்துவிடுகிறது. அந்த நாவலில் வரும் இந்தச் சம்பவம் என் மனதில் ஆழமாகப் பதிந்துள்ளது. அதுவும் என்னை பர்மாவிற்கு பயணம் செய்ய தூண்டிய விடயங்களில் ஒன்று. எனது முதல் நாவல் 'வண்ணாத்திக் குள'த்தில் வவுனியா சந்தை எரியும்போது இராணுவத்தினர், அதுவரையும் தம்பதியாகாத தமிழ் ஆணை, துப்பாக்கியால் அடிக்க முயன்றபோது, சிங்கள பெண்ணான சித்திரா, 'மகே சுவாமி புருசயா' (எனது கணவன்) எனச் சிங்களத்தில் சொல்லி அணைத்து இராணுவத்தினரிடம் இருந்து அவனைப் பாதுகாப்பாள். இந்தச் சம்பவம் நிச்சயமாக வண்ணாத்திக்குளத்தை வாசித்தவர்களது மனதில் ஆழமாகப் பதிந்திருக்கும்.



முஸ்லிம் இந்திய பெண்ணுக்கும் பவுத்த பர்மிய இளைஞனுக்கும் பிறந்து, சகோதரனைப் பலி கொடுத்த சிறுவன் யுசுப் தாயுடன் வாழ்கிறான். அக்காலத்தில் தந்தை, குடும்பத்திலிருந்து விலகி துறவியாகிறான். தாயின் அரவணைப்பில் யூசுப் வளரும் போது, நில அதிர்வினால் தாயை இழந்து அனாதையாகிறான். அவன் சிவராமன் என்ற தமிழரால் சொந்த மகனாக வளரும்போது குத்துச் சண்டை பயிலும் வீரனாகி, அதில் நடந்த பயிற்சியில், தனது நண்பனைக் குத்தியபோது அவன் இறந்துவிடுகிறான்.

யூசுப், நண்பனை இழந்த சோகத்தால் குத்துச்சண்டையை மறந்திருந்தான். ஆனால், திருமணமாகிய பின்னர் அவனது மனைவி, அவனைக் குத்துச்சண்டையில் கலந்துகொள்ளும்படி கேட்கிறாள். அவளது வேண்டுகோளுக்கிணங்க பர்மாவில் குத்துச்சண்டையில் ஈடுபட்டுப் புகழ்பெற்ற யூசுப், பின்லாந்தில் நடக்கவிருக்கும் ஒலிம்பிக்கில் வாய்ப்புப் பெறும் நோக்கில் சிங்கப்பூர் செல்கிறான். அங்கு ஒலிம்பிக் பந்தயம் யுத்தத்தால் நடக்காததால் யூசுப் கப்பலில் மாலுமியாகிறான்.

அப்படி சென்றவன், ஜப்பானியர் தென்கிழக்காசியப் பிரதேசத்தை பிடிக்கும் வரலாற்றின் கொடுமையான காலங்களில், இவனது குடும்பம் சிங்கப்பூரில் சிதையும் வரலாறுதான் இந்த நாவல் எனச் சுருக்கமாகச் சொல்ல முடியும்.

நாவலின் ஆரம்பம், ஆங்கிலேயர் புத்த கோயிலின் மணியைத் திருட முயலும் உண்மைச் சம்பவம் நடந்த வருடத்திலிருந்து ஆரம்பிப்பதால், நாவல் நமக்குள் இந்தக் கதை உண்மையானது

என்ற பிம்பத்தை உருவாக்குகிறது. இந்தச் சம்பவம் நாவலுக்குத் தொடர்பற்ற போதிலும், பர்மியரது மனநிலையை ஆரம்பத்திலேயே நமக்கு விளக்குவதால், நாவல் உண்மையான கதைதான் கற்பனையல்ல என்ற தோற்றத்தைக் கொடுத்து எம்மை நாவலின் பக்கங்களின் உள்ளே இழுக்கிறது.

புதிய பிரதேசத்தில், வித்தியாசமான பாத்திரங்கள் இன மத சாதி வித்தியாசமும் அற்று ஒன்றுடன் ஒன்று இணைவது, இதுவரையில் பார்த்த தமிழகத்து நாவல்களில் இல்லாதது. அங்கு ஒவ்வொருவரும் தங்களது சாதி மதங்கள் என்ற கூட்டுக்குள் இருந்து, முடிந்தால் இரை தேடிப்போன தாய்ப் பறவையைக் காணாமல் எட்டிப்பார்க்கும் குஞ்சுகளாக கூட்டிலிருந்து அங்கும் இங்கும் எட்டிப் பார்த்து கதை எழுதுவார்கள். தமிழர்கள் வெளிநிலத்தில் வாழும்போது சாதி இன மதக்கூறுகள் தளர்கின்றன.

இந்த நாவல், தென் கிழக்காசியாவில், பிரித்தானியர்களது இறுதிக் காலத்தில் இந்தியர்கள், அதிலும் முக்கியமாக தமிழர்களது அலைவுகளின் காலக்கண்ணாடியாகிறது. அத்துடன் பவுத்த பர்மியச் சமூகத்தின் முக்கிய கூறுகளை நமக்குப் புரியவைக்கிறது.

இலங்கை, இந்தியா போன்று பர்மாவையும் ஆங்கிலேயர் ஆண்டபோதிலும், பர்மியர்கள் தங்களது விழுமியம், மொழி, விளையாட்டு, கலாச்சாரங்களை மிகவும் இறுக்கமாகப் பிடித்துக் கொண்டார்கள் என்பதைப் நாவல் புரியவைக்கிறது. அதேபோல் சிங்கப்பூரில், சீன சமூகத்தின் கலாச்சார, தொன்ம நம்பிக்கைகளை நமக்குத் தெரியவைக்கிறது. இந்த விளக்கங்கள் நாவலுக்கு மானிடவியல் (Anthropology) சாயலைக் கொடுக்கிறது. இது நாவல் விமர்சகர்கள் சிலருக்குப் பிடிக்காத போதிலும், மனிதர்கள் வாழும்போது அங்குள்ள கலாச்சாரமே, பாத்திரங்களது அக, புற நிகழ்வுகளை மட்டுமல்ல, மனவோடையையும் தீர்மானிக்கிறது. புதிய நிலத்தை வைத்து நாவல் எழுதும்போது அந்த மண்ணின் கலாச்சாரத்தை வாசகர்களுக்குப் புரிய வைக்க வேண்டும். குடும்பம் பிடிக்காத பர்மியன் துறவியாவதும், ஐரோப்பியன் மறு திருமணம் புரிவதும், நம்மவர் மதுவில் மூழ்குவதும் அந்தத்தந்த சமூகத்திற்கு உரியது.

நாவலின் முதல் பாதி பர்மாவிலும், மறுபாதி சிங்கப்பூரிலும் நடக்கிறது. பர்மாவில் சம்பவங்கள் நடக்கும்போது, உறவுகள் சிநேகங்கள் என விட்டுக் கொடுப்புகள், நமக்கு சாமானிய மனிதரை பிரதிபலிக்கிறது. அதேபோல் நாவலில், தமிழர்கள், மலையாளிகள், வங்காளிகள் என்ற பேதமற்று வாழும் வாழ்வு அமைதியாக, இரங்கூன், ஐராவதி என்ற இரண்டு ஆற்றை அண்டிய பிரதேசங்களில் ஓடுகிறது.

நாவலின் பிற்பகுதியில் சிங்கப்பூரில் நிகழும் விடயங்கள், இரண்டாவது உலக யுத்தம் பற்றிய திரைப்படக் காட்சிகளை மனதில் நிறுத்துகிறது. ஆனால், அவை ஐரோப்பாவில் நடந்ததாக நான் பார்த்தவையே. ஐரோப்பியர் எழுதிய வரலாற்றை மட்டுமே நாம் படித்ததால் ஆசியாவில் நடந்த அழிவுகள் நமக்கு அதிகம் பழக்கமில்லை. முக்கியமாக ஜப்பானியர், சீனர்களை உள்மங்கோலியாவில் (inner Mongolia) இலட்சக்கணக்கில் கொலை செய்ததை இலகுவாக உலகம் மறந்துவிட்டது.




சிங்கப்பூருக்கு வந்த யூசுப்பின் மச்சான் (மனைவியின் தம்பி) சிங்கப்பூரில் மறைந்து விடுவதால், அவனது முழுக் குடுப்பமும் பர்மாவுக்குத் திரும்பாமல், அவனைத் தேடி அலைவதாகக் கதை தொடர்கிறது. இங்கு கதையில் நடக்கும் சம்பவங்கள், தற்செயலாக நடக்காமல், காரணங்கள் (Causality) தரப்படுவது ஒரு சிறந்த நாவலாசிரியரது திறமை. இங்கே ஆசிரியரே கதைகளின் முடிச்சுகளைத் தருகிறார்.

ஜப்பானியர்கள், சிங்கப்பூரைக் கைப்பற்றி வைத்திருந்த காலத்தில் செய்த கொடுமைகள், திரைக்கதை போல் பக்கங்களில் மட்டுமல்ல நம் மனதிலும் விரிகின்றது. தரையில் நடக்கும் போர்க்களக் காட்சிகள் மட்டுமல்ல, கடலில் நடக்கும் போரில், பெரிய கடற்படை கப்பல் மெதுவாக மூழ்குவதும், சாதாரண போர் வீரர்களை வெளியகற்றிவிட்டு



இறுதியில் கப்டன் கப்பலுடன் மூழ்குவதும் திரைக்காட்சியாகிறது.

நாவலில் சில இடங்கள் தத்துவமானவை. உதாரணமாக,

> சிவராமா, அவன் நம்மைப்போல் எந்த சித்தாந்தங்களுக்கும் பைத்தியகாரத்தனமாக அடிமையாகவில்லை. நாமெல்லாம் மனுசர்களுக்கு ஏத்த மாதிரி வாழ்வதுபோல் நடித்துக் கொண்டிருக்கிறோம். அவனாவது சரியாக வாழ்ந்துபோகட்டும்.

> "உன்னை நான், தம்பி - ஐயா - ராசா - யூசுப் - என் குலசாமி என்று எப்படிக் கூப்பிட்டாலும் அத்தனை பெயர்களும் உன்னைத்தான் சேரும். அது போலத்தான சாமியும் உன்னைத்தான் வந்து சேரும்" என்கிறார் அவனை எடுத்து வளர்த்த தந்தை

இதை விட மத நல்லிணக்கத்தை அழகாக யாராவது பேசமுடியுமா?

இது முதலாவது நாவல் எழுதியவரது எழுத்துப் போலவா இருக்கிறது?

பா.சிங்காரத்தின் இரு நாவல்கள் 'கடலுக்கப்பால்', 'புயலிலே ஒரு தோணி' முதலான நாவல்களைப் படித்தவன். அவை புதிய தளம் என்று பலரால் புகழப்பட்டது. என்னைப் பொறுத்தவரை 'அம்பரம்' புதிய தளத்துடன் வசனங்களைக் காட்சியமைப்பாகத் தருவதில் முன்னிற்கிறது.

நாவலில் குறைஇல்லையா என்றால் உள்ளது. அவை நாவலது நோக்கத்தை பாதிக்காதவை. ஒன்று மட்டும் என்னைப் பாதித்தது. ஒரு அத்தியாயத்தின் இறுதியில் யூசுப், நண்பனைக் குத்துச்சண்டையில் அடித்தபோது அவன் மயங்கி விழுகிறான். அடுத்த அத்தியாயத்தில் யூசுப் திருமணமாகி, முதலிரவின்போது மயங்கிய நண்பனைப் பற்றிய எந்த சிந்தனையும் அற்று மகிழ்கிறான். அடுத்த அத்தியாயத்தில் மயங்கிய நண்பன் மரணமடைகின்றான். இச்சம்பவங்கள் நாவலில் வரும்போது யதார்த்தமாக இல்லை.

பல வருட ஆய்வின் பின்பாக வெளிவந்த நாவல். அத்துடன் இதில் மேற்கு நாட்டு நாவலது சாயலும் உள்ளது. தமிழகத்திற்கு வெளியே இருக்கும் களத்தை சித்திரிக்கும் நாவல் என்பதால் பலரும் வாசிக்கவேண்டும். நாவலாசிரியர் ரமாவுக்கு எனது வாழ்த்துகள்.

அம்பரம் கரிகாற்சோழன் விருது பெற்றது.

நடேசன் <uthayam12@gmail.com>

அம்பரம் - ரமா சுரேஷ்; விலை ரூ. 350; வெளியீடு: மோக்லி பதிப்பகம், 9/6 **S2 - A** பிளாக், நவரத்னா அபார்ட்மெண்ட்ஸ், வேலாயுதம் தெரு, ராதா நகர் பிரதான சாலை, குரோம்பேட்டை, சென்னை - 600044;
மின்னஞ்சல்: **ramasureshamar@yahoo.com, Ph: +91 91768 91732**

# அந்தக் காலத்து நண்பர்கள்

## பாவண்ணன்

அம்ருதா மாத இதழில் இருபத்தைந்து மாதங்களாக விட்டல்ராவ் 'தொலைபேசி நாட்கள்' என்னும் தலைப்பில் எழுதிவந்த தொடரை கடந்த ஆண்டு நிறைவு செய்தார். 2024 ஜனவரியில் தொடங்கிய புத்தகக் கண்காட்சிக்கு முன்பாக, அவருடைய புகைப்படத்தையே அட்டைப்படமாகக் கொண்டு அந்தத் தொடர் புத்தக வடிவில் வெளியானது. நல்ல கட்டமைப்பில் 256 பக்கங்களில் அந்தப் புத்தகத்தை அம்ருதா பதிப்பகமே வெளியிட்டிருந்தது.

'தொலைபேசி நாட்கள்' நம் காலத்தில் வெளிவந்திருக்கும் முக்கியமானதொரு ஆவணம் என்றே சொல்லவேண்டும். தன் பணிக்கால அனுபவங்களோடு, சென்னைக்கு தொலைபேசி வந்த வரலாற்றையும் வளர்ந்த வரலாற்றையும் பல்வேறு விதமான மனிதர்களைப் பற்றிய நினைவுகளையும் இணைத்து ஒரு மாபெரும் சித்திரத் தொகுப்பாக இந்தப் புத்தகத்தை உருவாக்கியிருக்கிறார் விட்டல்ராவ். இன்றைக்கு காணக் கிடைக்காத பல நிகழ்ச்சிகள் இப்புத்தகத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. வரிசைப்படி சொல்லாத மாபெரும் நாவல் என்றும் அதைக் குறிப்பிடலாம். விட்டல்ராவின் படைப்பாக்கங்களில் இந்தத் தொகுப்புக்கு மிகமுக்கியமான இடமுண்டு.

"என் கூட டிப்பார்ட்மெண்ட்ல வேலை செஞ் சவங்க, இன்னைய தேதி வரைக்கும் என்னோடு நெருக்கமா பழகிட்டிருக்கிறவங்க, எனக்கு மேல் அதிகாரிகளா இருந்தவங்கன்னு கொஞ்சம் பேரு சென்னையிலஇருக்காங்க. அவுங்களயெல்லாம் நேருல சந்திச்சி, ஆளுக்கொரு புத்தகத்த என் அன்பளிப்பா கொடுக்கலாம்னு இருக்கேன்" என்று சொன்னார் விட்டல்ராவ். அதற்காகவே பதிப்பகத்திலிருந்து கூடுதலான எண்ணிக்கையில் புத்தகங்களைக் கேட்டு வாங்கி வைத்திருந்தார்.

அந்த நண்பர்களில் பாதிப்பேர் அவருடைய வயதை ஒட்டியவர்கள். எஞ்சியவர்கள் அவரைவிட இரண்டு மூன்று வயது பெரியவர்கள். ஒருசிலர் ஓய்வு பெற்றோர் தொழிற்சங்கத்தில் இன்னும் ஊக்கத்துடன் செயல்பட்டு வந்தனர். அனைவரோடும் அவருக்கு நல்ல நட்பு இருந்தது. வாரத்தில் ஒரு முறையாவது விட்டல்ராவ் அவர்களை அழைத்து பேசிவிடுவதை நான் பலமுறை பார்த்திருக்கிறேன். அவர் அழைக்காத தருணங்களில் அவர்களே அழைத்து நலம் விசாரிப்பதையும் பார்த்திருக்கிறேன்.



"எல்லாருடைய முகவரிகளையும் கொடுங்க சார். க்ளாத் கவர்ல புத்தகத்தைப் போட்டு அழகா ஸ்பீட் போஸ்ட் செஞ்சிடலாம். அது ரொம்பப சுலபம்" என்றேன்.

"போஸ்ட்ல அனுப்பினா சீக்கிரமா போய் சேர்ந்துடும்ங்கறது உண்மைதான் பாவண்ணன். ஆனா அவுங்க எல்லாரையும் ஒருமுறை சந்திக்கணும்னு ஆசையா இருக்குது. சந்திச்சி பேசிட்டிருக்கும்போது இங்க பாருப்பா? இப்படி ஒரு புத்தகம் எழுதியிருக்கேன்னு எடுத்துக் காட்டிட்டு கொடுக்கணும். அப்ப, அவுங்க இன்னும் கொஞ்சம் சந்தோஷப்படுவாங்க,இல்லையா? அத பார்க்கிறதுக்கு எனக்கும் சந்தோஷமா இருக்கும்."

அவருடைய எண்ணம் எனக்குப் புரிந்துவிட்டது. புத்தகம் கொடுப்பது என்பது ஒரு சின்ன காரணம் மட்டுமே. அதை முன்னிட்டு அனைவரையும் சந்தித்து மனம் விட்டு உரையாடவேண்டும் என்று அவர் மனம் விரும்புகிறது என்பதைப் புரிந்துகொண்டேன்.

"இந்தப் புத்தகங்களைக் கொடுக்கறதுக்காகன்னு தனியா ஒரு பயணத்தைத் திட்டமிடறதுக்குப் பதிலா புத்தகக் கண்காட்சி நடக்கிற சமயத்தில போனீங்கன்னா, நண்பர்களையும் பார்த்தமாதிரி இருக்கும். புத்தகக் கண்காட்சியையும் பார்க்கலாமே சார். கூட ரெண்டு நாள் தங்கினா அதையும் பார்த்துட்டு வரலாம்."

என் ஆலோசனை அவரை யோசிக்கவைத்தது, "அதுவும் நல்ல யோசனைதான். அப்படியே செய்யறேன்" என்றார்.

ஒரு வாரம் கழித்து உரையாடும்போது, "டிக்கட் புக் பண்ணிட்டேன். என்னோடு என் சம்பந்தியும் சென்னைக்கு வராரு. அவரு அவருடைய உறவுக்காரங்க வீட்டுக்குப் போயிடுவாரு. நான் என்னுடைய நண்பருடைய வீட்டுக்குப் போயிடுவேன். இந்த மாதிரி வரேன்னு அவருகிட்ட போன்ல சொன்னேன். எங்கயும் வெளியே போய் தங்கவேணாம். நேரா நம்ம வீட்டக்கே வா. எத்தனை நாள் வேணும்னாலும் தங்கலாம்னு சொல்லிட்டாரு" என்றார்.



"அவரு வீடு எங்க இருக்குது?"

"கே.கே. நகர் மெட்ரோ ஸ்டேஷன் பக்கத்துல."

"சிட்டிக்குள்ளயே இருக்கிற இடம்தான். ஒரு பிரச்சினையும் இல்லை. ஒரு நாளைக்கு ஒரு திசைன்னு கணக்கு வச்சிகிட்டு கௌம்புங்க. ரெண்டு பேரையோ மூனு பேரையோ பொறுமையா சந்திச்சி பேசிட்டு வாங்க."

உரையாடும் போக்கில், எனக்கு வேறொரு விஷயமும் ஞாபகத்துக்கு வந்தது. விட்டல்ராவுடைய பால்யகால நண்பரொருவர் பெங்களூரிலேயே சஞ்சய் நகரில் வசித்து வந்தார். அவரைப் பற்றி அடிக்கடி தம் உரையாடலில் குறிப்பிட்டுச் சொல்வது வழக்கம். அவரைக் குறிப்பிட்டு, "அவருக்கு புத்தகம் கொடுக்கலையா? எல்லாமே சென்னை நண்பர்களுக்கு மட்டும்தானா?" என்று கேட்டேன். சாதாரணமாகத்தான் அதைக் கேட்டேன். ஒருவேளை மறந்திருந்தால், அவருடைய பெயரையும் பட்டியலில் இணைத்துக்கொள்ளட்டும் என்பதுதான் என் எண்ணம்.

நான் கேட்டதும் ஒருகணம் திகைத்து உறைந்துவிட்டார் விட்டல்ராவ். பிறகு அடங்கிய குரலில், "சந்திரசேகரை நான் எப்படி மறந்தேன்னு தெரியலை பாவண்ணன். ரெண்டு மூனு மாசமா நான் அவருகிட்ட பேசலை. எப்ப பேசினாலும் அவருடைய பிள்ளைதான் எடுக்கிறான். என்னமோ ஒரு பதில் சொல்லிட்டு வச்சிடறான். நேரிடையா பேச முடியாததால, எப்படியோ அந்தப் பேர் ஞாபகத்துலேர்ந்து நழுவிட்டுது. நல்ல வேளை, நீங்க அவரை ஞாபகப்படுத்தினீங்க. கண்டிப்பா அவருக்கும் ஒரு புத்தகம் கொடுக்கணும்" என்று ஒரு பெருமூச்சோடு சொல்லிமுடித்தார்.

"அவரைப் பத்தி அடிக்கடி நீங்க சொல்லி யிருக்கீங்க சார். அதனாலதான் கேட்டேன்."

"நீங்க சொன்னது ரொம்ப நல்லதா போச்சி பாவண்ணன். இல்லைன்னா எனக்கு மறந்தே போயிருக்கும்"

"ஒருமுறை ஒரு கார் வச்சிகிட்டு நீங்க எல்லோரும் உங்க கூட படிச்சவங்கள சந்திச்சி பேசறதுக்காகவே சேலம் போய், அங்கிருந்து கேரளா வரைக்கும் போய்ட்டு வந்தீங்க இல்லையா?"

"ஆமாம். அவரேதான். அவர் ஏற்பாடு செஞ்ச கார்லதான் போயிட்டு வந்தோம். அந்தத் திட்டத்தை போட்டவரே சந்திரசேகர்தான். நம்ம செட்ல யார்யார்லாம் இன்னும் தொடர்புல இருக்காங்கன்னு ஒரு நாள் பேச்சு வந்தது. அப்படியே பேசிப்பேசி ஒரு ஆறு பேருடைய பெயர்களையும் எழுதி ஒரு பட்டியல் தயாரிச்சோம். உங்க வீட்டுக்கு நான் வந்துடவா சந்திரசேகர்னு கேட்டேன். வேணாம் வேணாம், நீ வீட்டுலயே இரு. நான் வந்து உன்ன அழச்சிக்கறேன்னு அட்ரஸ வாங்கிகிட்டாரு. பிறகு சஞ்சய் நகர்லேர்ந்து கார்ல வந்து என்ன பிக்கப் பண்ணிகிட்டாரு. குப்பத்துல பாலன்னு ஒருத்தர் எங்க செட்காரர் இருக்காரு. பெரிய ஃபுட்பால் ப்ளேயர். அவரும் வந்துட்டாரு. எல்லாரும் சேலத்துல போய் தங்கி நண்பர்களைப் பார்த்தோம். எங்க வீடுகள் இருந்த இடங்கள், பள்ளிக்கூடம், சினிமா தியேட்டர் எல்லாத்தயும் பார்த்தோம். பாலக்காடுல எங்க கூட படிச்ச பிரேம்குமார்னு ஒருத்தர் இருக்காரு. எல்லோரும் சேர்ந்து அவரைப் போய் பார்த்து பேசிட்டு வந்தோம். எங்க வாழ்க்கை யில மறக்கமுடியாத அனுபவம் அது. சந்திரசேகர் இல்லைன்னா, அது சாத்தியமாகியிருக்காது."

"அந்தப் பயணத்தைப் பத்தி ஏற்கனவே நீங்க சொல்லியிருக்கீங்க சார். எண்பது வயசுக்கு மேல ஒரு நண்பர்கள் குழு இப்படி தனியா கௌம்பிப் போறதுலாம் ரொம்ப அபூர்வமான செய்தி. அந்த வயசுல பெரும்பாலான ஆட்களுடைய முன்னுரிமை மாறியிருக்கும். அல்லது சுருங்கிப் போயிருக்கும். அந்த வயசுலயும் நட்புக்கு முன்னுரிமை கொடுத்து சந்திக்கறது, பேசிக்கறதுலாம் ரொம்பரொம்ப அபூர்வம்."

"முன்னுரிமைங்கறது என்ன பாவண்ணன்? நடைமுறை சாத்தியங்களை கணக்கில எடுத்துகிட்டு நாமா வடிவமைச்சிக்கிற திட்டங்கள்தானே? எனக்கு ஒரு இடத்துக்கு போக ஆசை இருக்கலாம். ஆனா தனியா போக வழி தெரியாது. அழைச்சிகிட்டு போகவும் துணையில்லை. அப்படி ஒரு நிலைமை வந்தா, என்ன செய்யமுடியும், சொல்லுங்க? என்னுடைய ஆசை தானாவே கடைசி வரிசைக்கு போகவேண்டிதுதான். அதுதானே இயற்கை. வாழ்க்கையில யாரையும் எதற்காகவும் குறை சொல்லவே கூடாது."

சில கணங்கள் அமைதியாகவே கழிந்தன. ஏதோ பழைய நினைவில் மூழ்கியவரைப்போல அவர் முகம் இருந்தது.

“அந்தக் கேரளா பயணத்துக்குப் பிறகு ஒரு வருஷ இடைவெளியில நாங்க எல்லோரும் சேர்ந்து இன்னொரு பயணமும் போனோம் பாவண்ணன். உங்ககிட்ட நான் சொல்லலைன்னு நெனைக்கறேன்.”

“அப்படியா சார்? அது எந்த ஊருக்கு?” என்று ஆச்சரியத்தோடு கேட்டேன்.

“எங்க சேலத்துக்குத்தான். காலையில கௌம்பி காரிலயே போய் திரும்பி வந்தோம்.”

“என்ன சார் விசேஷம்? ஏதாவது கல்யாணமா?”

“நாங்க படிச்ச லிட்டில் ஃப்ளவர் ஸ்கூலுடைய நூற்றாண்டு விழாவுக்குப் போனோம். அந்த ஸ்கூல் ஃபாதர் எங்களைவிட வயசில சின்னவர். ஆனா எங்க நெம்பர எப்படியோ கண்டுபிடிச்சி பேசினாரு. இந்த மாதிரி விழா வச்சிருக்கோம், அவசியமா வரணும்னு சொன்னாரு. சந்திரசேகர்கிட்டயும் பேசியிருக்காரு. அவருதான் ரெண்டு பேரும் சேர்ந்து போவலாம்னு திட்டம் போட்டாரு.”

“பழைய மாணவர்கள்லாம் வந்திருந்தாங்களா?”

“ஆமாம். எல்லோருக்குமே வயசாகி முக அடையாளமே மாறி போயிடுச்சி. எல்லாரயும் ஞாபகப்படுத்திக்கற மாதிரி சில அனுபவங்கள் இருக்குமில்லையா? அதச் சொல்லி ஞாபகமூட்டி ரெண்டு மூனு மணி நேரம் பழைய கதைகளை பேசிட்டிருந்தோம். அது ஒரு மாதிரியான இனிய அனுபவம். எங்க ஸ்கூல் ஸ்போர்ட்ஸ்ல எல்லாப் போட்டியிலயும் ஜெயிச்சி கப் வாங்கற ஆள் ஒருத்தரு இருந்தாரு. அவரு பேரு சிவசுப்பிரமணியம். அந்த விழாவுல அவரைப் பார்த்தேன். நல்லா உயரமா இருந்தாரு. போலீஸ் டிப்பார்ட்மென்ட்ல சூப்பிரன்டென்டா இருந்து ரிட்டயராயிருக்காரு. அவரு கூட கொஞ்ச நேரம் பேசிட்டிருந்தோம்.”

“உங்க பள்ளிக்கூட நாட்கள்னு சொன்னா கிட்டத்தட்ட அறுபது, அறுபத்தஞ்சி வருஷத்துக்கு முந்தைய காலம். பள்ளிக்கூடத்துல நிறைய மாற்றங்கள் ஏற்பட்டிருக்கும், இல்லையா சார்?”

“ஒரு மாற்றமும் இல்லை பாவண்ணன். அப்படியே இருந்தது அந்தப் பள்ளிக்கூடம். நான் சொல்றத நம்பறது உங்களுக்கு கஷ்டமா இருக்கும். ஆனா ஒவ்வொரு வார்த்தையும் நூத்துக்கு நூறு உண்மை. நாங்க ஃபோர்த் ஃபார்ம், ஃபிஃப்த் ஃபார்ம் படிக்கறபோது எங்க க்ளாஸ் ரூம் எப்படி இருந்ததோ, அதே போலவே அன்னைக்கும் இருந்தது.”

“அப்படியா?”

“ஆமாம். விழா முடிஞ்சதும் வா, நம்ம க்ளாஸ் ரூம போய் பார்க்கலாம்னு சந்திரசேகர் கூப்ட்டாரு. அதே பழைய கட்டடம். பழைய தூண். பழைய கதவு. பழைய ப்ளாக்போர்ட். எதுவுமே மாறலை. எங்க க்ளாஸ் ரூமை கண்டுபிடிச்சி உள்ள போனோம். சந்திரசேகர் எப்பவும் முதல் வரிசையில உக்காந்திருப்பாரு. இதான் என் சீட்னு நேரா அங்க போய் உக்காந்துகிட்டாரு. நான் கொஞ்ச காலம் பின் வரிசையில உக்கார்ந்திருந்தேன். என் டெஸ்க்க கண்டுபிடிச்சி நான் உக்கார்ந்தேன். அந்த டெஸ்க் இருந்த இடத்தை கூட இத்தனை வருஷத்துல யாரும் மாத்தவே இல்லை பாவண்ணன். எனக்கு உடம்பெல்லாம் ஒரு மாதிரி புல்லரிச்சி போயிடுச்சி. நான் உட்கார்ந்திருந்த டெஸ்க்ல ஓரமா, அந்த காலத்துல ப்ளேடால கே.வி.ன்னு செதுக்கியிருந்தேன். அது தேக்கு மரத்துல செஞ்ச டெஸ்க். அறுபத்தஞ்சி வருஷத்துக்கு முன்னால பிளேடால செதுக்கின அந்த எழுத்து அப்படியே இன்னும் கல்வெட்டுல பொறிச்ச எழுத்து மாதிரி இருந்தது. பார்க்கப் பார்க்க எனக்கு சந்தோஷம் தாங்கலை. இங்க வந்து பாரு சந்திரசேகர்னு அவர அழைச்சி காட்டினேன். அவரும் அத வெரலால தடவிப் பார்த்துட்டு சிரிச்சாரு. ஸ்கூல் நூற்றாண்டு விழாவுக்கு போய் வந்தது மறக்கமுடியாத அனுபவம்.”

அந்தப் பள்ளிக்கால அனுபவத்தை விட்டல்ராவ் விவரிக்க விவரிக்க, ஒவ்வொன்றும் என் நெஞ்சில் சிறுசிறு காட்சிகளாக விரிவடையத் தொடங்கின. அடுத்த வாரமே எங்கள் ஊருக்குச் சென்று நான் படித்த பள்ளியில் நான் அமர்ந்திருந்த டெஸ்க்கும் வகுப்பறையும் எப்படி இருக்குமென்று பார்க்கவேண்டும் போல ஒரு வேகமெழுந்தது.

“நீங்க நல்ல ரசிகர்ங்கறது ஏற்கனவே தெரிஞ்ச விஷயம்தான். உங்கள மாதிரியே உங்க சந்திரசேகரும் நல்ல ரசிகரா இருந்திருக்காருன்னு இப்பதான் புரியுது. அவருடைய அறிமுகம் ஏற்கனவே கிடைச்சிருந்ததுன்னா, நானும் அந்தப் பயணத்துல உங்களோடு சேர்ந்து வந்திருப்பேன்” என்றேன். என் குரலில் என்னை அறியாமல் ஓர் ஏக்கம் வெளிப்பட்டது.

“அதுக்கென்ன பாவண்ணன்? இன்னொரு பயணத்துக்கு திட்டம் போட்டுடுவோம். சந்திரசேகர்கிட்ட சொன்னா போதும்,எல்லாத்தையும் கச்சிதமா ஏற்பாடு செஞ்சிடுவாரு.”

“நாம எல்லோருமே சேர்ந்து அதே லிட்டில் ஃப்ளவர் ஸ்கூலுக்கு போவோம் சார். உங்க கையால கே.வி.ன்னு செதுக்கின அந்த டெஸ்க்க நானும் பார்க்கணும்.”

“சந்திரசேகருகிட்ட சொன்னா, ரொம்ப சந்தோஷப்படுவாரு. இந்த வருஷமே ஒரு திட்டம் போடலாம். சந்திரசேகருக்கு பயணம் ரொம்ப புடிச்ச விஷயம். செடிகள், மரங்கள் பத்தி புதுசு புதுசா பல செய்திகள் சொல்வாரு. ஜுவாலஜி, பாட்டனி சம்பந்தமா யு.ஜி.சி.க்காக அவரு ரெண்டு பெரிய பெரிய புத்தகங்கள் எழுதியிருக்காரு. பல பல்கலைக்கழகங்கள்ல அந்தப் புத்தகங்கள் பாடபுஸ்தகமா இருக்குதுன்னு சொன்னாரு. அவரும் நானும் போன இன்னொரு பயணம் கூட எனக்கு ஞாபகத்துக்கு வருது. சொல்லட்டுமா?”

“சொல்லுங்க சார்.”

“அறுபத்தி நாலாவது வருஷம்னு நெனைக்கறேன். நான் மட்டும்தான் அப்ப சென்னையில தங்கி வேலைக்கு போயிட்டிருந்தேன். சேலத்துல கிச்சிப்பாளையத்துல எங்க வீடு இருந்தது. சந்திரசேகர் வீடு டவுன் ரயில்வே ஸ்டேஷன்கிட்ட இருந்தது. அவரும் சென்னையிலதான் வேலை செஞ்சிட்டிருந்தாரு. ஒரு பொங்கல் லீவுல நாங்க ரெண்டு பேரும் சேலத்துல சந்திச்சிகிட்டோம். பேசிட்டிருக்கும்போதே நாளைக்கு காலையில ஏற்காடுக்கு நடந்து போவலாமான்னு கேட்டாரு சந்திரசேகர். நானும் உடனே சரின்னு சொல்லிட்டேன். சேலத்துலேருந்து ஏற்காடு பதினெட்டு கிலோமீட்டர் தூரம். அதெல்லாம் எங்களுக்கு ஒரு விஷயமாவே தோணலை. காலையில புறப்பட்டு நடக்க ஆரம்பிச்சிட்டோம். பேச்சு, பேச்சு, பேச்சு, ஒரே பேச்சுதான். ஒரு நாலு மணி நேரத்துல ஏற்காடு போய் சேர்ந்துட்டோம். வழியில யாரோ ஒருத்தர் கரும்பு வித்துகிட்டிருந்தாரு. ஆளுக்கொரு கரும்ப வாங்கி கடிச்சி தின்னுகிட்டே நடந்துட்டோம். ஏற்காட்டுல ஒரு பெரிய ஏரி இருக்குது. நேரா அங்க போய் புல்வெளியில உட்கார்ந்து பேசிட்டிருந்தோம். அதுதான் எங்களுக்கு ஓய்வு. பிறகு பேசிகிட்டே திரும்பி நடந்துவந்துட்டோம். மறக்கமுடியாத அனுபவம் அது. தண்டி யாத்திரை மாதிரி எங்களுக்கு அது ஏற்காடு யாத்திரை. சந்திரசேகர் கூட அடிக்கடி அதைப் பத்தி சொல்லிட்டே இருப்பாரு.”

பயணத்தைப் பற்றி தொடங்கிய உரையாடல் எப்படியோ பயண நூல்கள் பற்றியதாக திசைமாறியது. பிறகு புத்தகக் கண்காட்சியை ஒட்டி வர இருக்கிற புத்தகங்கள் தொடர்பாக பேச்சு திரும்பியது. அரைமணி நேரம் பொழுது கரைவது தெரியாமல் கரைந்துவிட்டது. அவர் வீட்டிலிருந்து விடைபெற்றுக்கொண்டு கிளம்பிவிட்டேன்.

இரு தினங்கள் கழித்து உரையாடும்போது, “சந்திரசேகர் சார்கிட்ட பேசிட்டீங்களா சார்? அட்ரஸ் கெடைச்சிதா?” என்று கேட்டேன்.

“ரெண்டுமூனு தரம் பேசினேன் பாவண்ணன். சில சமயத்துல பதிலே இருக்கறதில்லை. சில சமயத்துல அவருடைய பிள்ளை எடுக்கறாரு. ஆனா ரொம்ப சுருக்கமா அப்பாவுக்கு கொஞ்சம் உடம்பு சரியில்லை. ரெஸ்ட் எடுத்துட்டிருக்காரு. அவரு எழுந்த பிறகு நீங்க பேசினீங்கன்னு சொல்றேன்னு சொல்லிட்டு வச்சிடறாரு. அதுக்கப்புறம் அந்தப் பக்கத்துலேர்ந்து யாரும் பேசறதில்லை. அதனாலயே அடுத்த தரம் பேசறதுக்கு சலிப்பா இருக்குது.”

“அந்தக் காலமா இருந்தா லேன்ட்லைன் நெம்பர வச்சி, டெலிபோன் டைரக்டரியில ரொம்ப சுலபமா அட்ரஸ தேடி எடுத்துடலாம் சார். இப்ப எல்லாமே செல்போன் காலமா மாறிப்போச்சி. அதுக்கெல்லாம் இப்ப வாய்ப்பே இல்லை.”

“செல்போன் நெம்பர வச்சி அட்ரஸ கண்டுபிடிக்க வழி கிடையாதா?”

“ட்ரூ காலர்னு ஒரு வழி இருக்குது. அத வச்சி பேரு என்னன்னு மட்டும் கண்டுபிடிக்கலாம். அவ்வளவுதான். அட்ரஸ கண்டுபிடிக்கமுடியாது.”

“அப்ப என்ன செய்யலாம்?”

“இப்ப அமைதியா விடுங்க சார், இன்னும் ரெண்டு நாள் போவட்டும். அதுக்கப்புறம் முயற்சி செஞ்சி பாருங்க” என்று சொல்லிவிட்டு உரையாடலை முடித்துக்கொண்டேன்.

அதற்கிடையில் புத்தகக் கண்காட்சிக்கான தேதி அறிவிப்பு வந்துவிட்டது. பயண ஏற்பாடுகளில் அவருடைய கவனம் திரும்பிவிட்டது.

எப்போதுமில்லாத அதிசயமாக, புத்தாண்டையொட்டி சென்னையின் சுற்றுப்புறங்களில் பொழியத் தொடங்கிய மழை இரவும் பகலும் தொடர்ந்து பொழிந்தபடியே இருக்கும் செய்தி திடீரென ஒரு கலவரத்தை ஊட்டியது. பெங்களூரிலும் அந்த மழையின் தாக்கம் இருந்தது. ஒவ்வொரு நாளும் ஒரு புதிய செய்தி மனத்தை கலங்கவைத்தபடியே இருந்தது.

ரயில் போக்குவரத்து நிறுத்தப்படலாம் என்று புதிதாகப் பரவிய வதந்திதான் அதிக கவலையைக் கொடுத்தது, “அப்படியெல்லாம் ஆகாது சார்” என்று நான் அவரை அழைத்து தைரியமூட்டியபடி இருந்தேன், “ஒருவேளை ரயில் ரத்தானாலும் கவலை வேணாம் சார். எந்த விதமான இயற்கை இடர்களும் இல்லாத நேரமா பார்த்து வேற ஒரு சீட்டு புக் பண்ணிக்கலாம்” என்று ஆறுதலாகச் சொன்னேன். ஆனால், அதற்கு அவசியமே இல்லாமல், அவர் புறப்படுவதற்கு ஒரு நாள் முன்பாகவே மழை நின்றுவிட்டது. அவர் வசதியாக பயணம் செய்து சென்னையை அடைந்துவிட்டார்.

ஏற்கனவே திட்டமிட்டபடி தன் நண்பருடைய கே.கே. நகர் இல்லத்தில் தங்கியபடி அவர் சந்திக்க நினைத்திருந்த எல்லா நண்பர்களையும் சந்தித்து நீண்ட நேரம் உரையாடி பொழுது போக்கினார் விட்டல்ராவ். எல்லோருக்கும் ‘தொலைபேசி நாட்கள்’ புத்தகத்தில் கையெழுத்திட்டு கொடுத்தார். ஒவ்வொரு பொழுதும் இனிமையான சந்திப்புகளில் கழிந்தது. கிடைத்த ஓய்வில் நேரத்தை மிச்சம் பிடித்து ஒருமுறை புத்தகக் கண்காட்சிக்கும் சென்று திரும்பிவிட்டார். புறப்படும் நாளன்று, புதிய நண்பரான கே.பி. நாகராஜன் அவரை கே.கே. நகரிலிருந்து ஸ்டேஷன் வரைக்கும் அழைத்துவந்து பெங்களூரு ரயிலில் அமரவைத்துவிட்டுச் செல்ல, விட்டல்ராவ் அன்று இரவு எட்டு மணியளவில் பெங்களூருக்கு வந்து சேர்ந்தார்.

ஜனவரி இறுதியில்தான் விட்டல்ராவை நேரில் சென்று சந்திக்க முடிந்தது. புத்தகக் கண்காட்சியில் பல நண்பர்கள் அவருக்கு அன்பளிப்பாக சில

புத்தகங்களைக் கொடுத்திருந்தனர். கண்காட்சியை ஒட்டி பெங்களூரைச் சேர்ந்த பதிப்பகம் அவருடைய 'வண்ணமுகங்கள்' நாவலை மறுபதிப்பாகக் கொண்டுவந்திருந்தது. எல்லாப் பிரதிகளும் அவருடைய எழுத்து மேசை மீது இருந்தன. நான் ஒவ்வொன்றாக எடுத்துப் பிரித்துப் பார்த்தேன். தம் நண்பர்களைப் பற்றியும் அவர்களுடைய அன்பான உபசரிப்புகளைப் பற்றியும் பாராட்டுணர்வோடு சொன்னார் விட்டல்ராவ்.

"சந்திரசேகர் சார் தொடர்பு கிடைச்சதா, இல்லையா? வீட்டு முகவரியை வாங்கனீங்களா?"

"அந்தக் கதையை என்ன சொல்றது பாவண்ணன்? சென்னையிலேர்ந்து திரும்பியதிலிருந்து நான் பல முறை முயற்சி செஞ்சேன். அந்தப் பக்கத்துல மணி அடிக்குதே தவிர, யாரும் எடுத்துப் பேசலை."

"சரி விடுங்க சார். ரெண்டு மூனு வாரம் போவட்டும். அதுக்கப்புறம் கேட்டுப் பார்க்கலாம்."

"நேத்து சாயங்காலம் யாரோ ஒருத்தரு பேசினாரு. குரலைக் கேக்கும்போது நடுவயசு ஆளு மாதிரி தோணுது. அவருக்கு கொஞ்சம் உடம்பு சரியில்லை சார். ரெண்டுமூனு நாளைக்கு ஒருதரம் ஆஸ்பத்திரிக்கு போய்போய் வரவேண்டியதா இருக்குது. அதனால எல்லாருமே பரபரப்பா இருக்காங்கன்னு சொன்னாரு. சந்திரசேகருக்கு உடம்பு சரியில்லைன்னு சொன்னதும் எனக்கு ஒரு மாதிரி ஆயிட்டுது. உடனே என்கிட்ட பேசினவருகிட்ட, நானும் அவரும் ஸ்கூல் மேட்ஸ். எனக்கு அவரை பார்க்கணும்போல இருக்குது. வாட்சப்ல எனக்கு அட்ரஸ அனுப்பினீங்கன்னா, ஒரு தரம் வந்து பார்க்கறதுக்கு வசதியா இருக்கும்னு சொன்னேன். சரிங்க சார், இப்பவே அனுப்பறேன்னு சொல்லிட்டு லைன கட் பண்ணினாரு. ஆனா அனுப்பலை. சரி, இன்னைக்காவது வரும்னு நெனச்சேன். ஆனா, வரலை. என்ன செய்யறது, சொல்லுங்க."

"சரி சார். அவுங்க பக்கத்துலயும் ஏதோ பதற்றமா இருக்கலாம். நாம ஏன் தப்பா நினைக்கணும்? அவரு சொல்ற மாதிரி ரெண்டுமூனு வாரம் போவட்டும் சார். அதுக்கப்புறமா பார்த்துக்கலாம்."

விட்டல்ராவை வீட்டைவிட்டு வெளியே அழைத்துவந்தேன். அவருடைய வீட்டுக்கு அருகிலேயே இருந்த ஆனந்தபவனுக்கு பேசிக்கொண்டே நடந்து சென்றோம். காப்பி அருந்திவிட்டு மீண்டும் பேசிக்கொண்டே திரும்பினோம். விட்டல்ராவ் சற்றே இயல்புநிலைக்குத் திரும்பியிருந்தார்.

'வண்ணமுகங்கள்' நாவலை மறுபதிப்பாகக் கொண்டுவந்திருந்த ஜெய்கிரி பதிப்பகம் சில வாரங்கள் இடைவெளியில் 'கலை இலக்கியச் சங்கதிகள்' கட்டுரைத் தொகுதியையும் 'காலவெளி' நாவலையும் கொண்டுவந்துவிட்டது. அதன் பிரதிகளை பதிப்பகத்தின் பொறுப்பாளரான சாய் ரமணா கொண்டுவந்து கொடுத்துவிட்டுச் சென்றதாக ஒருமுறை விட்டல்ராவ் தொலைபேசியில் தெரிவித்தார். அன்று மாலை நான் விட்டல்ராவைச் சந்திக்கச் சென்றிருந்தேன். என்னைப் பார்த்ததும் ஏற்கனவே கையெழுத்திட்டு வைத்திருந்த புதிய புத்தகங்களை எடுத்து என்னிடம் கொடுத்தார். நான் மகிழ்ச்சியோடு வாழ்த்து சொல்லிவிட்டு பெற்றுக்கொண்டேன். 'வண்ணமுகங்கள்' நாவலை முன்வைத்து இணையத்தில் சிலர் விரிவாக எழுதியிருப்பதாகத் தெரிவித்தார். அது அவருக்கு மகிழ்ச்சியளித்திருப்பதை என்னால் உணர்ந்துகொள்ள முடிந்தது.

அதற்குப் பிறகு அடுத்தடுத்து நண்பர்கள் வீட்டுத் திருமணங்களுக்கும் உறவினர் வீட்டுத் திருமணங்களுக்கும் வெளியூர்களுக்குச் செல்லவேண்டியிருந்தது. ஒவ்வொரு வாரமும் ஒரு பயணம். எந்த ஊரில் இருந்தாலும் ஒருசில நிமிடங்கள் ஒதுக்கி விட்டல்ராவை அழைத்து உரையாடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தேன் நான். நேரில் சந்திப்பதுதான் தள்ளித்தள்ளிப் போய்க்கொண்டே இருந்தது.

ஒருநாள் காலை பத்தரை மணிக்கு விட்டல்ராவ் தொலைபேசியில் அழைத்தார். வணக்கம் சொல்லிவிட்டு உரையாடலைத் தொடங்கினேன், "பாவண்ணன், என்னுடைய சஞ்சய்நகர் ஃப்ரண்ட் சந்திரசேகர் காலமாயிட்டார்" என்று தெரிவித்தார்.

ஒருகணம் நான் உறைந்து நின்றுவிட்டேன். சொல்லே எழவில்லை. மெதுவாக என்னை நானே திரட்டிக்கொண்டு, "என்ன சார் சொல்றீங்க? யார் சொன்னாங்க உங்களுக்கு?" என்று கேட்டேன்.

"இப்பதான் ஃபோன் வந்திச்சி பாவண்ணன். அவருடைய பிள்ளைதான் பேசினான். அப்பா போயிட்டாரு அங்கிள்ன்னான். இன்னைக்கே எடுக்கறாங்களாம். கௌம்பி வந்து கஷ்டப்பட வேணாம் அங்கிள், உங்களுக்கு தகவலாதான் சொல்றேன். வேற ஒரு நாள்ல சந்திக்கலாம் அங்கிள்னு சொல்லிட்டு வச்சிட்டான். சந்திரசேகர் போயிட்டார் பாவண்ணன். அவருக்கு கொடுக்க நினைச்ச புத்தகத்தை கடைசி வரைக்கும் என்னால கொடுக்கவே முடியாம போயிடுச்சி. ரொம்ப குற்ற உணர்ச்சியா இருக்குது பாவண்ணன்."

அவர் குரல் கம்மிக்கொண்டே இருந்தது, "அப்படியெல்லாம் நினைக்காதீங்க சார். எத்தனை முறை அட்ரஸ குடுப்பா குடுப்பான்னு நீங்க போன் பண்ணி கேட்டீங்க. அட்ரஸ் கிடைக்காததுக்கு நீங்க என்ன சார் செய்யமுடியும்? நீங்க குற்ற உணர்ச்சி அடையறதுக்கு இதுல ஒன்னுமே இல்லை. மனசுக்குள்ள அவருடைய ஆன்மா சாந்தியடையட்டும்னு வேண்டிக்குவோம்."

"அட்ரஸ் கெடைச்சிருந்தா, புஸ்தகம் கொடுக்கிற சாக்கிலாவது அவரை ஒருமுறை நான் பார்த்து பேசியிருப்பேன். எனக்கு அந்த வாய்ப்பு கிடைக்காம

போயிடுச்சி.”

பேச்சை நிறுத்திவிட்டு ‘த்ச்’ என்று நாக்கை சப்புக்கொட்டினார் விட்டல்ராவ். தொலைபேசியில் எனக்கு அது கேட்டது. அவரை அந்தத் துயரத்திலிருந்து எப்படியாவது உடனடியாக மீட்கும் விதமாக பேச்சின் திசையை சற்றே மாற்றவேண்டும் என்று தோன்றியது.

“சந்திரசேகர் சேலம் ஸ்கூல்ல உங்களோடு ஒன்னா படிச்சவருன்னு சொன்னீங்களே. சேலத்துல இருந்தவரு, பெங்களூருக்கு எப்படி வந்தாரு? அவரும் டெலிபோன் டிப்பார்ட்மென்ட்காரரா?” என்று அக்கணத்துக்கு மனத்தில் தோன்றியதை ஒரு கேள்வியாகக் கேட்டேன்.

“அதைப் பத்தி தனியா சொல்லமுடியாது பாவண்ணன். அவருடைய குடும்பக்கதையையே மொத்தமா சொன்னாதான் அந்த விஷயம் புரியும்.”

“அவ்வளவு பெரிய கதையா என்ன? இருக்கட்டும், சொல்லுங்க சார். நான் ஃப்ரீயாதான் இருக்கேன்.”

அந்தத் தூண்டுதல் சரியாக வேலை செய்தது.

“அவுங்க அப்பா பேரு ஸ்ரீகண்டையா” என்று தொடங்கினார். நான் உடனே, “கன்னடப் பேரா இருக்குதே” என்று சந்தேகத்தோடு இழுத்தேன், “ஆமாமாம். கன்னடப் பேருதான். வீட்டுல கன்னடம் பேசறவங்கதான்” என்று அதை உடனடியாக உறுதி செய்தார் விட்டல்ராவ்.

“அந்தக் காலத்துல சேலத்துல எஸ்.கே. கபூர் கம்பெனின்னு ஒரு பெரிய சாயப்பட்டறை இருந்தது. பெரிய கம்பெனி. அதன் ஹெட்குவார்ட்டர்ஸ் பம்பாய்ல இருந்தது. அதுலதான் ஸ்ரீகண்டையாவுக்கு வேலை. சௌத் ஜோனுக்கு அவருதான் ரெப்ரெஸன்ட்டேட்டிவ். ஹேண்ட்லூம், பவர்லூம் இருக்கக்கூடிய இடங்களுக்கெல்லாய் போய் கலரிங் டைக்கு ஆர்டர் வாங்கிட்டு வருவாரு. அவருக்கு பூர்வீகம் ஸ்ரீரங்கப்பட்டணம். அவருக்கு மல்யுத்தமும் நல்லா தெரியும். சொந்த ஆசையினால ஒரு குருகிட்ட கத்துகிட்டவரு. கஞ்சிரா வாசிக்கிறதுலயும் பெரிய கில்லாடி. பல கச்சேரியில வாசிச்சிருக்காரு. ஆனா எதிர்காலத்துல இதையெல்லாம் வச்சிகிட்டு ஒன்னும் செய்யமுடியாதபடி ஒரு சூழல் வரலாம்னு அவருக்கு தோணியிருக்குது. அதனால நிரந்தர வருமானத்துக்காக கபூர் கம்பெனி வேலையில சேர்ந்துட்டாரு. அவருக்கு ஒன்பது பிள்ளைங்க. எட்டு ஆண், ஒரே ஒரு பெண். பெரிய குடும்பம்.”

அவர் குரல் மெல்ல மெல்ல இயல்புநிலைக்குத் திரும்பிக்கொண்டிருப்பதை உணர்ந்ததும் அமைதியாக உணர்ந்தேன்.

“இன்னைய கண்ணோட்டத்துல அது ஒரு பெரிய குடும்பம் மாதிரி தோணலாம். நாம எல்லோருமே ஒத்த புள்ளைய வச்சிருக்கோம். அதனால அப்படி தோணுது. ஆனா அன்னைய கண்ணோட்டத்துக்கு அது சாதாரண குடும்பம்தான், இல்லையா?”

“அது உண்மைதான். நிறைய பிள்ளைகள் இருந்தாலும், அத்தனை பேரயும் அவர் நல்லா படிக்க வச்சாரு. ஒரு குறையும் இல்லாம நல்ல நெலைமைக்கு வளர்த்துவிட்டாரு. ஒவ்வொரு பிள்ளையப் பத்தியும் சொன்னா, நீங்க ஆச்சரியப்படுவீங்க. அந்த அளவுக்கு திறமைசாலிங்க.”

“அப்படியா? முதல் பிள்ளை யாரு சார்?”

“அவரு பேரு கிருஷ்ணசாமி. பெரிய ஆர்ட்டிஸ்ட். போட்டோகிராபர். உலகப்புகழ் பெற்ற படங்களையெல்லாம் அப்படியே அச்சு அசலா கேன்வாஸ்ல வரைஞ்சி விப்பாரு. அவ்வளவு திறமை. அம்பது அறுபது வருஷம் தாங்கற மாதிரி கேன்வாஸ தயார் பண்ணுவாரு. அதேபோல கச்சிதமா ஃப்ரேம் பண்ணி வச்சிருப்பாரு. ‘ரமணகலா கேந்திரா’ன்னு அவரே ஒரு ஹால் வச்சிருந்தாரு. அதுல அந்த ஓவியங்கள தீட்டி வச்சிருப்பாரு. தத்ரூபமா உண்மையான ஓவியத்தைப் போலவே இருக்கும். வெளிநாட்டுலேர்ந்து வரவங்க எல்லாரும் அதை பார்த்துட்டு நாற்பதாயிரம் அம்பதாயிரம் ரூபாய் கொடுத்து வாங்கிட்டு போவாங்க. மல்லேஸ்வரத்துல சொந்தமா ஒரு வீடு வாங்கியிருந்தாரு. அவருக்கு ஒரே பொண்ணு. அவங்களும் ஆர்ட் கத்துகிட்டு படம் போடறாங்க. மனைவி இறந்துட்டாங்க. அதுக்கப்புறம் இங்க இருக்க அவருக்கு மனசு ஒட்டலை. நேரா பெங்களூருலேருந்து கௌம்பிப் போய் திருவண்ணாமலையில ரமணாசிரமத்துல சேர்ந்துட்டாரு.”

“இப்பவும் அங்கதான் இருக்காரா?”

“ஆமாம். இப்ப 96 வயசாவுது. அங்கதான் இருக்காரு.”

“ரெண்டாவது பிள்ள?”

“அவரு பேரு நஞ்சுண்டசாமி. ஆல் இண்டியா ரேடியோ ஆர்ட்டிஸ்ட். அவரும் நல்லா ஓவியம்லாம் போடுவாரு. ஒருமுறை அவரும் நானும் சேர்ந்து நிக்கிற மாதிரி படம் எடுத்தாரு.”

“இப்ப எங்க இருக்காரு?”

“இல்ல. காலமாயிட்டாரு.”

“மூனாவது?”

“அவரு பேரு ராமசாமி. சேலம் ஈரோடு எலெக்ட்ரிக்கல் போர்டுல வேலை செஞ்சாரு. நாடகம்லாம் எழுதுவாரு. நடிப்பாரு. அவரும் இப்ப இல்லை. செத்துட்டாரு.”

“நாலாவது?”

“அவரு பேரு சோமசுந்தரம். படிப்புல கொஞ்சம் சராசரியான ஆள். ஒவ்வொரு வகுப்புலயும் ஒன்னு ரெண்டு வருஷம் தங்கித்தங்கித்தான் மேல வந்தாரு. ஒரு கட்டத்துல, என் க்ளாஸ்ல என் கூடவே படிச்சாரு.

பிற்காலத்துல டிகிரி முடிச்சி டீச்சர் ட்ரெய்னிங் பாஸ் பண்ணிட்டு ஸ்கூல் டீச்சரா வேலை பார்த்தாரு.”

“அஞ்சாவது?”

“அவருதான் சந்திரசேகர். சேலத்துல என் கூட படிச்சவரு. என் க்ளாஸ்மெட். நல்லா படிப்பாரு. நல்ல ரசனை உண்டு. ஸ்கூல் படிப்புக்கு மேல என்னால படிக்க முடியலை. அவர் காலேஜ்ல சேர்ந்து படிச்சாரு. டிகிரில ஜுவாலஜி எடுத்து படிச்சாரு. விவேகானந்தா காலேஜ்ல லெக்சரரா வேலைக்குச் சேர்ந்தாரு. அப்புறம் ப்ரபஸரா இருந்து, துறைத்தலைவராவும் இருந்து ரிட்டயரானாரு. அதுக்கப்புறமா பெங்களூருக்கு வந்து சஞ்சய் நகர்ல வீடு வாங்கி, பெங்களூருலயே செட்டிலாயிட்டாரு.”

“ஓ... அவருக்குப் பின்னணியா இவ்வளவு கதை இருக்குதா? சரி, ஆறாவது பிள்ளை?”

“ஆறாவது பொண்ணு. கிரிஜான்னு பேரு. டிகிரி முடிச்சி கல்யாணம் பண்ணிகிட்டு அமெரிக்காவுக்கு போயிட்டாங்க.”

“ஏழாவது?”

“அவருபேருதியாகராஜன்.அவரும்பட்டப்படிப்பு முடிச்சவர். மகாராஷ்டிரா பேங்க்ல வேலை செஞ் சிட்டிருந்தாரு. என்னமோ தெரியலை, திடீர்னு ஒரு நாள் துறவியா கௌம்பி போயிட்டாரு. எங்க எங்கயோ சுத்தி அலைஞ்சிட்டு, அண்ணாமலை ஆசிரமத்துல சுவாமி ஹம்சானந்தான்னு பேர மாத்தி வச்சிகிட்டு அங்கயே தங்கிட்டாரு.”

“எட்டாவது?”

“அவரு பேரு பாண்டுரங்கன். டிகிரி படிச்சாரு. ஆனா வேலைக்கு போகலை. அவரும் பெங்களூருலதான் இருக்காரு. ஆரித்ரா ப்ரிண்டிங் ப்ரஸ் வச்சிருக்காரு.”

“ஒன்பதாவது?”

“அவரு பேரு சிவக்குமார். அவரும் அமெரிக்காவுலதான் இருக்காரு.”

“சந்திரசேகர் சாரை நான் பார்த்ததில்லை. நீங்க சொல்லி சொல்லித்தான் அவரைப் பத்திய உருவத்தை நான் கற்பனையில உருவாக்கிகிட்டேன். அவரோடு சேர்ந்து உங்க பழைய ஸ்கூல பார்க்க போகலாம்னு சொன்னீங்களே,ஞாபகமிருக்குங்களா? நீங்கசொன்ன திலிருந்து நான் பலமுறை அந்தப் பயணத்தை கற்பனை செஞ்சி பார்த்துட்டே இருந்தேன். இப்ப, இனிமேல அந்த வாய்ப்பே இல்லாதபடி அவரு போய் சேர்ந்துட்டாரு. நமக்குக் கொடுத்து வச்சது அவ்வளவுதான்னு நெனச்சிக்க வேண்டியதுதான்.”

“அவருக்கு பயணத்துல மட்டுமில்லை பாவண்ணன், அவருக்கு என்னை மாதிரியே சினிமா பார்க்கிறதுலயும் ஆர்வம் உண்டு. என்ன அவரும் நானும் சின்ன வயசில ஒன்னா நிறைய சினிமா பார்த்திருக்கோம். எங்க ஸ்கூல்ல அப்ப ஒரு இங்க்லீஷ் டீச்சர் இருந்தாரு. ஊருக்குள்ள எந்த தியேட்டர்லயாவது நல்ல இங்க்லீஷ் படம் போட்டாலும், அவரு முதல்ல பார்த்துட்டு வந்து எங்கள போய் பாருங்கடான்னு சொல்வாரு. அப்படி நானும் சந்திரசேகரும் நிறைய படம் பார்த்திருக்கோம்.”

“என்னென்ன படங்கள்னு ஞாபகம் இருக்குதா சார்?”

“To kill a mocking bird-னு ஒரு படம். நீங்க பார்த்திருக்கீங்களா?”

“இல்லை சார். நான் அந்த நாவலைத்தான் படிச்சிருக்கேன்.”

“நல்ல படம். ராபர்ட் முல்லிகன்னு ஒரு டைரக்டர். நிறைய நீதிமன்றக் காட்சிகளைக் கொண்ட படம். நிறவெறி தொடர்பான கதை. நிறவெறி தொடர்பா இன்னொரு படத்தையும் எங்க சார் சொல்லித்தான் நானும் சந்திரசேகரும் பார்த்தோம். படத்துடைய பேரு Sergeant Ruteledge. ஜான் ஃபோர்ட்னு ஒரு டைரக்டருடைய படம். அற்புதமான படம். கோர்ட் மார்ஷியல்னா என்னன்னு அந்தப் படத்தைப் பார்த்துட்டுத்தான் தெரிஞ்சிகிட்டோம். அப்புறம் East of Eaden, Grapes of Wrath, Stage coach எல்லாமே நானும் சந்திரசேகரும் சேர்ந்து பார்த்ததுதான். இப்படி நிறைய படங்கள் பார்த்தோம்.”

அந்தப் படங்கள் பற்றியும் அவற்றின் கதைச்சுருக்கம் பற்றியும் சொல்லிக்கொண்டே இருந்தார் விட்டல்ராவ். திடீரென அவருடைய உற்சாகம் குறைந்து தரையைத் தொட்டுவிட்டது, “த்ச். திடீர்னு எல்லாத்தயும் ஞாபகமா விட்டுட்டு போயிட்டார் சந்திரசேகர். கடைசியா அவருடைய முகத்தைப் பார்க்கிறதுக்குக்கூட எனக்கு அதிர்ஷ்டம் இல்லாம போயிடுச்சி. அதை நெனச்சாதான் ரொம்ப சங்கடமா இருக்குது” என்றார்.

“அதையே நெனச்சி வருத்தப்படாதீங்க சார். அவுங்ககிட்ட நீங்க அட்ரஸ கேட்டுகிட்டேதான் இருந்தீங்க. அவுங்க அனுப்பலை. அதுக்கு நீங்க என்ன செய்யமுடியும், சொல்லுங்க? ஒரு பத்துநாள் கழியட்டும் சார். இன்னொருமுறை பேசிப் பார்த்து அட்ரஸ வாங்குங்க. ஒரு ரோஜா மாலை வாங்கிட்டு போய் துக்கம் விசாரிச்சிட்டு அவருடைய படத்துக்குப் போட்டுட்டு வருவோம். உங்களுக்கும் ஆறுதலா இருக்கும்.”

நான் சொன்னதை ஏற்றுக்கொள்ளும் விதமாக, “அப்படித்தான் செய்யணும் பாவண்ணன். அது நல்ல ஐடியா” என்றார் விட்டல்ராவ். அத்துடன் நான் உரையாடலை முடித்துக்கொண்டேன்.

(தொடரும்)

பாவண்ணன் <writerpaavannan2015@gmail.com>

தருமமிகு சென்னை-9

# சென்னையின் பெண் தெய்வங்கள்

சந்தியா நடராஜன்



மாயவரம் நகராட்சி உயர்நிலைப் பள்ளியில் நான் ஆறாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தேன். ஒரு நாள் பள்ளிக்கூடத்திலிருந்து வீடு திரும்புகிறபோது சட்டைப் பையிலிருந்த பேனாவைக் காணவில்லை. எங்கே தவறவிட்டேன் என்றுதெரியவில்லை. அதிகபட்சம் அந்தப்பேனாவின் விலை ஐந்து ரூபாய் இருந்திருக்கலாம். வந்த வழியே பேனாவைத் தேடிக்கொண்டு சென்றேன். எங்கும் தட்டுப்படவில்லை. பேருந்து நிலையத்திற்கு அருகில் உள்ள வண்டிக்காரத் தெரு மாரியம்மன் கோயிலருகே வந்தவுடன் மாரியம்மனிடம் பேனா கிடைக்க வேண்டும் என வேண்டிக்கொண்டேன். அழுகை அழுகையாக வந்தது. எனது வேண்டுதல் பலிக்கும் என்ற நம்பிக்கையில் வீட்டுக்குச் செல்ல முற்பட்டேன். குனிந்த தலையோடு வந்த வழியே பேனாவைத் தேடிய வண்ணம் சென்றேன். காவிரிக் கரைக்கருகில் கௌரி தியேட்டர் எதிரில் என் தொலைந்து போன பேனா சாலையில் கிடந்ததைக் கண்டெடுத்தேன். ஏதோ புதையல் கிடைத்தது போல மகிழ்ச்சியோடு வீடு திரும்பினேன். அன்று முதல் மனம் உளைச்சலுக்கு ஆளான பல்வேறு காலக்கட்டங்களில் 'அவளிடம்' முறையிட்டு வந்திருக்கிறேன்.



பத்தாம் வகுப்பு படிக்கும்போது என்று நினைவு. விடுதலை ஆசிரியர், திராவிட கழகப் பொதுச்செயலாளர் கீ.வீரமணி எங்கள் பள்ளிக்கு அழைக்கப்பட்டிருந்தார். முதல் முறையாக ஒரு நாத்திகரின் சொற்பொழிவைக் கேட்டேன். பேச்சாற்றல் என்றால் என்ன என்பதை உணர்ந்த தருணம் அது. ஒரு பள்ளி மாணவனின் நம்பிக்கையத் தவிடு பொடியாக்கிச் சிதறடித்த பேச்சு. பிறகு கடவுள் குறித்த எண்ணற்ற நூல்களைத் தேடிப்பிடித்துப் படிக்க வைத்த பேச்சு. அன்றிரவு ஒரு பைத்தியம் பிடித்தவனைப் போல மனம் சிதைந்து குழப்பத்தில் இருந்தேன்.

ஆனால், தெய்வதம் என்றொரு சித்தம் உண்டாக்கிய நிலையிலிருந்து இன்றுவரை

மனம் மாறா அன்புடன் ஏக இறைவனைத் தொழுது வருகிறது. அதே நேரத்தில் மனிதம் போற்றாத எந்தச் சமய வாதங்களையும் கோட்பாடுகளையும் என் மனம் ஏற்பதில்லை.

தமிழகத்தில் எத்தனையோ கோயில்களும் கடவுளர்களும் இருந்தாலும் கிராமங்கள்தோறும் நகரங்கள்தோறும் காவல் தெய்வங்களுக்குக் குறைவில்லை. ஐயனார், வீரன், முனீஸ்வரன் போன்ற நாட்டார் தெய்வங்களுக்கு இணையாகக் காளி, மாரி, பிடாரி போன்ற பெண் தெய்வங்களும் மக்கள் மனத்தில் நீங்காது நிலைபெற்றிருக்கின்றன. சென்னை மாநகரிலும் திரும்பிய திசை எல்லாம் ஒரு பெண் தெய்வம் அருள் பாலித்துக் கொண்டிருக்கிறது.

சென்னைக்கு வந்த புதிதில் நான் தங்கியிருந்த மேன்ஷனுக்கு அருகில் ஜாம்பஜாருக்கு எதிரே தேவராஜ் முதலி தெருவில் ரேணுகா பரமேஸ்வரி ஆலயம் ஒன்று இருந்தது. அங்கு ஆடி மாதத்தில் 'கூழ்' ஊற்றுவார்கள். 'கூழ் ஊற்றும் வைபவம்' நான் அறியாதது. 'நாளைக்கு எங்க ஏரியாவுல கூழ் ஊத்தறாங்க சார் - நாளைக்கு லீவு வேணும் சார்' என்று சொல்லி ஒரு நோட்டீஸ் கொடுத்துவிட்டு நன்கொடை கேட்பார்கள், வடசென்னையிலிருந்து வரும் எங்கள் அலுவலக ஊழியர்கள். திருமண அழைப்பிதழையும் நோட்டீஸ் என்றே அவர்கள் சொல்வார்கள்.

'ரேணுகா பரமேஸ்வரி' பல்வேறு பெயர்களில் அருள் பாலிக்கிறாள். ரேணுகா தேவிக்கு எல்லம்மா, மாரியம்மா என்ற பெயர்கள் உண்டு. சௌகார்பேட்டையில் தங்க சாலைத் தெருவும் என்.எஸ்.சி போஸ் சாலையும் சந்திக்கும் இடத்தில் இருக்கும் சின்ன கடை மாரியம்மன் கோயிலும் ரேணுகா பரமேஸ்வரி ஆலயம்தான். இந்தக் கோயில்களில் அம்மன் சிலைகள் முன்பாக கழுத்தளவில் மட்டுமே இருக்கும் 'அம்மன் சிரசு' காணப்படும். ரேணுகா யாகத்தீயில் பிறந்தவள். திரௌபதியும் அக்னியில் பிறந்தவள்தான். இந்தப் பெண் தெய்வங்கள் ஏன் நெருப்போடு விளையாடுகிறார்கள்? பக்தர்களையும் தீமித்து வழிபடச் சொல்கிறார்கள்!

ரேணுகா ஜமதக்னி முனிவரின் மனைவி; பரசுராமனின் தாய். ஆற்றில் நீரெடுக்கச் சென்றபோது வானில் சிற்றின்பத்தில் லயித்திருந்த இளம் கந்தர்வ தம்பதிகளின் பிம்பத்தை ஆற்று நீரில் கண்ட ரேணுகவின் மனம் ஒரு கணம் சற்று தடுமாறியது. இதைக் கண்டுணர்ந்த முனிவன், தாயின் துரோகத்திற்காக அவளது தலையைத் துண்டிக்குமாறு மகன் பரசுராமனை ஏவ, அவரும் தந்தை சொல்லுக்கு அடிபணிந்து தாயின் தலையைத் துண்டித்தார். பிறகு தந்தையிடம் வரம் பெற்று தாயை உயிர்ப்பித்தார் என்று பழங்கதை சொல்கிறது. அதனால்தான் ரேணுகா பரமேஸ்வரி ஆலயங்களில் 'அம்மன் சிரசு' கருவறையில் விக்ரகமாகக் காட்சியளிக்கிறது.

ரேணுகா என்ற பெயர் கொண்ட பெண்கள் ஆந்திராவில் அதிகம். தமிழ் நாட்டில் சென்னையிலும் 'ரேணுகா'க்கள் பரவலாக உண்டு.

சென்னையில் எல்லையம்மன், கெங்கையம்மன், காளியம்மன், ரேணுகா பரமேஸ்வரி, கருமாரியம்மன், அங்காள பரமேஸ்வரி என எண்ணற்ற பெண் தெய்வங்கள் காவல் தெய்வங்களாகக் காத்து அருள் செய்கின்றன. பொதுவாக அடித்தட்டு மக்களும் விளிம்புநிலை மக்களும் இத்தெய்வங்களின் தீவிர பக்தர்களாக மட்டுமின்றி முரட்டு பக்தர்களாகவும் இருக்கிறார்கள். ஆடு, கோழி போன்ற விலங்கினங்கள் பலியிடப்படும் கோயில்களும் உள்ளன. முதுகெங்கும் அலகு குத்தியபடி அலகு காவடி சுமப்பதும் வாயில் வேல் குத்திக்கொள்வதும் தென்னங்குலையை, முதுகில் குத்திய அலகில் கயிற்றால் கட்டி தெருக்களில் இழுத்துச் செல்வதும் தீச்சட்டி சுமப்பதும் இக்கோயில்களின் திருவிழாக்காலக் காட்சிகள்.

நான் சென்னை சுங்க இல்லத்தில் பணியாற்றியபோது சிவானந்தம் என்று ஒரு மூத்த சுங்க அதிகாரி இருந்தார். சென்னை சைதாப்பெட்டை இளங் காளியம்மன் கோயிலுக்கு எதிரே ஒரு பழைய வீட்டில் வசித்து வந்தார். இளங்காளியம்மன் கோயிலை அவர்கள் குடும்பமே பரம்பரை பரம்பரையாகப் பராமரித்து வந்தது. அக்கோயிலின் அறங்காவலர் அவரே. காலையில் இளங்காளியம்மனுக்குஉரியபூசைகளைச்செய்துவிட்டு அலுவலகத்திற்கு வருவார். இளங்காளியம்மனுக்குப் பக்தர்கள் பயப்படுகிறார்களோ இல்லையோ சிவானந்தத்தை சக சுங்க அதிகாரிகள் பயம் கலந்த மரியாதையுடன் அணுகுவார்கள். சிவானந்தம் யாருக்கும் அஞ்சாதவர். எதற்கும் இணங்காதவர். எப்போதும் பணிக்குத் தயாராக இருப்பவர். குடியரசுத் தலைவர் விருது பெற்ற தகுதிமிக்க அந்த அதிகாரி ஓய்வு பெறுவதற்கு ஓராண்டு காலம் இருக்கும்போதுதான் கண்காணிப்பாளராகப் பதவி உயர்வு பெற்றார். சிவானந்தத்துக்குச் சுங்க இல்லமும் இளங்காளியம்மனும்தான் ஒட்டுமொத்த வாழ்வானது. பொன்னேரியில் இருக்கும் எட்டியம்மன் கோயிலுக்கும் அசோக் நகர் காவல்துறை பயிற்சி நிறுவனத்திற்கு அருகில் உள்ள காளி கோயிலுக்கும் சிவானந்தம் குடும்பத்தினரே பரம்பரை அறங்காவலர்கள். சிவானந்தத்தின் தந்தை துரைசாமி முதலியார், அவரது முன்னோர்கள் என நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக இந்த மூன்று காளி கோயில்களையும் சிவானந்தத்தின் மரபினரே நிர்வகித்து வருகின்றனர். இந்தக் காளி கோயில்களில் உற்சவ காலங்களில் 'கிடா வெட்டு' நடந்த பின்பே அம்மன் உலா தொடங்கும். இவை எல்லாம் பிடாரி கோயில்கள்; உக்கிர தேவதைகளின் கோயில்கள். பங்குனி மாதத்தில் ஒரு ஞாயிற்றுக்கிழமையன்று







இந்தக் கோயில்களில் விழா நடைபெறும். ஆடிப்பூரம் அன்று 108 பால்குடம் எடுப்பார்கள். தைப்பூசத்திற்குக் கோயிலில் சிறப்பு வழிபாடு நடைபெறும்; வீதி உலா இருக்காது. சைதாப்பேட்டையின் எல்லைக்காளி இளங்காளியம்மன்; ஜாபர்கான்பேட்டையின் எல்லைக்காளி அசோக் நகர் காளி. பொன்னேரியைச் சுற்றியுள்ள பல கிராமங்களுக்கு எல்லைக்காளி எட்டியம்மன். சிவானந்தத்தின் வாரிசுகள் தந்தை செய்த திருப்பணியைத் தொடர்ந்து வருகிறார்கள்.

சென்னை அசோக் நகர் மாந்தோப்பு காலனியை அடுத்த சாமியார் மடம் பகுதியில் 1990களில் ஒரு காளி உபாசகர் வழிபாடு நடத்தி இருக்கிறார். அவரிடம் அருள் வாக்கு கேட்கச் சுற்று வட்டாரத்தினர் வந்துகொண்டு இருந்திருக்கிறார்கள். அப்படி அருள் வாக்கு கேட்கச் சென்றவர்களில் ஒருவர் எனது நண்பர் 'விருட்சம்' இலக்கிய இதழின் ஆசிரியர் அழகிய சிங்கர் என்கிற சந்திர மௌலி. அழகிய சிங்கருக்கு வீட்டுப் பிரச்சினையோ அலுவலகப் பிரச்சினையோ எதுவும் இருந்ததில்லை. எல்லாம் எய்தியவர் அவர். இடர்ப்படக் காரணம் எதுவும் இருந்ததில்லை. இருந்தாலும் அவரும் அருள்வாக்கு கேட்கச் சென்றார். அவரது கேள்வியில் காளி உபாசகர் கலங்கிப் போயிருப்பார். அவரது கேள்வி இதுதான்: 'நான் ஒரு கதாசிரியர். குமுதம் பத்திரிகைக்குக் கதைகள் எழுதி அனுப்பி வருகிறேன். ஆனால், என் கதைகள் எதுவும் பிரசுரமாவதில்லை. இப்போதும் ஒரு கதை அனுப்பியிருக்கிறேன். என் கதை வருமா?' காளி உபாசகர், 'வரும்' என்று சொல்லியிருக்கிறார். அழகிய சிங்கரும் கதை வரும் என்று ஒவ்வொரு வாரமும் குமுதம் இதழைத் தவறாது வாங்கி வந்துகொண்டிருந்தார். கதை குமுதத்தில் வரவில்லை. ஆனால், 'வரும்' என்ற அருள்வாக்கு மட்டும் பொய்க்கவில்லை. இறுதியில் கதை தபாலில் திரும்பி வந்தது. இந்த நிகழ்ச்சியை அழகிய சிங்கர் அவருக்கே உரித்தான நகைச்சுவையோடு சொல்வார்.

அழகிய சிங்கர் இன்னொரு அம்மன் உபாசகர் குறித்தும் சொல்லியிருக்கிறார். மாம்பலத்தில் 'பொட்டு மாமி' என்று அழைக்கப்படும் பெண்மணி ஒருவர் வீட்டிலேயே பூஜை செய்து அருள்வாக்கு சொல்லி வந்தாராம். ஆனால், அவர் தற்போது மாம்பலத்தில் இல்லையாம்! இன்னும் அசோக் பில்லரிலிருந்து செல்லும் நடைபாதைகளில் குறி சொல்லும் பெண்கள் இருக்கவே செய்கிறார்கள். மன பாரம் தாங்க முடியாத எளிய மனிதர்களின் மனம் எங்காவது ஒரு தீர்வு கிட்டாதா என்று அலை பாய்ந்தபடியே இருக்கிறது. இவர்களுக்கு ஓர் இதம் தரும் சொல் அன்றைய தினத்துக்கான ஆறுதல்.

அசோக் நகரின் 7ஆவது நிழற்சாலை தொடங்கி 12ஆவது நிழற்சாலை வரை உள்ள பகுதி முழுவதும் ஓரளவு வசதி படைத்தவர்களும் வளமிக்கவர்களும் வாழ்ந்து வருகிறார்கள். ஐஏஎஸ் அதிகாரி இராமகிருஷ்ணன் முதல் உள்துறை செயலாளராக இருந்த நாகராஜன் வரை இந்த வரையறையில் அடங்குவர். இயக்குநர் விக்ரம் உள்ளிட்ட திரைப்படத் துறையினர் பலரும் வாழும் பகுதி. ரோஜா கம்பைன்ஸ், காஜா மொகிதீன், ஆஸ்கார் ரவி போன்ற திரைப்படத் தயாரிப்பாளர்களின் அலுவலகங்களும் இதே பகுதியில் இயங்கி வருகின்றன. இப்பகுதியில் சிவன் கோயில், விநாயகர் கோயில்கள், இந்து அறநிலையத்துறைக்கு உட்படாத ஆஞ்சனேயர் ஆலயம், ஒரு வைதீகமான மாரியம்மன் கோயில் எல்லாம் உண்டு.

ஆனால், 12ஆவது நிழற்சாலைக்குப் பின்னால் உள்ள வாழ்விடங்களில் ஓரிரு தெருக்களைத் தவிர எளிய மனிதர்கள் வாழும் இடங்கள் அதிகம். காசி சிக்னலுக்கு எதிரே செல்லும் பிள்ளையார் கோயில் தெருவின் இருபுறங்களும் ஜாபர்கான் பேட்டையைச் சேர்ந்தவை. இப்பகுதியில்தான் ஆர்.வி. காலனி என்கிற ஆர். வெங்கட்ராமன் காலனி உள்ளது. இந்தக் காலனியில் நூறு அடிக்கு ஒரு மாரியம்மன் கோயிலைக் காண முடியும். பிரதான பிள்ளையார் கோவில் தெருவில் ஒரு கீற்றுக் கொட்டகையில் இருந்த முத்து மாரியம்மன் கோயில் மீனாட்சி சுந்தரேசர் ஆலயமாக மாறிவிட்டது. இன்னும் கோயில் வளாகத்தில் ஒரு பகுதியில் மண் சூழ

முத்துமாரியம்மன் இருக்கிறாள். கோயிலின் பின் பகுதியில் முனீஸ்வரன் வாயில் சுருட்டுடன் ஆறடி உயரத்தில் காட்சி தருகிறார். அதே சாலையில் இன்னும் கொஞ்ச தூரம் நடந்தால் இன்னும் இரண்டு அம்மன் கோயில்கள் வரும்.

ஆர்.வி. நகர் 69ஆவது தெருவில் ரங்கசாமி சித்தர் பீடத்தால் நிர்வகிக்கப்படும் அம்மன் கோயிலில் இரவு நெடு நேரம் வரை பூஜைகள் நடைபெறுவதுண்டு. வெள்ளிக்கிழமைகளில் பெண்கள் கூட்டம் மிகும். நூறு சதுர அடி இடத்தில்தான் சாலையை ஒட்டியபடி அம்மன் அமர்ந்திருக்கிறாள். கோயிலின் இடதுபுறத்தில் உள்ள ஒரு குறுகிய இடைவெளியின் வழியே உட்புகுந்து அம்மன் இருக்கும் இடம் நோக்கி மண்டியிட்டு வணங்குகிறார்கள் பக்தர்கள். இடைவிடாது கூடைகளிலிருந்து மலர் எடுத்துத் தூவித் தொழுதபடி இருக்கும் பூசாரிகள் பக்தர்கள் மீதும் ரோஜாப்பூக்களை வீசியபடி இருக்கிறார்கள். அக்கோயிலை ஒட்டி கோகுலம் பிராண்டு பேரீச்சம்பழ நிறுவனம் இயங்கி வருகிறது. அந்த நிறுவனத்தின் உரிமையாளர் இக்கோயிலின் புரவலர்களில் ஒருவர் என்கிறார்கள் அத்தெருவாழ் மக்கள்.

ஆர்.வி. நகர் 69A தெருவில் நுழைந்தவுடன் வலதுபுறத்தில் தமிழ்நாடு வீட்டுவசதி வாரியக் குடியிருப்பில் உள்ளடங்கி இருக்கிறது ஓர் அங்காள பரமேஸ்வரி கோயில். இக்கோயிலும் ஒரு 100 சதுர அடி அளவில் ஆறடி அம்மன் சிலையுடன் கூடியது. இந்த அங்காளம்மனுக்குத் தினமும் வழிபாடு நடத்தி வருவது சிவசங்கரி என்கிற திருநங்கை. இவரது சீடராகச் செயல்படுவதும் ஒரு திருநங்கைதான். வெள்ளிக்கிழமை மாலை 6 மணிக்கு டோக்கன் வாங்கி, சிவசங்கரியிடம் அருள்வாக்குப் பெறலாம். கூட்டத்தில் ஒருவராக இருந்து குறி கேட்கக் கட்டணம் ரூபாய் முந்நூறு. தனிப்பட்ட முறையில் ஒரே குடும்பத்தினர் பிரத்யேகமாக அருள்வாக்குப் பெற விரும்பினால் கட்டணமாக ஆயிரம் ரூபாய் செலுத்த வேண்டும். சில சினிமாகாரர்களின் வருகை அருள்வாக்குப் பெற வருவோர்களின் எண்ணிக்கையை அதிகரிக்கிறது. ஏவல், பில்லி, சூன்ய பிரச்சினைகளால் பாதிக்கப்பட்டுள்ளதாக நம்புவோரும் இக்கோயிலுக்கு வந்து தீர்வு காண விரும்புகிறார்கள்.

மாசி மாத அமாவாசை நாளன்று சிவசங்கரி தனது சீடர்கள் சூழ சைதாப்பேட்டை மயானத்திற்குச் செல்கிறார். அங்கு மகிஷன் உருவ பொம்மை செய்து அதன் குடலை உருவும் சடங்குகளையும் பூஜைகளையும் செய்துவிட்டு மீண்டும் ஊர்வலமாகக் கோயிலுக்கு வருகிறார்கள். தாரை தப்பட்டைகளின் சத்தத்தில் செவிப்பறை அதிரும். திருப்பதி குடைகளை ஒத்த சிறு குடைகளை ஏந்தி வருவார்கள். சிவசங்கரி அம்மாளின் வாயிலிருந்து அரக்குகலரில் ஒருசெயற்கை நாக்கு தொங்கியபடி இருக்கும். கழுத்து நிறையப் பூ மாலைகள் இருக்கும். பார்ப்பதற்குக் கொஞ்சம் அச்சமாக இருக்கும். கோயிலை அடைந்தவுடன் பக்தர்கள் சூழ்ந்துகொண்டு உரித்த தேங்காயை ஒவ்வொருவராகத் தருவார்கள். வாங்கும் தேங்காயை சாலையில் நின்றபடியே அங்காளம்மனுக்கு எதிரே ஓங்கி அடித்து உடைப்பார் சிவசங்கரி அம்மா. அக்கம்பக்கத்தில் இருப்பவர்கள் அம்மாவை வணங்கி அருள் பெற்றுச் செல்கிறார்கள். கோயிலை ஒட்டியபடி இருக்கும் சிறு அறையில் அங்காள பரமேஸ்வரியின் சின்ன விக்ரகம் உள்ளது. அங்குதான் சிவசங்கரி அருள்வாக்குச் சொல்கிறார்.

ஜாபர்கான்பேட்டையில் திருநங்கைகள் அதிக அளவில் தென்படுகிறார்கள். இவர்களில் பெரும்பாலோர் 1980களின் இறுதியில் திருநங்கைகளானார்கள் என்கிறார், இதே பகுதியில் பாசமிகு மருத்துவர் என்று பெயரெடுத்துள்ள மருத்துவர் மகமூத் பேகம். இந்தத் திருநங்கைகளில் பலர் கடப்பா நகரத்தில் இயங்கிய சில மருத்துவமனைகளில் தங்கள் பால் இன மாற்றத்துக்கான அறுவை சிகிச்சை செய்துகொண்டவர்கள் என்று சொல்கிறார்கள். அந்தச் சிகிச்சையில் ஏற்பட்ட குறைகளால் ஏதேனும் அவதிக்கு உள்ளாகும் திருநங்கைகளுக்கு பரிவுடன் மருத்துவம் பார்த்திருக்கிறார் ஆர்,வி, நகர் 72ஆம் தெருவில் வசித்து வந்த உருது பேசும் இஸ்லாமியரான மகமூத் பேகம். மருத்துவத்திற்கு மேலாக இன்சொல் பேசி இதமளிக்கும் மருத்துவராக இப்பகுதியின் எல்லாத் தரப்பு மக்களாலும் பாராட்டப்படுகிறார் மகமூத் பேகம். சிவசங்கரி, சிவசங்கரனாக இருந்த காலத்திலிருந்து ஆர்வி நகரின் பெரிதும் அறியப்பட்ட மருத்துவர் மகமூத் பேகத்திடம் ஐந்து நிமிடம் பேசினால் ஆயுள் பரியந்தம் அவருக்கு நீங்கள் அடிமை ஆவீர்கள்.

1980களில் ஜாபர்கான்பேட்டை நிழல் உலக மனிதர்களின் கோட்டை என்று அறியப்பட்டிருந்தது. அப்போது கிண்டியிலிருந்து அசோக் நகர் வர அடையாற்றின் மீது பாலம் கட்டப்படவில்லை. ஆற்றைத் தரைப்பாலம் மூலமே கடக்கவேண்டும். 100 அடி ரோடு போடப்படவில்லை. இரவில் ஆள் அரவமே இருக்காது. நடுநிசி அச்சமூட்டும். தனியாக வருவதற்குப் பயப்படுவார்கள். ஜாபர்கான் பேட்டையில் குடியிருக்க முன்வரமாட்டார்கள். அத்தகைய பகுதியில் இத்தனை அங்காளம்மன்கள் எப்படி நிலைபெற்றன. இங்கு மட்டும் இல்லை, சென்னை மாநகரின் விளிம்பு நிலை மக்கள் வாழ் இடங்கள் அனைத்திலும் காவல் தெய்வங்களாகப் பெண் தெய்வங்கள் அங்காளம்மன்களாகவும் மாரியம்மன்களாகவும் வழிபடப்பட்டு வந்துள்ளன. கிராமங்களில்கூட அடித்தட்டு மக்கள் வாழும் இடங்களில் காளி கோயில்களே அதிகம் உள்ளன. ஆனால், சிறுதெய்வக் கோயில்கள் வளர்ச்சி பெற்று வருவாயும் பெருகும்போது ஆகம கோயில்களின் வடிவமும் செயல்பாடும் பெற்றுவிடுகின்றன.







பூசாரிகள் மறைந்துபோகிறார்கள்.

சென்னை தம்புச் செட்டிதெருவில் உள்ள காளிகாம்பாள் கோயில், விஸ்வகர்மா இனத்தினரால் உருவாக்கப்பட்டு நிர்வகிக்கப்படுகிறது. அறங்காவலர் குழுத் தலைவராக இருப்பவர் பிரம்மஶ்ரீ EMS மோகன் ஆச்சாரி. அறங்காவலர்களாக பிரம்மஶ்ரீ சர்வேஸ்வரன் ஆச்சாரி, பிரம்மஶ்ரீ V சீனிவாசன் ஆச்சாரி, பிரம்மஶ்ரீ இரா. இராஜேந்திரகுமார் ஆச்சாரி, பிரம்மஶ்ரீ J.ரமேஷ் ஆச்சாரி ஆகியோர் செயல்பட்டு வருகின்றனர். பூஜைகள் சிவாச்சாரியார்களால் நடத்தப்பட்டு வருகின்றன. சத்ரபதி சிவாஜி 1677 ஆம் ஆண்டு அக்டோபர் மூன்றாம் நாள் இந்த ஆலயத்திற்கு வருகை புரிந்ததாக இக்கோயிலுக்குள் நுழையுமிடத்தில் ஒரு கல்வெட்டு பதித்து வைத்திருக்கிறார்கள். ஆனால், இந்நிகழ்வு குறித்த சான்றுகள் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் கட்டுக்கடங்காத கூட்டம் வரும். தரிசனத்துக்குக் கட்டணம் வசூலிக்காத கோயில். ஆனால், அசைவ வாசனையே வீசாத காளி கோயில்.

சைதாப்பேட்டை இளங்காளியம்மன் உயிர்ப்பலி கோரும்; பூசாரிகளால் பூஜிக்கப்படும். தம்புச்செட்டி தெரு காளிகாம்பாள் சந்நிதியில் சிவாச்சாரியார்கள் நிற்கிறார்கள். அங்கே ஆகம கோயிலுக்குள் நுழைந்த உணர்வே ஏற்படும்.

பெரம்பூர் லட்சுமி அம்மன் கோயில் தீமிதித் திருவிழாவில் சந்தனம் பூசிய முகத்துடனும் மேனியுடனும் மாலை புனைந்து கைகளில் வேப்பிலைக் கொத்துகளுடன் தீக் கங்கின்மீது நடந்து செல்கிறார்கள்; ஓடுகிறார்கள். தலையில் கரகத்துடன் அல்லது அலகு காவடியுடன் அல்லது வாயில் குத்திய வேலுடன் தீ இறங்குகிறவர்களையும் பார்க்க முடிகிறது. தீ மிதிப்போரில் நூற்றுக்குத் தொண்ணூறு சதவிகிதம் பாட்டாளி வர்க்கத்தினர் என்பது பார்வையிலேயே தெரிந்துவிடுகிறது. அர்ச்சகர்களோ கோயில் குருக்களோ சமூகத்தின் மேலடுக்குகளைச் சார்ந்தவர்களோ தீ மிதிக்க முன்வருவது என்பது அரிதான செயல். அவர்கள் எல்லாம் தீமிதித் திருவிழாவின் பார்வையாளர்களே.

கடந்த மார்ச் 24ஆம் தேதி (24.03.2024) எனது நண்பர் நாகராஜனுடன் பாடியநல்லூர் மொண்டியம்மன் நகர் வ.உ.சி. தெருவில் வசிக்கும் அவரது தந்தையாரைப் பார்த்துவிட்டு அந்த ஊர் அங்காள பரமேஸ்வரி கோயில் திருவிழாவைக் காணச் சென்றிருந்தேன். புழல் சிறைச்சாலையையும் புழல் ஏரியையும் கடந்து சென்றால் ரேவதி ஸ்டோர்ஸ் என்ற பெரிய துணி மாளிகை கண்ணில் படும். சென்னையில் உள்ள ஒரு பெரிய துணிக்கடை அதிபரின் சம்பந்தியாம் ரேவதி ஸ்டோர்ஸ் உரிமையாளர். அதற்குப் பிறகு சில 'பாயா' கடைகள் இருக்கின்றன. பாடியநல்லூர்காரர்கள் பாயா பிரியர்களாக இருக்கலாம். பிறகு இடதுபுறம் செல்லும் சாலை மொண்டியம்மன் நகருக்கு இட்டுச் செல்கிறது. போகும் வழியில் இருக்கும் ஒரு சிறிய கோயில் மொண்டியம்மன் கோயில் என்று அழைக்கப்படுகிறது. அதற்கு அடுத்து வருவது வ.உ.சி. தெரு. ஒரு கார் நிறுத்தும் அளவிற்கு மட்டுமே தெருக்கள் இருக்கின்றன. வ.உ.சி. தெருவில் நுழைந்து நீண்டு கிடக்கும் அதன் மறு கோடிக்குச் சென்றால் அகன்ற மைதானம் போன்ற இடத்தில் புழல் ஏரிக்கரையில் ஓர் ஆலமர நிழலில் முனீஸ்வரன் கோயில் ஒன்று உள்ளது. அங்கிருந்து தீச்சட்டி ஏந்தியபடி கூட்டம் கூட்டமாக, சாரை சாரையாக அம்மன் பக்தர்கள் வந்துகொண்டே இருக்கிறார்கள். ஆண்களும் பெண்களும் தீச்சட்டி ஏந்தினாலும் பார்ப்பதற்கு ஆண்கள் ஆண்களாக இல்லை. தீச்சட்டியின் அளவும் ஒரு சிறிய அண்டாவை ஒத்திருக்கிறது. ஆண்கள் கால்களில் சலங்கை கட்டியிருக்கிறார்கள். சிலர் பரத நாட்டியம் ஆடுபவரைப் போல உடை அணிந்திருக்கிறார்கள். நெஞ்சிலும் முகத்திலும் சந்தனப் பூச்சு. அதன்மேல் அங்கங்கே குங்குமத் தீற்றல். இரு தோள்களிலும் வேப்பிலைக் கொத்துகள். கழுத்து நிறைய, குறைந்தபட்சம் மூன்று மாலைகள். மீசை சிரைக்கப்பட்ட முகம். புல்லாக்கு அணிந்த

மூக்கு; காதில் தோடு; மையிட்ட புருவம்; ஆண்டாள் கொண்டையுடன் சிகை ஆங்காரம். உடற்கட்டில் மட்டும்தான் ஆண்பாவம். ஒரு தீச்சட்டி ஏந்தியைச் சுற்றிப் பத்து இருபது பேர் உடன் வருகிறார்கள். காது கிழிய டிரம் அடிக்கும் பேண்ட் கோஷ்டியில் குறைந்தபட்சம் அறுவர். தீச்சட்டி ஏந்தியவர் பேண்ட் சத்தத்திற்கு ஏற்ப உக்கிரமாக ஆட்டம்போடுகிறார். ஒருவர் கற்பூர தீபம் காட்டி வருகிறார். வந்து வணங்கும் தெருவாசிகளுக்கு விபூதியோ குங்குமமோ அளித்து ஆசிர்வதிக்கிறார் தீச்சட்டி ஏந்தி. களைப்படைகிறபோது அங்கங்கே போடப்படும் மடக்கு நாற்காலிகளில் தொடைமீது தீச்சட்டியை வைத்துக்கொண்டு அவர் இளைப்பாறுகிறார். அப்போது தீச்சட்டிக்காரரின் மிடுக்குக் ஒப்பாராய் டாடா பிர்லா, அம்பானி வம்சத்தினரைக் கூட நிறுத்த இயலாது,

பார்த்துக் கொண்டிருக்கும் நம்மை ஒரு தீச்சட்டிக் குழு கடந்து போனால், அடுத்த குழு 50 மீட்டர் தூரத்தில் கண்ணில் படுகிறது. சிலர் வாய் வழியே ஒரு கம்பியைச் செலுத்திக்கொண்டு செல்கிறார்கள். கம்பியின் இருபுறமும் வளைந்து சுருள் சுருளாக இருக்கிறது. சுருளின் முனையில் வேல் பொருத்தப்பட்டிருக்கிறது. ஒரு குழுவில் ஒரு பெண், சாமி வந்து ஆடிக்கொண்டே போகிறாள். ஒரு குழு உடல் முழுவதும் பச்சை வண்ணத்தையோ நீல வண்ணத்தையோ பூசிக்கொண்டு நாடக நடிகர்கள் போலத் தீச்சட்டி ஏந்திச் செல்கிறார்கள். இந்தத் தீச்சட்டி அணிவகுப்பு இழையறாது வந்துகொண்டே இருக்கிறது. டிரம் அடிப்பவர்கள் மட்டும் ஆயிரம் பேருக்குக் குறைவிருக்காது.

இந்தத் தீச்சட்டிக் குழுக்கள் வ.உ.சி தெரு வழியாக ஒரு கிலோ மீட்டர் தொலைவில் இருக்கும் அங்காள பரமேஸ்வரி கோயிலுக்குச் செல்கிறார்கள். இன்னொரு இடத்திலிருந்து தலைக்கு மேல் முளைப்பாரி ஏந்திய பெண்கள் வரிசையாக வருகிறார்கள். போகும் வழியில் பொருட்காட்சி நடைபெறுகிறது. ராட்சச ராட்டினங்கள் சுழன்றுகொண்டிருக்கின்றன. இரண்டு மணி நேரத்திற்கு மேலாக நாங்கள் இந்தத் திகில் நிறைந்த காட்சிகளைப் பார்த்துக் கொண்டிருந்தோம். இந்த ஆண்டு நடைபெறுவது 59ஆவது தீமிதி விழா.

பாடியநல்லூர் கோயிலை உருவாக்கியவர்கள் இங்கு வந்து குடியேறிய பர்மா அகதிகள். பர்மாவில் இதேபோல ஓர் அங்காளம்மன் கோயில் இருக்கிறதாம். அங்கு விழா நிகழும் அதே நாளில் பாடியநல்லூரிலும் தீமிதி நிகழுமாம். தெலுங்கு பேசும் தமிழர்கள், முக்குலத்தோர் நிறைந்த இப்பகுதி தீமிதி நாளில் பக்திப் பரவசத்தில் மூழ்கிக் கிடக்கிறது. 4 மணிக்கு நடைபெறும் தீமிதிக்காகச் சவுக்குக் கட்டைகள் நான்கடி உயரத்திற்குக் குவிக்கப்பட்டு தீமூட்டப்பட்டு எரிந்துகொண்டிருந்தன. திகிலில் நெஞ்சம் தஞ் சமடைந்திருந்ததால் சுட்டெரிக்கும் வெயிலை உணரவில்லை.

புலம் பெயர்ந்தவர்கள் குலதெய்வக் கோயிலிலிருந்து பிடிமண் எடுத்துவந்து ‘வாழும் ஊரில்’ வழிபாடு செய்வது என்பதை பர்மாவிலிருந்து பாடியநல்லூருக்கு வந்திருக்கிற அங்காளம்மன் வழிபாடு உணர்த்துகிறது. தென் தமிழகத்து மக்களிடம் இந்த ‘பிடிமண்’ கலாசாரம் வேர்பிடித்து நிலைத்திருக்கிறது. பிடிமண் பண்பாடு குறித்து மேலும் அறிய பேராசிரியர் ஆ.சிவசுப்பிரமணியன், தோழர் நல்லக்கண்ணு போன்றவர்களிடம்தான் கேட்க வேண்டும்.

தற்போது சென்னை மாநகரத்தில் கிராமிய உணவுகள் மட்டுமல்ல, கிராம தெய்வங்களும் புலம் பெயர்ந்து குடியேற ஆரம்பித்திருக்கிறார்கள். கருப்பண்ண சுவாமிக்கு ஆழ்வார் திருநகரில் ஓர் ஆலயம் கட்டியிருக்கிறார்கள். திரைப்படத் துறையில் ஸ்டண்ட் மாஸ்டராக புகழ்பெற்று நிலைத்து நிற்கும் கனல்கண்ணன் இயல்பு வாழ்க்கையில் ஒரு பூசாரியாகவும் இருக்கிறார் என்றால் நம்ப முடியுமா? உண்மையில் அவர் ஓர் இந்து மதப் பற்றாளர். இந்து முண்ணனி இயக்கத்தின் மாநில கலை பண்பாட்டுப் பிரிவின் செயலராகப் பணியாற்றி வருகிறார். ‘ஸ்ரீரங்கம் ரங்கநாதர் கோயிலுக்கு முன்பாக அமைந்துள்ள பெரியார் சிலை உடைக்கப்படும் நாளே இந்து மத எழுச்சி நாள்’ என்று பேசியதால் அவர்மீது வழக்குத் தொடரப்பட்டது. ஒரு கிறித்துவ மத போதகர் குறித்து காணொளி ஒன்றைப் பதிவிட்டதால் கைது நடவடிக்கைக்கு ஆளானவர். கனல் கண்ணன் சென்னை மதுரவாயில் கிருஷ்ணா நகரில் சுடலை மாடனுக்கும் இசக்கியம்மனுக்கும் ஒரு கோயில் கட்டியிருக்கிறார். தெய்வத் திருவுருவங்களுக்கு அவரே வழிபாடும் செய்கிறார். ஒவ்வொரு மாதக் கடைசி வெள்ளிக் கிழமையிலும் கிடா வெட்டி அன்னதானம் செய்து வழிபாடு நடைபெறுகிறது. நெல்லைக்காரர்களுக்குச் சுடலைமாடனும் இசக்கியம்மனும் குலதெய்வங்களாகவோ இஷ்டதெய்வங்களாகவோ இருக்கும் என்பதால் சென்னைவாழ் நெல்லைவாசிகள் மதுரவாயலுக்கு வந்துபோய்க் கொண்டிருக்கிறார்கள். மேற்கு மாம்பலம் உமாபதி தெரு விரிவில் கல்கத்தா காளி இடம் பெயர்ந்து காட்சித் தருகிறாள். கோயிலும் பார்ப்பதற்கு வங்காள கோயிலாகத் தெரிகிறது. கோயிலில் வழிபாடும் கல்கத்தா வழிபாடாகவே இருக்கிறது.

யாதுமாகி நின்றாய் காளி
எங்கும் நீ நிறைந்தாய்
-மகாகவி பாரதி

(தொடரும்)

சந்தியா நடராஜன் <sandhyapathippagam@gmail.com>

# முயங்கொலிக் குறிப்புகள்

**கயல்**

ஓவியம்: **நடேஷ்**



## 33. முதுவேனில்

அவள்:
சரக்கொன்றை இறைந்துகிடக்கும்
சாலையொன்றைக் கடந்துதான்
நீ வந்திருக்கவேண்டும்
பொன்னந்தி பொலிகிற புன்னகையோடு
அப்பூக்கள்தான்
உன் உதடுகளில் என் பெயரை முணுமுணுக்கச் செய்திருக்கும்.
இல்லாவிட்டால் என்னை நினைத்திருப்பாயா என்ன?

அதுவும்போக
நனைந்திடக் காத்திருக்கும்
நெய்தற் பூவினைப்
பஞ்சுபோல ஒற்றியெடுக்கிற மென்மையுனக்குப் பழக்கமில்லாதது.

காற்றுக்குப் புரண்டு தவிக்கும்
சிற்றகலின் தாளகதியில்
தோலிசைக் கருவி
மீட்டும் பாணன் நீ



அவன்:
சுட்டு விரலின் சொடுக்கலில்
கொட்டிக் கிடக்கிறது இன்பம்
கோடி வகைகளில்
பலப்பல வண்ணங்களில்
அதற்காகவெல்லாமா உன்னை நான்
அன்பே என்றழைத்து
உன் அண்மையை
நாடி ஒவ்வொரு முறையும் ஓடோடி வருகிறேன்!

சமுத்திரத்தோடு இருந்தாலும் பிரிந்தாலும்
சங்கு முழக்கும்
அலையோசை
உன் மீதான என் பித்து.
இது புரிய

நேசத் தோணியின் துடுப்பெடுத்து
காலக் கடலின் மறுகரைவரைபோய்
உனக்கும் எனக்குமான
உறவின் ஜென்ம ஜென்மாந்திரக் கதைகளைக்
கடற்பறவைகளின் பாடல்களில்
நீ
கேட்டுத் திரும்பலாம் தேவி!

அவள்:
அதெல்லாம் அவசியமில்லை.

இத்தனை பொழுதில்
எத்தனை பகல்கள்!

ஏதேனும் ஒன்றிலாவது கண்டிருக்கலாம்
இடம் சுட்டி விளக்கவேண்டும்
என்னுடலில் ஒற்றை மச்சத்தின் இருப்பை.

பிறகு நாம் குறிக்கலாம்
இன்றைய நல் யாமத்திற்கான
முகூர்த்தம்.

அவன்:
மச்சமா?
யட்சியின் அழகை
பூரணமாக யார் கண்டார்?
கண்டவர் விரித்துரைக்கவும் ஆகுமோ?

ஆயினும் இது கேள் ப்ரியை!

உன் மீதான உன்மத்தத்திற்கான காரணம்

துயர் சூழ் உலகெனும்
அடர் வனத்து இருள் நடுவே
அணையாத அழகுடன்
நீ சுடர்கிறாயே அதனாலா,
இல்லை!

மொக்குக்குள் ஒளிந்திருக்கும்
பூவின் பூரணமாய்
என் வாழ்வின் நிறையென்பது
இந்த மொத்த உலகின்
பேரமைதியை ஏந்தியிருக்கும்
உன் மடியில் சரணடைவதில்தான் உள்ளது,
என்பதுவா காரணம்,
இல்லை!

துரோகங்களின் அறுவடையில்
நான் தளர்ந்துகிடக்கையில்
அள்ளி முத்திட்டு
ஆறுதல் அளித்த
என் மீத வாழ்வின் திசைமானி நீ
என்பதாலா,
இல்லை!

இனி பாராமலேயே போகலாம்
என்றாலும்
யாராலும் பொருட்படுத்தப் பெறாமல்
வீதியோரம் நிற்கிற எனக்காக
உன் கண்ணில் எப்போதும் திரண்டு நிற்கும் காதல்
ஆனால்
அதுமட்டுமே காரணமில்லை!

அவள்:
போதும்! போதும்!
நான் கேட்டது என்ன?
நீ சொல்வது என்ன?

சரி
அது போகட்டும்
அந்தக் காரணத்தையாவது சொல்

அவன்:
ஒன்று சொல்லவா...
காரணங்கள்
என்று ஏதுமிருந்தால்
அது எப்படியடி
காதலாகும்?

அவள்:
ம்ம்...

(தொடரும்)

கயல் <dr.kayalvizhi2020@gmail.com>

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.**

**Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**
**Editor : PRABHU THILAAK**

